# ஓங்குக உலகம்

பேராசிரியர் அ.மு. பரமசிவானந்தம்
நிறுவனர், வள்ளியம்மாள் கல்வி அறம்
சென்னை-102



வள்ளியம்மாள் கல்வி அறம்
F. 40, முதல் பெருந் தெரு
அண்ணாநகர் கிழக்கு
சென்னை-102

# முன்னுரை

நான் என் வாழ்வில் வளமளித்த தமிழன்னையை மறவாது போற்றுகின்றேனாயினும், என் அன்னையின் பெயரால் கல்வி அறம் அமைத்து, சென்னை அண்ணாநகரில் என் கல்விப் பணியினைத் தொடங்கியபிறகு அத் தமிழ் உலகை விட்டே நெடுந்தூரம் சென்றுவிட்டதாக நினைத்தேன். எழுபத்தைந்து நூல்களுக்கு மேல் எழுதி அன்னைத் தமிழுக்கு ஆரம் சூட்டி மகிழ்ந்த நான், பெற்ற அன்னைக்கு உற்ற பணி செய்யத் தொடங்கிய பிறகு நூல்கள் எழுதவுமில்லை—வெளியிடவுமில்லை. வெளிநாடுகளுக்குச் சென்றது பற்றிய ஒரு நூலும் (ஏழு நாடுகளில் எழுபது நாட்கள்) பள்ளியின் வளர்ச்சி பற்றிய ஒரு நூலும் (திரும்பிப் பார்க்கிறேன் திகைத்து நிற்கிறேன்) அண்மையில் வெளிவந்தன. என் நூல்களுள் சில பாட நூல்களாக அமைய அவற்றின்வழி பெற்ற பொருளே இவ்வறத்துக்கு மூலப் பொருளாக அமைந்தது என்பதை நான் பலமுறை சுட்டியிருக்கிறேன்.

சென்ற ஆண்டிலே நான் குவித்து வைத்திருந்த பழந் தாள்களையெல்லாம் பகுத்துப் பார்க்க நேரம் கிடைத்தது. நான் பல ஆண்டுகளில் பேசிய பேச்சுக்கள் (நான் பெரும்பாலும் பேசுவதையெல்லாம் எழுதிவைக்கும் வழக்கம் உடையவன்), பல இதழ்களுக்கு எழுதிய எழுத்துக்கள் என் கையகப்பட்டன. அவற்றை பகுத்துப் பார்க்கும்போது என் மாணவர் ஒரிருவர் உடனிருந்தனர். அவர்கள் இக்

கட்டுரைகளையெல்லாம் கண்டு, 'தாங்கள் புதிதாக எழுதாவிட்டாலும் இவைகளைத் தொகுத்து நூலாக்கலாமே' என்றனர். அதுவும் சரி என்றே எனக்கும் பட்டது. உடனே சிலவற்றை ஆய்ந்து எடுத்துத் தொகுக்க நினைத்த போது சில அடிப்படைகளைக் கொண்டேன். கட்டுரைகளில் சிறிய அளவில் உள்ளவற்றை ஒரு நூலாகவும், பெரியவற்றை வேறு நூலாகவும் அமைக்கலாம் எனக் கருதினேன். அக் கருத்தின்வழியே இச் சிறு நூல் வெளிவருகின்றது.

இதில் இருபத்தைந்து கட்டுரைகள்—வெவ்வேறு காலங் களில் எழுதியவை—பேசியவை இடம் பெறுகின்றன. அனைத்தும் அளவில் சிறியனவாகவே உள்ளன. எனினும் 'காகிதம் செய்வதிலும் அச்சுக் கலையிலும் சீன நாட்டின் பங்கு' என்ற கட்டுரை பெரியதாக—பதினாறு பக்க அளவில் நீண்டுள்ளது. இக் கட்டுரை எப்பொழுது—எதற்காக எழுதினேன் என்பது நினைவில் இல்லை. மேலும் இது யாருக்காகவோ ஆங்கிலத்திலிருந்து மொழி பெயர்க்கப் பெற்ற ஒன்று எனவும் நினைக்கிறேன். எனவே இது என் உள்ளத்தெழுந்தது எனக் கூற முடியாது. மற்றவை அனைத்தும் அளவில் சிறியனவாகவே உள்ளன.

நான் ஆயுள் எல்லையில் முக்கால் நூற்றாண்டைக் கடந்து வாழ்கின்றவன். ஒருகால் அரசியலில் பங்கு பெற்று, தேர்தலில் வெற்றி பெற்றவன். 1937இல் இராஜாஜி முதலமைச்சராக இருந்த காலந்தொட்டு நாடாண்ட நல்லவர்களையெல்லாம் ஓரளவு அறிந்தவன். பச்சையப்பன் கல்லூரிக்கு வந்தபின் (1944) நான் முற்றும் அரசியலை விட்டு விலகினேன் என்றாலும், அரசியல் தலைவர்கள்—முதல்வர்களோடு தொடர்பு எப்படியோ இருந்துவந்தது. எனவேதான் இதில் நான் பழகிய முதல்வர்கள் பற்றிய கட்டுரைகள் இடம் பெறுகின்றன. அப்படியே நான் அறிந்த பெரும்புலவர் இருவர் இங்கே இடம்பெற்றுள்ளனர்.

என்னை அணைத்து வளர்த்த பச்சையப்பரும் உடன் உள்ளார்.

இந் நூலினை 'சமுதாயம்', 'நாட்டின் நலம் கண்டவர்', 'ஆய்வு நெறி', 'இலக்கியநெறி' என்று நான்கு பிரிவாகப் பாகுபடுத்தி மொத்தம் இருபத்தைந்து கட்டுரைகளை இதில் இணைத்துள்ளேன். அவற்றுள் முதல் கட்டுரையாக உள்ள 'ஓங்குக உலகம்' என்ற பெயரையே இந்த நூலின் பெயராகவும் அமைத்துள்ளேன். கட்டுரைகள் பெரும்பாலும் உலக சமுதாய வளர்ச்சிக்கும் மக்கள் வாழ்வின் வளர்ச்சிக்கும் உறுதுணையாக உள்ளமையாலும், அத்தகைய வளர்ச்சிக்கு வழிவகுத்துச் செயலாற்றியவர் வாழ்க்கை பற்றிய குறிப்புகள் உள்ளமையாலும், ஒருசில வருங்கால 'உலகுக்கு வழிகாட்டியாக—ஓங்க உதவுவனவாக உள்ளமையாலும் 'இப்பெயர்' இந்நூலுக்குப் பொருந்தும் என்றே எண்ணுகிறேன்.

பொதுவாக உலக நெறியும்—சிறப்பாகத் தமிழ் நெறியும் இக் கட்டுரைகளில் காட்டப் பெறுகின்றன. மொழி தோன்றிய நாள் தொட்டு—மனிதவாழ்வு மலர்ந்த நாள் தொட்டு எல்லா நீதிகளையும் நெறிமுறைகளையும் கற்றும் கேட்டும் மற்றவர்களுக்கு உணர்த்தியும் நின்ற—நிற்கின்ற மனிதன்—எல்லாவற்றையும் கண்டுவிட்டோம் என ஏமாக்கும் மனிதன்—சற்றே நின்று, நினைத்து, சென்ற காலத்தையும் வருங்கால நிலையையும் எண்ணுவானாயின் திருந்த மாட்டானா என்ற உள்ளக் குமுறலோடு ஒருசில கட்டுரைகள் இதில் இடம் பெற்றுள்ளன. வையத்துள் வாழ்வாங்கு வாழ மனிதன் பின்பற்ற வேண்டிய வாழ்வியல் நெறி—ஆட்சி நெறி—சமுதாய நெறி பற்றிய கட்டுரைகளும் இடம் பெற்றுள்ளன. எனவே 'ஓங்குக உலகம்' என்ற பெயர் வழியே வெளிவரும் இந்நூல் ஓரளவாயினும் சமுதாய உயர்வுக்கு—வாழ்வுக்குப் பயன்படும் வகையில் வழிகாட்டி யாக அமையும் எனஎண்ணுகிறேன். கற்போர் முடிவு செய்வார்களாக!

பல ஆண்டுகளுக்கு முன்பு—பலவகை நிலைகளில் எழுதப் பெற்றமையின் இக் கட்டுரைகளில் தொடர்ச்சியான பொருள்நிலை இல்லை. எனினும் அனைத்தும் உலகம் சிறக்க—ஓங்க—உயர வழிகாட்டுவனவேயாம்.

இந்நூல் அச்சிடுங்காலை இதனைக் கண்டு அச்சுப் பிழைகளை ஒப்பு நோக்கித் திருத்தி உதவிய பச்சையப்பர் கல்லூரியின் தமிழ்ப் பேராசிரியர் சா. வளவன் அவர்களுக்கு என் நன்றி உரித்து.

தமிழ்க்கலை இல்லம்
சென்னை-30
14—4—90

பணிவுள்ள,

அ. மு. பரமசிவானந்தம்

# உள்ளே....

# 1. சமுதாயம்

## 1. ஓங்குக உலகம்

பேராரவாரம் - அஞ்சத்தக்க தோற்றம்—இவற்றுக் கிடையிலே பலவகையான குரல் ஒலிகள்—காட்டின் சூழ்நிலை இவை என் உறக்கத்தைக் கலைத்தன. கண்ணைக் கசக்கிக்கொண்டு எழுந்தேன். நல்லவேளை நான் என் வீட்டில் உட்கார்ந்திருப்ப துணர்ந்தேன். கோடையின் வெம்மை தாங்கமாட்டாது மே மாத இடையில் சென்னையில் வருந்தும் பல லட்சமக்களுள் யானும் ஒருவன் என்பதும், நான்கண்ட சூழ்நிலை, கேட்ட குரல்கள், பிற தோற்றநிலைகள் அனைத்தும் கனவிடைப் பெற்றனவே என்பதும் உணர்ந்தேன். கனவெனினும் அச் சூழ்நிலை என்னை அஞ்சவைத்தது—எனவே அதுபற்றி எண்ணினேன். கனவு நினைவிலே நிழலாடத் தொடங் கிற்று. கண்டது இதுதான்,

கொடிய காடு—வளமார்ந்த காடு. பல்வேறு வகைப் பட்ட விலங்குகளும் பறவைகளும் பெருமாநாடு நடத்தின. அவற்றுள் பலவற்றை நான் கண்டதே கிடையாது. அத்துணை அளவில் விலங்குகளும் பறவைகளும்—அவை வனவிலங்குவாரம் கொண்டாடினவோ என நினைத்தேன். எப்படியோ அவற்றினிடையில் நான் சிக்கினேன். அவை என்னை ஒன்றும் செய்யவில்லை என்றாலும், மனித

விலங்குகளிடம் அகப்பட்டு அல்லல் உற்று உழன்ற எனக்கு, அவையும் ஊறு செய்யுமோ என அச்சம் உண்டாயிற்று. மாநாட்டில் அவை ஏதேதோ பேசின: எனக்கு அவற்றின் மொழி புரியாவிட்டாலும் நிச்சயமாக அவை மொழிகள் பற்றிச் சண்டையிட்டு மடியவில்லை—மடியத் தயாராக இல்லை என்பது மட்டும் நன்கு விளங்கிற்று. அவை கூடிய மாநாட்டின் அடிப்படையும் அவற்றின் பேச்சுக்களின் சாரமும் ஒருவாறு விளங்கின—ஒருவேளை கனவிடையிலேயே இருந்திருப்பின் அவை இன்னும் நன்கு விளக்கம் பெற்றிருக்கும். எனினும் இந்த மனித வேறுபாட்டிற்கு இடையே நினைவுபெற்ற எனக்கு, அவற்றின் ஒருமை உணர்வு பற்றிய பேட்டிகள் முழுதும் நினைவில் இல்லை. ஒருசில உள்ளன. அவற்றை மட்டும் இங்கே கூற நினைக்கிறேன்.

விலங்கினங்களும் பறப்பனவும் ஊர்வனவும் பல லட்சக்கணக்கில் வேறுபட்டனவாயினும், அவை அனைத்தும் தோற்ற நாளில் ஒரே மூலக் கூறுபாட்டின் அடிப்படையில்—கூர்தல் அற நெறியில்—தோன்றின என்ற உண்மையை உணர்ந்து, அனைவரும் ஓரினம்—அனைத்தும் ஒரு குலம்—என்ற மெய்ம்மையாம் வாழ்க்கை வாழ வேண்டுமென மாநாட்டில் தீர்மானம் நிறைவேற்றின. அதுபற்றிப் பேசிய பல—நடக்கும்—பறக்கும்—ஊரும் உயிர்கள் மனிதனைப்பற்றி—அடிக்கடி பேசிய சொற்கள் நினைவில் நின்றன.

மனிதனைப்போல மேடைமேல் பேசிவிட்டு வாழ்க்கையில் மறக்கக்கூடாது என்றும், ஒன்றிய சமுதாயம் என்று சொல்லிக்கொண்டே சாதி பற்றியும் சமயம் பற்றியும் நீதி பற்றியும் நிறம் பற்றியும் மொழி பற்றியும் புதுப்புதுக் காட்சிகளையும் சபைகளையும் நாடுகளையும் அமைத்துக்

கொண்டே சென்று படுகுழியில் விழக்கூடாது என்றும், புறத் தோற்றத்தாலும் உணவு, வாழ்வுமுறை முதலிய எல்லா வகைகளிலும் அவை வேறுபட்டவையாயினும் தோற்ற மூலக்கூறு ஒன்றேயாதலால் அந்த உடன் பிறப்பு உணர்விலேயே ஒன்றிவாழ்வதே தம் கடமை என்றும் அவை விளக்கிப் பேசின. அவற்றிற்கு உண்மையில் எந்த வேறுபாடும் இல்லையல்லவா! மேலும் தேவையற்றவற்றிற் கெல்லாம் சிறு சிறு சண்டைகளை உண்டாக்கி—பின் பெரும் போர் விளைக்க வித்திட்டு, அப்பெரும் போரில் உடன் பிறந்த மக்களையே கொன்றுகுவிக்க விதவிதமான குண்டுகள் செய்யும் அநாகரிக மனிதன், தம் இனத்திலிருந்து — விலங்கினத்திலிருந்து — பிறந்தானே என்று வருந்தி, அவ்வினத்தவன் திருந்த வேண்டுமெனக் கேட்டுக்கொண்டு ஒரு தீர்மானமும்—அவ்வாறே திருந்தா விடின் தாமே இயற்கைச் சூழலை உருவாக்கிக் கொடுமை நிறை உலகாக இதை ஆக்குவதைக்காட்டிலும் இவ் வுலகையே அழிக்கத் திட்டமிட வேண்டுமென ஒரு தீர்மானமும் நிறைவேற்றின.

இவை போன்று இன்னும் எத்தனையோ தீர்மானங் களும் பேச்சுக்களும் கடைசியாக 'கூட்டத்தில் கூடி நின்று கூடிப் பிதற்றல் இன்றி நாட்டத்தில் கொள்ளவேண்டும்' எனவும் அவ்வாறு கொள்ளாதவர் உயிரினத்திலிருந்தே ஒதுக்கப்படத்தக்கவர் எனவும் உணர்வுத் தீர்மானம் உருவாயிற்று. இவ்வாறு பல நினைவுக்கு வந்தன. எனினும் இவை அனைத்தும் கனவிடைக் கண்டன. ஆனால் அவை நனவிடைவரும்போது—அதுவும், உடன் பிறப்பால் ஒன்றி யும் உளத்தால் மாறுபட்டும் வாழும் மனிதனோடு வாழும் நனவு உலகில் வரும்போது நமக்கும் அவற்றிற்கும் உள்ள தூரமும் வேறுபாடும் தோன்றாமல் போகுமா? ஆம்! மனித உணர்வோடு வாழவேண்டிய மனிதன் விலங்காகிக்

கொண்டே வரும்போது, பாம்பும் பல்லியும் சிங்கமும் புலியும் வல்லூறும் கழுகும் பிற விலங்குகளும் பறவைகளும் ஒன்றிய மனித உணர்வு பெறுகின்றன.

இதனால்தானோ மனித வாழ்வில் முன்னோடிகளாக வாழ்ந்த பல நல்லவர்கள் பாம்பையும் கருடனையும் பிறவற்றையும் தெய்வங்களாக வணங்கினார்கள் என நினைத்தேன். மண்ணுலகை மட்டுமின்றி விண்ணுலகைச் சாடி அனைத்தையும் தனதாக்கிக்கொள்ள நினைக்கும் மனிதன், தன்னுடன் தன் வீட்டில் உள்ளவனோடே மாறுபட்டுக் கலாம் விளைத்துக் கெடும்போது 'இந்த உலகம் வாழுமா! ஓங்கி உயருமா! என எண்ணி அறிஞர்கள் கவலை கொள்ளுகின்றனர். நான் கண்டது கனவாயினும் இன்றைய மனிதனின் போக்கு, இக்கனவை நனவாக்கி மனிதன் விலங்கினும் கேடாய்க் கெட்டொழிவான் என்பதைக் காட்டுகின்றதே, ஒரே உலகம்—ஒரே சமுதாயம்—ஒரே இனம் என்ற உணர்ச்சி அரும்ப வேண்டும் என்று மேடைமேல் முழங்கும் தலைவர்கள் பலரும் தனித்தனி வகுப்பறைகள் அமைத்துக் கொண்டு அதில் வாழத்தானே திட்டம் தீட்டுகின்றனர். இந்த 'உள்ளத்தே கொடுமை வைத்து—கூட்டைவாளா ஓம்பும்' கொடிய மனிதனைக்காட்டிலும் பாம்பும் பிறவும் பலமடங்கு உயர்ந்தன அல்லவோ! ஆம்! மனிதன் செய்யத் தவறிய ஒருமை உணர்வினை—ஒரே உலக நெறியை—விலங்குகளும், பிறவும் செய்யத் தொடங்கும் காலம் வந்தாலும் வரலாம் அல்லவா என்ற உணர்வே என் உள்ளத்தில் பிறந்தது. அந்த நாள் வருமுன் மனிதன் திருந்தினால் உய்தி உண்டு. இன்றேல்......

**1965 'உலகம்'**

# 2. நாடு நலமுற

'எல்லாரும் இன்புற்றிருக்கும்' சமுதாய வாழ்வுக்கு அன்றுதொட்டு இன்றுவரை உலகுக்கு வழிகாட்டிவரும் நாடு நம் பாரதநாடு. 'பாரத நாடு பழம்பெருநாடு, பார்டுவம் இதனை எமக்கிலை ஈடு' என்று பாரதி எக்களித்துப் பாடி இதன் பெருமையை விளக்கினார். வரலாற்றுக்கு முந்திய காலந்தொட்டு, இன்றுவரை எத்தனையோ அறிஞர்களும், அறிவர்களும், தவசிகளும், தம்மைப்போல் பிறரை ஒத்துநோக்கி உலகை ஓம்பிக் காத்த சான்றாண்மை மிக்கவர்களும் நம் நாட்டில் தோன்றி நாட்டையும் உலகையும் நடத்திச் சென்றனர். அவர்கள் சொல்லிச் சென்ற—எழுதிச் சென்ற—பல சாத்திரங்கள் என்றென்றும் உலகுக்குப் பல உண்மைகளை உணர்த்திக் கொண்டே இருக்கின்றன. ஆன்மீக நெறியில் மட்டுமன்றி, சமுதாய வாழ்க்கை நெறி, அறிவியல் நெறி ஆகிய பல வழிகளிலும் அவர்தம் எழுத்துக்கள் அமைகின்றன. இன்றைக்கு ஆயிரம் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன் நம் நாட்டுச் சான்றோர்கள் கூறிச் சென்ற பல சமுதாய அறிவியல் கருத்துக்கள் இன்று உலகவாழ்வில் மெய்ம்மையாக்கப் பெறுகின்றன. மேலைநாட்டுப் பொருட்காட்சிகளில் நம் நாட்டுப் பழம்பெரும் எழுத்துக்கள் உண்மையாக்கப் பெறுவதைக் காண்கின்றோம். (நம்மை நாம் அறியாத காரணத்தாலேயே இன்று, எதைஎதையோ புதுமைகளாக எண்ணிப் பூரிப்படைகின்றோம்) இத்தகைய பழம்பெரும் பாரதபூமி வற்றா வளமும் வணங்கா உரமும் கொண்டு வாழ்ந்த நாட்கள் பலப்பல. ஆனால் இடைக்காலத்தில் ஒருசில நூற்றாண்டுகள் அந்நியர் ஆதிக்கத்தில் அடிமைப்பட்டு உழன்று அவதி

யுற்ற நிலையில்—அந்த அவலத்தைப் போக்கி, கோடானு கோடி மக்களின் கண்ணீரைத் துடைத்த பெரும் நிறுவனமே காங்கிரஸ் (இன்று நாட்டில் உள்ள பிற அனைத்தும் அதன் கிளைகளே எனலாம்.) ஆம்! இன்று அதன் நூற்றாண்டு விழா சிறப்பாக நடைபெறுவதறிந்து யாவரும் மகிழக் கடமைப்பட்டவராவார்கள்.

இந்திய நாடு சுதந்திரமடையத் தம் வாழ்வையும் வளத்தையும் செல்வத்தையும் சிறப்பையும் விட்டும் நாட்டுக்குத் தந்தும், தம்மையே தியாகம் செய்த எத்தனை எத்தனையோ பெரியவர்கள் என் கண்முன் நிற்கின்றனர். அண்ணல் காந்தி அடிகளார், 'தாழ்வொடு வறுமை மிஞ்சி விடுதலை தவறிக் கெட்டு, பாழ்பட்டு நின்ற பாரத தேயத்தை வாழ்விக்க' வந்த காட்சி மறக்கொணாக் காட்சியன்றோ? இன்றைக்கு ஐம்பத்து இரண்டு ஆண்டு களுக்கு முன் அண்ணலார் தமிழகத்தினைக் கண்டு சுற்றி வந்த நாளில், அண்ணாமலைப் பல்கலைக்கழக எல்லைக்கு அழைத்தோம். நான் அங்கே மாணவர் தலைவனாக இருந்த காலம் அது. அவரை வரவேற்று அவரருகிருந்து அவர் அடிதொட்டு வணங்கி, அவர்தம் நல்வாழ்த்தினைப் பெற்ற அந்த நினைவு என் நெஞ்சில் இன்னும் பசுமையாக உள்ளது. அண்ணலார் அவர்கள் தம்மையே நாட்டுக்கு ஈந்தார்.

தமிழ்நாட்டில் கொடியேந்தி உயிர்விட்ட குமரனும் செக்கிழுத்த சிதம்பரனாரும் கர்மவீரர் காமராசரும் இன்னும் பல்லாயிரக்கணக்கான மக்களும் காங்கிரஸின் அச்சாணியாக நின்று அன்று போராடிய காட்சிகள் மறக்க முடியாதன. நான் என் இளமைக்காலத்தில்—செங்கற்பட்டுப் பள்ளியில் பயின்றஞான்று, அண்ணல் காந்தி அடிகள் தண்டி யாத்திரை மேற்கொண்டு உப்பு

சத்தியாக்கிரகம் செய்ததையும் அதே வேளையில் நடந்த தமிழ்நாட்டின் வேதாரணிய உப்பு யாத்திரையும் அவை மக்கள் உள்ளத்தில் உண்டாக்கிய உணர்ச்சிகளையும் எண்ணினால் கண்ணீர் பெருகுகின்றது. அக்காலத்தி லெல்லாம் மக்கள் இணைந்து செயலாற்றிய ஒரே நிறுவனம் காங்கிரஸ் என்பதை யாரும் மறுக்க இயலாது. 'குமரியொடு வடஇமயத்து ஒருமொழி வைத்துலகாண்ட' என்ற இளங்கோவடிகள் வாக்கு, அவர் காலத்துக்கு சுமார் இரண்டாயிரம் ஆண்டுகள் கழித்து மறுபடியும் நனவா யிற்று என்றால் அந்தப் பெருமை காங்கிரஸ் மகாசபை யினையே சாரும். அந்த காங்கிரஸ் மகாசபையின் எழும்பூர் ஏரியில் 1927-28ல் நடைபெற்ற மாநாட்டுப் பந்தலில்—நான் மிக இளைஞனாக வாலாஜாபாத் இந்துமத பாடசாலையில பயின்ற நாளில்—நாடகம் நடித்ததை நினைத்துப் பார்க்கிறேன். பின் நடைபெற்ற ஆவடி காங்கிரஸ் மாநாட்டின் நிகழ்ச்சிகள் என் நினைவில் வருகின்றன, அப்படியே காஞ்சிபுரத்தில் நடந்த மாநில காங்கிரஸ் மாநாட்டின் நிகழ்ச்சிகள் என் நினைவில் வருகின்றன. அப்போது காஞ்சிபுரத்தில் நடந்த மாநில காங்கிரஸ் மாநாட்டுக்கு வந்த வரதராசலு நாயுடு, திரு.வி.க போன்றவர்கள் வாலாஜாபாத்துக்கும் வந்து, பள்ளிக்கூடத்தில் நான் சாதி ஒற்றுமையைப் பற்றிப் பேசியதைக் கேட்டதையும், தலைமை வகித்த டாக்டர் நாயுடு அவர்கள் தமக்கிட்ட மாலையினை எனக்கிட்டு என்னை வாழ்த்தியதையும் எண்ணிப் பார்க்கிறேன். இப்படி எத்தனை எத்தனையோ வகையில் பல பெரியவர் கள் நாடு முழுவதும் நம் மக்களைத் தட்டி எழுப்பி, 'நம்மை நாம் உணரும்' வகையில் உணர்வூட்டிய காரணத் தாலேயே காங்கிரஸ் தன்னிகரற்றுத் தலைநின்று நாட்டிற்கு நல்லதொரு விடுதலையை வாங்கித் தந்தது.

கி.பி. ஏழாம் நூற்றாண்டில் வாழ்ந்த அப்பரடிகளார் உழவாரப்பணி செய்து சமூக நலம் காத்தவர். அக்காலை பெருமன்னனாகிய மகேந்திரன் அவரைத் துன்புறுத்திய காலத்தில் 'அஞ்சுவது யாதொன்றுமில்லை அஞ்சவருவதும் இல்லை' என்று வீறு பேசி, 'யாமார்க்கும் குடியல்லோம்' என்பதை எடுத்துக்காட்டி, தன் கொள்கையை நிறுவி வெற்றி பெற்றார். ஆம்! அதே நிலையில் அதே வயதில் அண்ணல் காந்தியடிகளார் 'யாமார்க்கும் குடியல்லோம்' என்று விண்முட்டப் பேசி வீறுகாட்டி வெற்றி பெற்றார். அத்தகைய அண்ணல் வழி நடந்த பாரத மக்களின் நெஞ்சை நினைத்த பாரதியார் 'அச்சமில்லை அச்ச மில்லை அச்சமென்ப தில்லையே' என்று பாட்டிசைத்தார். ஆக நம் நாட்டுப் பழம்பெரும் செம்மையும் தீயதற்கு அஞ்சா நெஞ்சுரமும் சமுதாயம் செழிக்கக் காணும் தொண்டும் மீண்டும் நாட்டில் நிலைக்கச் செய்த பெருமை தியாகத் தொண்டர்களாகிய அப் பெரியவர் களையே சாரும்.

'இதந்தரு மனையின் நீங்கி இடர்மிகு சிறைப்பட்டும்' பதம்திரு இரண்டும் மாறி பழி மிகுந்து இழிவுற்றும், எதற்கும் அஞ்சாது நிமிர்ந்துநின்று வெற்றிவாகை சூடி, 1947-ல் அப் பெருமக்கள்—அண்ணலார் காந்திஅடிகள், பண்டித நேரு, வல்லபாய்படேல் தமிழ்நாட்டுத் தனிப் பெருந்தலைவர் காமராசர் போன்றோர்—நாட்டிற்குச் சுதந்திரம் வாங்கித் தந்தார்கள். அத்தகைய தியாகச் செம்மல்களுள் இன்றும் நம்முடன் மாண்புமிகு மீ. பக்தவச்சலம் போன்று இரண்டொருவர் வாழ்ந்து வருவது நம் மனத்துக்கு மகிழ்ச்சி தருகிறது. 'நல்லாரோடு இணங்கி இருப்பதுவும் நன்று' அல்லவா?

ஆம்! விடுதலை பெற்று நாற்பதாண்டுகள் ஆகப் போகின்றன. அந்தப் பெரியவர்களுடைய தியாக

வாழ்வினையெல்லாம் அறியாத இளைய தலைமுறைகள் இப்போது வாழ்கின்றன. அவர்களுக்கெல்லாம் அந்தப் பெருந்தொண்டுகள்—தியாகங்கள்—செயல் திறன்கள்—செம்மை நலன்கள் தெரிய வழியில்லை. நாடு எத்தனையோ வகையில் வளர்கின்றது என்றாலும் மக்கள் உள்ளம் வளரவேண்டிய அளவில் வளரவில்லை; ஏன் சுருங்கி வருகிறதோ என்று எண்ணவும் தோன்றுகின்றது. 'ஒன்றே நாடு—ஒன்றே உணர்வு-ஒன்றே குலம்—ஒருவனே தேவன்' என்கின்ற நினைவும் நெறியும் மாறி, நாட்டில் சாதியால், சமயத்தால், நீதியால், நெறிமுறையால், செல்வத்தால், இன்ன பிறவற்றால் வேறுபாடுகள் வளர்ந்து சமுதாயத்தின் செம்மை வாழ்வு சிதையுமோ என்ற அச்சத்தை உண்டாக்குகிறது. நூற்றாண்டு விழாவினைக் கொண்டாடும் காங்கிரஸ் மகாசபை அந்த அவலநிலையை மாற்ற முயலவேண்டும். ஆம்! நாட்டில் காந்தியடிகளும் காமராசரும் தோன்றவேண்டும். அனைவரும் தம்மை மறந்த—நாட்டு வாழ்வை நம் வீட்டு வாழ்வு என்ற உணர்வில் செயல்பட வேண்டும். 'எல்லாரும் எல்லாச் செல்வமும் எய்த வேண்டும்' என்ற கம்பன் கனவு நனவாக நாமெல்லாம் ஒன்றி உழைக்க வேண்டும். 'சிந்தனை' வார ஏடு இந்த ஒன்றிய சிந்தனையை மக்கள் உள்ளங்களில் உருவாக்கி, 'எல்லாரும் ஓர் நிறை' என்ற ஒருமை உணர்வினைத் தட்டி எழுப்பி 'நாடெங்கும்—வாழக் கேடொன்றும் இல்லை' என்ற கொள்கையினை நிறுவ வேண்டும். அத்தகைய ஆக்க நெறிக்கு அனைவரும் இணைந்து செயலாற்ற 'இதுவே காலம்—நேரம்—பொழுது' என்று கண்டு 'ஒன்றுகூடுங்கள் ஒன்றி உணருங்கள்—ஒன்றிச் செயலாற்றுங்கள்' என்று வேண்டி அமைகின்றேன்.

1985 'சிந்தனை' நூற்றாண்டு மலர்

# 3. 'வஞ்சமின்றி வாழ்வோம்'

உலகம் தோன்றிய நாள்தொட்டு எத்தனையோ ஆன்றோரும் சான்றோரும் தோன்றி வையத்து மக்கள் வாழ்வை மலரச் செய்யும் வழிமுறைகளை ஆய்ந்து அறநெறிகளைத் தந்துள்ளனர். சமயம் வளர்த்த பெரியோர்களும் உலகெங்கணும் வாழும் மெய்ச்சமயங்கள் மக்கள் வாழ்வோடு பிணைந்து சிறக்கும் வகையில் அறவாழ்வை வற்புறுத்தியுள்ளனர். தவறுகளையெல்லாம் செய்துவிட்டு ஆண்டவனுக்குப் பிரார்த்தனையோ காணிக்கையோ செலுத்திவிட்டால் அத் தவறுகள் நீங்கி வீடும் என்று நினைப்பவர் நாட்டில் உள்ளனர். ஆனால் அந்த எண்ணம் முற்றிலும் ஏற்புடைத்தாகாது. அறியாது தவறிழைத்து, தவறு என்று அறிந்தபின் வருந்தி இறைவனை வழிபட்டால் அதற்கு ஒரு வேளை கழுவாய் உண்டு என்பதை எல்லாச் சமயங்களும் ஏற்றுக் கொள்ளுகின்றன. உண்மையில் தவறு அறிந்து அழுது அழுது கழுவாய்த் தேடிக்கொண்ட அடியவர் எல்லாச் சமயங்களிலும் உள்ளனர். ஆனால் தவறுக்குப் பிராயச்சித்தமோ அல்லது கழுவாயோ காணிக்கை யாக்கினால் போதும் என எண்ணுவதை எந்தச் சமயமும் ஏற்பதில்லை. அதனாலேதான் எல்லாச் சமயத் தலைவர்களும் சமயம் வாழ்வோடு பிணைந்த ஒன்று என்றும் அவ் வாழ்வினை வாழ்வாங்கு வாழ்ந்தால் இறையருள் கிட்டுமென்றும் அந்த வாழ்வாங்கு வாழும் அறநெறி விட்டு நீங்கின் இறைவன் அருள் செய்யமாட்டான் என்றும் சுட்டிக் காட்டுகின்றனர்.

வாழ்வின் அடிப்படை அனைத்துக்குமே உள்ளத் தூய்மை இன்றியமையாதது என்ற உண்மையினை

யாவரும் அறிவர். 'உள்ளொன்று வைத்துப் புறமொன்று பேசுவார் உறவு கலவாமை வேண்டும்' என வள்ளலார் வரம் வேண்டுகிறார். இந்த உள்ளொன்று புறமொன்றாக பேசும்—காட்டும் வாழ்க்கையினையே வஞ்ச வாழ்க்கை என்பர். வஞ்சம் என்ற சொல்லுக்குக் கபடம், பொய், கொடுமை, வஞ்சினம், பழிக்குப்பழி, சிறுமை போன்ற பல பொருள்கள் உள்ளன. வஞ்சகம் என்ற சொல்லுக்கும் ஏமாற்றல், தந்திரம், தூர்த்தச் செயல் போன்ற பல பொருள்கள் உள்ளன. அனைத்தும் மனிதனை மிருகமாக்கும் உணர்வினைக் குறிக்கும் சொற்களேயாம். எனவே இவ் வஞ்சம் மனிதனைச் சமுதாய உணர்வு அற்ற ஒரு விலங்காக்குகிறது என்பது தேற்றம்.

ஆண்டவனைப் பாடும் அடியவர்கள் தூய உள்ளம் பெற்றவர்களாக வேண்டும். உடன் வாழும் மனித சமுதாயத்துக்கு ஊறு இழைத்தோ அல்லது வஞ்சம் புரிந்தோ ஆண்டவனை வழிபட முடியாது. 'பார்க்குமிட மெங்கும் ஒரு நீக்கமற நிறைகின்ற இறைவன்' மக்கள் வடிவிலும் உள்ளான் என உணர்ந்து அவர்களுக்கு ஊறு செய்யா வகையில் வாழ்ந்தால்தான் உண்மைச் சமய வாழ்வு ஆகும். சமயச் சின்னங்கள் அணிவதையும் சமயப் பாடல்களை ஓதுவதையும் யாரும் தடுக்கவில்லை. ஆனால் அவற்றுடன்—ஏன்—அவற்றுக்கு மேலாக உள்ளத்தில் கரவடம் அல்லது வஞ்சம் இல்லாதிருக்க வேண்டும் என்பதைச் சமயத்தலைவர்கள் வற்புறுத்துகிறார்கள்.

அப்பரடிகள் தேவாரம் பாடிய மூவருள் ஒருவர்—முன்னவர். இறைவனைக் கண்டுகண்டு கசிந்து பாடியவர்; அதே வேளையில் தம் உழவாரப் படைகொண்டு சமூகப் பணி செய்தவர் தவறு செய்த இராவணன் தன் செருக்கடங்கி அழுது அழுது பாடி அருள்பெற்ற

நிலையைப் பதிகம் தொறும் காட்டியவர். அவர் இறைவன் அருள்புரியும் நிலையை எண்ணிப்பார்க்கிறார். வஞ்சமின்றி வணங்குவார்க்கு அவன் வந்து அருள்புரியும் தன்மையை உணர்கிறார். எனவே அவர் மக்களை அழைத்து 'வஞ்சமின்றி வணங்குமின் வைகலும்' என்று அறவுரை கூறுகின்றார். 'நாள்தோறும் இறைவனை வழிபடும் நல்லவர்களே! உங்கள் உள்ளத்தில் வஞ்சகத்துக்கு இடம் கொடாதீர்கள்' என்கிறார். ஆம்! உள்ளத்தில் வஞ்சம் வைத்து அவன் அஞ்செழுத்தினை ஓதினால் அவன் வரமாட்டான்; மாறாக வெகுதூரம் விலகிச் செல்வான் என்கிறார். 'வ ஞ் ச னை யா ல் அஞ்செழுத்தும் வழுத்துவார்க்குச் சேயானை' என்பது அவர் வாக்கு. எனவே மெய்ச் சமயநெறி சமுதாயத்தொடு பொருந்திய ஒன்று என்பதும் உள்ளத்தில் வஞ்சமின்றி வாழ்வது என்பதும் தேற்றம். வையம் வாழ-சமுதாயம் தழைக்க நினைக்கும் நாம் அனைவரும் அப்பர் காட்டிய வழிநின்று வஞ்சமற்று வாழ்வோமானால் இம்மையில் நாம் நலமுற்று மறுமையின் பேரின்பம் பெறுவதோடு உலகச் சமுதாயமும் இன்னலின்றி இன்பமுற்று இனிது வாழும் என உணர்ந்து 'வஞ்சமின்றி வாழ்வோமாக! இதோ அப்பர்தம் வாய்மொழி:—

**வஞ்சமின்றி வணங்குமின் வைகலும்**
**வெஞ்சொலின்றி விலகுமின் வீடுற**
**நெஞ்சு நைஞ்சி நின்று உள்குளிர் வார்க்கெலாம்**
**அஞ்சலென்றிடும் ஆனைக்கா அண்ணலே.**

—*1985*

# 4. "வேண்டுவது அஞ்சாமை"

**"அஞ்சாமை ஈகை அறிவூக்கம் இந்நான்கும்
எஞ்சாமை வேந்தற் கியல்பு'**

என்று திருவள்ளுவர் பல நூற்றாண்டுகளுக்கு முன்னமே கூறிச் சென்றுள்ளார். நாடாளும் மன்னருக்கு இருக்க வேண்டிய நல்லியல்புகளாகிய சிலவற்றுள்ளே 'அஞ்சாமை' யும்' ஒன்றாக அடங்குகின்றது. இந்தக் குறளை வள்ளுவர் 'முடியரசர்'களுக்குக் கூறிய ஒன்றாகவே கொள்ளினும், இன்று குடியரசுகள் உலகெங்கணும் ஓங்கும் நிலையிலும் இக் குறள் தேவைப்படுகிற தென்பதை யாவரும் அறிவர். நாட்டை ஆளுகின்ற நல்ல மன்னராயினும் மந்திரியா யினும் அல்லது சாதாரண மக்களாயினும் அவர்கட்கு 'அஞ்சாமை' அடிப்படை வாழ்வாக அமைந்தாலன்றி உலகம் என்றும் முன்னேறாது. அஞ்சி அஞ்சி மக்களினம் மாண்டு கழிவதைக் கண்டு வருந்திப் பாடிய புலவர்—அறவோர்—செந்தண்மை பூண்டொழுகும் அந்தணாளர் எண்ணற்றவர். இந்த நூற்றாண்டில் வாழ்ந்த பாரதி அவர் நிலைகண்டு 'நெஞ்சு பொறுக்குதில்லையே' என நைந்து பாடுகின்றார்.

**'நெஞ்சு பொறுக்கு தில்லையே—இந்த
நிலை கெட்ட மனிதரை நினைந்து விட்டால்
அஞ்சி அஞ்சிச் சாவார்—அவர்
அஞ்சாத பொருளில்லை அவனியிலே'**

என்று அவர் கூறி மேலே அவர்களைப் பயமுறுத்தும் பொருள்களின் பொய்த் தோற்றங்களை நன்கு விளக்கு கின்றார். ஆம்! இப்படி அஞ்சாததற் கெல்லாம் அஞ்சி அஞ்சி நிற்கின்ற காரணமே மனித சமுதாயத்தை

எங்கோ படுகுழிக்கு இழுத்துச் செல்லுகிறது என்பதை நல்லோர் உணர்வார்.

'அஞ்சாமை அரசர்க்குரிய இயல்புதானே நமக்கு அது ஏன்?' என்று சிலர் மனத்துக்குள் எண்ணியும் சிலர் வெளியில் பேசியும் வாழ்வதை நாம் அறிவோம். இருபதாம் நூற்றாண்டின் இடையில் வாழும் குடியாட்சியில் எல்லாரும் இந்நாட்டு மன்னர் என்பதை நாம் மறந்துவிடக்கூடாது. அந்த மறதி உண்டாகாதிருப்பதற்காகவே ஐந்தாண்டுகளுக்கு ஒருமுறை, குடியாட்சி நாடுகளில் தேர்தல் நடத்தி நாடாளும் நல்லவரும் வல்லவரும் வீடுதோறும் வந்து வேண்டி வரம் கிடக்கவேண்டிய நிலை உண்டாக்கப் பெறுகின்றது. எனவே மனிதனாகப் பிறந்த ஒவ்வொருவனும் அஞ்சாது வாழவே கடமைப்பட்டவனாகின்றான்.

சமயத் தலைவர்கள் இந்த உண்மையை நன்கு விளக்கிக் காட்டுகின்றார். நாடாண்ட மகேந்திரன் 'வருக' என்று ஆணையிட்டபோது, 'நாமார்க்கும் குடியல்லோம் நமனை அஞ்சோம்' என்று வீறு பேசி, வெற்றி கண்ட வாகீசராகிய நாவுக்கரசர் வாழ்ந்த நாட்டில்தான் நாமும் வாழ்கின்றோம். 'அஞ்சுவதியா தொன்றுமில்லை அஞ்ச வருவதுமில்லை' என்ற அவர் பாடலை வாயிடை முணுமுணுத்துக் கொண்டே, அஞ்சாததற்கெல்லாம் அஞ்சி அஞ்சி வாழ்கின்றோம். 'யாமார்க்கும் குடியல்லோம் யாதுமஞ்சோம்' என்ற மணிவாசகரின் அடியை ஓதி ஓதி உடனுக்குடன் அஞ்சி அஞ்சியே நாம் வாழ்கின்றோம். இந்த நிலை எல்லா நாடுகளிலும் காணப்பெறுகின்ற ஒரு நிலையேயாகும்.

இவ்வாறு அஞ்சாத பொருளுக்கெல்லாம் அஞ்சி வாழ்கின்ற வாழ்வே மனித வாழ்வாகாது. இயேசு தம்

எதிரிகளுக்கு அஞ்சித் திரும்பியே தன்னாட்டுக்கு வாரா திருந்தால் உலகில் இன்று அந்தச் சமயம் அன்புச் சமய மாக வாழுமா? அஞ்சாமையில் தானே அன்பு பிறந்தது. இப்படியே ஒவ்வொரு சமயத்தையும் அதனதன் சமயத் தலைவர்களையும் எண்ணிப்பார்க்க வேண்டும். அதனால் நான் யாவற்றையும் அஞ்சாத பொருள் என்று கூறவில்லை. அஞ்சவேண்டுவனவற்றுக்கு அஞ்ச வேண்டுவதே. திருவள்ளுவரும் இதைத்தான்.

'அஞ்சுவ தஞ்சாமை பேதைமை அஞ்சுவ
தஞ்ச லறிவார் தொழில்'

என்றார். எனவே அஞ்சக் கடவதாகிய பழி பாவங்களுக் கும் பிற கொடுமைகளுக்கும் அஞ்சவேண்டுவதே கடமை யாகும். ஆனால் மனிதன் அவற்றிற்கெல்லாம் அஞ்சாது, அளவுக்கு மீறிய பழிதரும் செயல்களையும் பாவச் செயல் களையும் கூசாது செய்கின்றான்; அவற்றால் தான் வென்றுவிட்டதாகவும் மார்தட்டி எக்காளமிடுகின்றான். ஆனால் அதே வேளையில் அஞ்ச வேண்டாததற் கெல்லாம் அஞ்சி எதை எதையோ கோட்டைவிட்டுக் கொண்டே போகின்றான். முதலாவதாக, இந்த அச்சத் தின் காரணமாக மனிதப் பண்பாடே நிலை கெடுகின்றது. தம் தலைவர் முன்னே 'நல்லதை நல்லது' என்று சொல்ல அஞ்சி, அவர் 'கெட்டது' என்றால், 'ஆம்; கெட்டது' என்று கூத்தாடும் காட்சி நாட்டில் பலப்பல. ஆகவே உயர்ந்த ஒழுக்க நெறியே மறக்கப்பட்டு மறைக்கப்படு கின்றது. நாடாளும் அரசராயினும் தவறு செய்தால் சுட்டிக் காட்டவேண்டிய அஞ்சாமையை விடுத்து, தமது பதவியும் பிறநலன்களுமே கெடும் என்ற காரணத்தால் பிறரையும் பொது நலத்தையும் காட்டிக் கொடுக்கும் அச்சத்தை இன்று உலகில் எங்கும் காணமுடிகின்ற

தன்றோ. தன் தாய்மொழி எந்த நிலையில் கெட்டாலும் கவலையுறாது, மேலுள்ளவர்களுக்கு அஞ்சி, தம் வாழ்வை வளமாக்கிக்கொள்ளவேண்டும் என்ற ஒரே குறிக்கோளில் வாழ்கின்ற 'தமிழர்'களுக்குத் தமிழ்நாட்டில் பஞ்ச மில்லையல்லவா! இப்படியே நாடு கெடினும் நலமெலாம் சாயினும், தன் வாழ்வினையே மதித்து, மேலுள்ளவருக்கு அஞ்சி வாழும் வன்கணாளர் வாழ்வு நாட்டில் இருப்பதை நாம் அறிவோம். அதனாலேயே தமிழ்நாடு எல்லை அளவிலும், பண்பாட்டு நெறியிலும் பிற நல்லியல்பு களிலும் மெள்ள மெள்ளத் தாழ்ந்துகொண்டே செல்லு கின்றது. நல்லவேளையாக இடையிடையிலே சில அஞ்சா வீரர்கள் தோன்றி தமிழர்தம் மானத்தைக் காக்க ஆவன செய்வதால், ஓரளவு 'பாழ்பட்டு வறுமை மிஞ்சி விடுதலை தவறிக் கெட்டு'ப் போகாமல் வாழ்ந்துவருகின்றோம்.

தமிழ், தோன்றிய அந்த நாள்தொட்டு இன்றுவரை இத்தகைய அஞ்சா நெஞ்சம் கொண்ட அறவோர் துணை யாலேயே வாழ்ந்து வருகின்றது. இவ்வுண்மையை வரலாறு நன்கு விளக்குவதை யாவரும் அறிவர். நாவரசர் அன்று அஞ்சாது நிற்காதிருந்திருப்பராயின் பல்லவர்வழி அவர்தம் பிராகிருதமும் சமஸ்கிருதமும் நாட்டையும் மொழியையும் மாற்றியிருக்கும். இன்றைய நம் அண்டை நாட்டு மொழிகளாகிய மலையாளம், கன்னடம், தெலுங்கு போன்று தமிழும் தன் உரிமை கெட்டு வேற்று மொழி இன்றேல் வாழ்வில்லை என வழக்கிழந்திருக்கும். இப்படியே பலகால எல்லைகளினின்றும் காரணங் காட்டலாம்.

இவ்வாறு நம் முன்னோர் காத்த நல்ல தமிழ் மொழி யையும் பண்பாட்டையும் இனியும் வரும் எல்லையற்ற தொல்லைகளைப் போக்கிக் காக்கவேண்டிய பெரும்பணி

இன்று வாழும் தமிழ்ச் சமுதாயத்துக்கும் வருங்காலச் சமுதாயத்துக்கும் உண்டு. இதை உணர்ந்து எல்லா வேறுபாடுகளையும் மறந்து தமிழால் ஒன்றுபட்டு தமிழ் வாழ, தமிழினம் வாழ, தமிழ்ப் பண்பாடு வாழ அஞ்ச வேண்டாததற்கெல்லாம் அஞ்சாது எல்லாவற்றையும் வென்று உற்ற புகழை நிலைநாட்ட முற்பட வேண்டும். இயல்பாக எல்லா நலன்களும் நிரம்பப்பெற்ற நம் தமிழ் மொழி அஞ்சா நல்லாண்மையாளரால் வருங்காலத்தில் உலகில் சிறக்கும் என்பது உறுதி. அதற்கு வேண்டுவது உளஉரமே! வேண்டுவது அஞ்சாமையே! அதுவே தமிழ்ச் சமுதாயத்தை வாழ வைப்பது! வளர வைப்பது!

—*1962* மங்கலங்கிழார் மலர்

## 5. விழாக்கள்

**வி**ழாக்கள் மிகப் பழங்காலந்தொட்டே உலகின் எல்லாப் பாகங்களிலும் கொண்டாடப் பெற்று வருகின்றன. நாட்டுக்கு நாடு, ஊருக்கு ஊர் பல்வேறு வகையில் விழாக்கள் மாறுபடும். தனி மனிதனைப் பற்றிய விழாக்கள், சமுதாய விழாக்கள், சமய விழாக்கள் நாட்டு விழாக்கள் என விழாவினைப் பலவகையில் பிரிக்கலாம். மேலும் நாகரிகமடையாத அன்றைய மக்கள் தொடங்கி (இன்று வாழும் நாகரிகமற்ற ஒதுக்கிடங்களில் வாழுபவர் உட்பட) நாகரிகம் பெற்றவர் எனத் தம்மைக் கூறிக்கொள்ளும் இன்றைய மக்கள்வரை அவ்வவர் இனம், குழு, கொள்கை, வாழிடம் ஆகியவற்றின் அடிப்படையில் பலவகையில் விழாக்கள் உள்ளன..

தமிழில் விழாவின் அடிப்படையாக அமைந்த சொற்களைக் கண்டு அவற்றை விளக்கிய மேலைநாட்டு அறிஞர் (T. Burrou and M.B. Emeneau—Dravidian Etymological Dictionary) ஐந்து சொற்களை இதற்கு அடிப்படையாகக் கொண்டனர். 'உக' (476) என்ற அடிப்படையில் உகப்பு, ஓகை என்ற சொற்கள் மகிழ்ச்சியில் விளையும் விழாக்களாக அமையும், 'நோன்' (3147) என்பதன் அடியாக நோன்பு விழாவாக அமைகின்றது. பண்டிகை (3221) விழாவாகின்றது 'பாண்' அடியாகப் பாணர்—இசைவாணர் வழியும் விழா அமைகின்றது. 'வேண்டு' என்பதன் அடியாக வேண்டுதல், வேண்டுமை, வேட்பு என்ற வகையில் விழாவாற்றிட வேண்டிய பெறும் சிறப்பு காட்டப்பெறுகின்றது. இவ்வாறு விழாக்களின் அடிப்படை பல வகையில் அமைகின்றது.

தனி மனிதனைப் பற்றிய விழா அவன் பிறப்பதற்கு முன் தொடங்கி, மறைந்து அவன் நினைவுள்ள வரையிலும் நடைபெறுகின்றது. கருவளர் சிறப்பின் வளைகாப்பு, சீமந்தம் தொடங்கி, பிறந்தநாள் விழா, மணவிழா, மகப்பேறுவிழா, மணி விழா என்ற வாழ்நாளில் அமையும் விழாக்களும் மறைந்தபின் சடங்கு அடிப்படையில் நடைபெறும் நினைவு விழாக்களும் தனி மனித விழாக்களாக அமைகின்றன. கூட்டு விழாக்களாகச் சமுதாய அமைப்பில் பொங்கல் விழா, புத்தாண்டு விழா, நிறைமதி பிறைமதி விழாக்கள், வசந்த விழா, வேனில் விழா போன்றவை நடைபெறுகின்றன. திறப்பு விழா, கால்கோள் விழா, தொடக்க விழா என்பனவும் கம்பன் விழா, வள்ளுவர் விழா என்பன போன்ற விழாக்களும் உள. சமய அடிப்படையில் பாரதத்தில் விநாயகர் சதுர்த்தி, கலைமகள் விழா, கார்த்திகை விழா, தீபாவளி

போன்றவை இந்துக்களால் கொண்டாடப் பெறுகின்றன. மேலைநாடுகளில் தொன்மையான எகிப்திய கிரேக்க உரோம யூதர் நாடுகளில் நம் தமிழ்நாட்டினைப் போன்றே மிகப் பழங்காலந்தொட்டு சமய அடிப்படையிலும் சமுதாய அடிப்படையிலும் விழாக்கள் நடைபெற்றுள்ளன. (En. Britanica Vol. 9 p.p 127&128) இங்கிலாந்து, ஜர்மனி, அமெரிக்கா, போன்ற நாடுகளில் அவர்தம் நாட்டின் நிலைத்த திருந்திய வாழ்க்கை அமைந்த பிறகு சமய அடிப்படையில் விழாக்கள் சிறந்ததெனக் காட்டுவர். (En. Britanica Vol. 9. p.p. 200 & 201) எனினும் அந்த நாடுகளிலும் பழங்காலந்தொட்டே பழங்குடிமக்கள் அவரவர் தம் மரபுநிலை பழக்க வழக்கங்களுக்கு ஏற்ப விழாவினைக் கொண்டாடி மகிழ்ந்தனர் என்பது தேற்றம்.

சமய விழாக்கள் அடிப்படையில் கிறித்தவர்தம் கிறித்து பிறந்த நாள் விழா, நல்ல வெள்ளி போன்றனவும் மகமதியர்தம் ரம்சான், பக்ரீத் போன்றனவும் சீனாவில் கொண்டாடப்பெறும் புத்தர் விழாவும் நம் நாட்டு புத்த பௌர்ணமியும், சைனர்தம் தீர்த்தங்கரர் பற்றிய விழாக்களும் பிற சமயத்தலைவர் விழாக்களும் நினைவு கூர்தற்குரியன.

சமுதாய அடிப்படையில் நம்நாட்டில் காலந்தோறும் நடைபெறும் விழாக்கள் பல. அறுவடைப் பயன் கண்டு மகிழும் பொங்கல் விழாவும், வசந்த விழா, ஹோலிப் பண்டிகை போன்றனவும் அவற்றுள் அடங்கும். நாட்டு விழாக்களில் அமெரிக்க விடுதலைநாள் விழா, இந்திய விடுதலை விழா, குடியரசு விழா போன்றவை அடங்கும். இவற்றுடன் நல்லவர் பிறந்து, மறைந்த நாட்களையும் நாம் விழாவாகக் கொண்டாடுகிறோம்.

கிருஷ்ண ஜயந்தி (கோகுலாஷ்டமி) இராமநவமி, காந்தி ஜயந்தி போன்றவை ஒருசில.

தனிமனிதன் செயல்களைப் பாராட்டும் வகையில் தமிழ்நாட்டிலும் பிறவிடங்களிலும் விழாக்கள் நடைபெற்றன — நடைபெறுகின்றன. வீ ர ர் வழிபாடும், கல்நாட்டு விழா, மன்னர் பிறந்தநாள் மங்கல விழாவும், வெறியாட்டு விழாவும், உண்டாட்டு விழாவும் குருதிப் பலியும் பிறவும் தொல்காப்பியர் காலந்தொட்டு நாட்டில் நடைபெற்றுவருகின்ற விழாக்களாம்.

ஆறறிவுடை மனிதன் ஆரவாரத்தோடு விழாக்களைக் கொண்டாடும் வேளையில், பறவையும் விலங்கும்—ஏன் ஓரறிவுடைய மரமும் செடியும்கூடக் காலந்தொறும் விழாக்களைக் கொண்டாடுகின்றன. இரஷியப் பறவைகள் கூட்டமாகத் தமிழ்நாட்டு வேடந்தாங்கலில் வந்து தங்குவதும் காகம் கலந்துண்ணும் காட்சியும் எறும்பின் ஈட்டமும் விலங்குகளும் ஊர்வனவும் (சமுதாயமாக) இணைந்து செல்லும் காட்சிகளும் நமக்கு விழாவினை நினைப்பூட்டுவன வல்லவோ! பருவம் அறிந்து பூத்துக் காய்த்துக் கனிகளை வழங்கும் மாவும் பலாவும் மற்றவையும் மல்லிகை வசந்தத்தால் பூத்துக் குலுங்குவதும் ஓரறிவுடைய உயிர்கள் கொண்டாடும் மற்றவர் மகிழப் பயன் அளிக்கும் பருவ விழாக்கள்தாமே. இவ்வாறு உயிர்கள் அனைத்துமே ஏதாவது ஒருவகையில் விழா ஆர்ந்து மகிழ்கின்றன என்பது தெளிவு. ஆம்! நாம் மறந்தாலும் பருவவிழாக்களை அவ்வுயிர்கள் நினைவூட்டுகின்றனவே.

விழா எதற்கு என்று எண்ணிப்பார்க்க வேண்டும். பூம்புகாரிலே இந்த விழாவினை அறிவித்த வள்ளுவ முதுமகன்,

'பசியும் பிணியும் பகையும் நீங்கி
வசியும் வளனும் சிறக்கென வாழ்த்தி'

விழாவினைப் பற்றி அறிவித்தான் என்பர் இளங்கோவடிகள். எனவே நாட்டின் பசியும் பிணியும் நீங்கவும் மக்கள் பகையற்று வாழவும் செல்வ வளன் நாட்டில் சிறக்கவுமே விழாக்கள் நடைபெறுகின்றன என்பது உண்மையாகும். பெற்றது கொண்டு சுற்றத்தாரை மட்டுமன்றி எல்லாரையும் இணைத்து இன்பம் காண்பதுவே விழாவாகும். பூம்புகாரின் இந்திர விழாவிலும் பழைய இலக்கியங்களில் வரும் பிற விழாக் களிலும் இன்றைய சமுதாய நாட்டு விழாக்களிலும் இத்தகைய செயல்களைக் காணலாம். எல்லாரும் இன்புற்று வேறுபாடற்று இணைந்து வாழ வழி வகுப்பதே விழாவாகும்.

'ஐப்பசி ஓண விழவும் அருந்தவர்கள்
துய்ப்பனவும் காணாதே போதியோ பூம்பாவாய்'

என்று ஏழாம் நூற்றாண்டில் சம்பந்தர் கூறியுள்ளார். இன்று நாட்டில் இசை விழாக்களும் ஒவ்வொரு துறையினரும் ஆண்டுக்கு ஒரு வாரம் நடத்தும் மரியாதை அல்லது நற்செயல் போற்றும் விழாக்களும் நடைபெறு கின்றன. பழங்காலத்தில் தமிழ்நாட்டில் இசை விழாக்களைப் பாணர் நடத்திவந்துள்ளனர். இங்கிலாந்து ஜர்மனி, அமரிக்கா போன்ற மேலை நாடுகளிலும் 17, 18-ம் நூற்றாண்டுகளில் இத்தகைய இசைவிழாக்கள் நடை பெற்றுள்ளன என அறிகின்றோம்.

தமிழ்நாட்டில் பருவந்தோறும் நடைபெறும் விழாக்கள் பல, மிகப் பழங்காலத்தில் நடைபெறும். இத்தகைய விழாக்களைப் பற்றிச் சங்க இலக்கியங்களும் காப்பியங்களும் நன்கு காட்டுகின்றன. புனலாட்டு விழா

என வெள்ளப்பெருக்கில் அதைப் போற்றி வழிபடுவதோடு 'வந்தன்று வையைப்புனல்' என்று வாழ்த்தி அதில் ஆடவரும் பெண்டிரும் திளைத்தாடும் விழாவினைப் பரி பாடல் பல விடங்களில் விளக்குகின்றது. இன்றும் காவிரிப் பெருக்கினைப் போற்றும் ஆடிப்பெருக்கு விழா நாட்டில் உண்டே! அரசர்தம் பிறந்தநாள் விழா, மண்ணுமங்கலம் போன்றவற்றை விளக்குகின்ற இலக்கியங்கள் பல. மேலும் வசந்த விழாவினை ஊர்தொறும் கொண்டாடிவந்த சிறப்பினை— முக்கியமாகப் பூம்புகாரில் நடைபெற்ற இந்திர விழாவினைச் சிறப்பிக்கும் முகத்தான் 'சித்திரைத் திங்கள் சேர்ந்த' பெருவிழாவினை இளங்கோவடிகள் விளக்குகிறார். பின் வேனிற்காலத்து வேட்டுவர்தம் விழாவினையும் இடைக்குல மகளிர்தம் ஆய்ச்சியர் குரவை யினையும் சேரநாட்டில் மலைக்குரவர்தம் குன்றக்குரவை யினையும் காண்கின்றோம். இப்படி ஐந்திணையிலும் ஆற்றுப்பெருக்கிலும் கடற்கானலிலும் அவ்வந்நிலத்து மக்கள் ஆற்றும் விழாக்கள் இன்றும் தமிழ்நாட்டில் வற்றி விடவில்லை.

தமிழர்கள் இயற்கையோடு இயைந்த வாழ்வு நடத்தியவர்கள். அவர்களுக்குத் திங்கள்தோறும் வரும் நிறைமதி நாளே விழா நாளாக அமைந்தது. சித்திரை யில் கலந்த நிறைமதியும், வைகாசியில் விசாகமும், கார்த்திகையில் கார்த்திகையும், மார்கழியில் ஆதிரையும், தைப்பூசமும், மாசி மகமும், பங்குனி உத்திரமும் அத்தகைய நிறைமதி விழாக்களேயாகும். இன்றும் கடற்கரையிலும் ஆற்றுப்படுகைகளிலும் கலந்து, இந்த நிறைமதி விழாக்கள் கோயில்தோறும் ஊர்தொறும் நடைபெறுவதறிகிறோம். இவை தெய்வத் திருத்தலங் களில் இனிய பத்து நாட்கள் தொடர்ந்த பெருவிழாவென நடைபெறுகின்றன. இந்த நாட்களிலும் அவ்விடத்தில்

வாழ்வார் வேறுபாடற்று, சமுதாய உணர்வோடு ஒன்றுகூடி, பசியும் பிணியும் பகையும் நீங்கிய வகையில் மகிழ்ந்து விழாவாற்றுகின்றனறன்றோ?

தமிழ்நாட்டு விழாக்களில் சிறந்த விழாவாகக் கொண்டாடப் பெறுவது பொங்கல் விழாவாகும். இவ்விழாவினைப்பற்றிப் பழைய இலக்கியங்களில் போதுமான சான்றுகள் இன்றேனும் இன்று இது சாதி, சமய வேறுபாடற்ற உழவர் விழாவாக நடைபெறுகின்றது. ஆடியில் இட்ட வித்து ஐப்பசி கார்த்திகையில் அறுவடையாக, கார்த்திகையில் புதுநெல் கொண்டு அவலாக்கி ஆண்டவனுக்குப் படைத்தனர். பின் மார்கழி நோன்பாகவும் தை நீராடலாகவும் தொடர்ந்துவரும் விழாவினை ஒட்டி, தை முதல் நாளைப் பொங்கலாகவும் அதற்கு முன் நாளை உள்மாசும் புறத்தூசும் போக்கும் போகி நாளாகவும், அடுத்த நாளை உழவுக்குதவிய மாடுகளைப் போற்றும் நாளாகவும் அதற்கு அடுத்த நாளை உற்றாரையும் மற்றாரையும் கண்டு மகிழ்ந்து இன்பத்தைப் பகிர்ந்து கொள்ளும் காணும் பொங்கல் விழாவாகவும் தமிழர் இன்று வரையில் போற்றிவருகின்றனர். வடநாட்டிலும் போகியை இந்திர விழாவாகவும் பொங்கலை பகிர்ந்துண்ணும் நாளாகவும் கொண்டாடுகின்றனர். எந்த வேறுபாடும் இன்றி யாவரும் இணைந்து மகிழும் சிறப்பினை இன்றும் ஹோலி விழாவில் காணமுடிகின்றது.

சில விழாக்கள் விரத நாளாகவும் அமைகின்றன. கார்த்திகை விளக்கீடு உள்ளொளி பெருக்கி, புறஇருள் அகற்றி நிற்பதோடு உண்ணாவிரத நாளாகவும் அமைகின்றது. அப்படியே கௌரி விரதம் போன்றவையும் அமையும். கலைமகள் விழா பத்து நாட்கள் கொண்டாடுவது நாட்டில் கல்வி, கைத்தொழில் போன்றவற்றை வளர்க்கப் பயன்படுகின்றது. சங்க இலக்கியம்,

சிலப்பதிகாரம், மணிமேகலை போன்றவற்றில் இவ்விழாக்களின் சிறப்புப்பேசப்பெறுவதன்றி, பின் எழுந்த பல சமய இலக்கியங்களாகிய உலா, கோவை, பிள்ளைத்தமிழ், குறவஞ்சி, பள்ளு போன்றவையும் இவ்விழாக்களைப் பற்றி விளக்குகின்றன. மணிவாசகர், ஆண்டாள் போன்ற அடியவர் பெண்கள் விளையாட்டு வகைகளை விழாக்களாகவே பாடிப் பரவுவர்.

இன்று முன் காட்டியபடி தனிமனிதவிழாவாக—சமுதாய விழாவாக—சமய விழாவாக - நாட்டு விழாவாக—உலக விழாவாக (ஐக்கிய நாட்டு UNO விழாக்கள்) விளையாட்டு விழாவாக (ஒலிம்பிக் போன்றவை) பல்கிப் பெருகிய நிலையில் விழா பலவகையில் விரிவடைந்துள்ளது. அதே வேளையில் நம் பழம் பெரும் இலக்கியங்கள் காட்டிய விழாக்கள் அனைத்தும் தொடர்ந்து இன்றுவரை நடைபெற்று வருவதையும் காண்கிறோம். மனித இனம் ஒன்றுபட, இணைந்து நலம் பெற, வேற்றுமை நீங்க, பசியும் பிணியும் அகல, எல்லாரும் எல்லாச் செல்வமும் பெற்று எழிலுற்று வாழ, உயிரினம் இன்பம் துய்க்க இந்த விழாக்களே அடிப்படை என்பதை யாரும் மறைக்க முடியாது; மறுக்கவும் முடியாது.

—(1975)

சான்றுகள்—

1. தொல்காப்பியம் 2. புறப்பொருள் வெண்பாமாலை 3. சங்க இலக்கியம் 4. காப்பியங்கள் 5. தேவாரம் 6. திருவாசகம் 7. பிற்கால இலக்கியங்கள் பிற.

Ref 1. Encyclopeadia Britanical xlv Edition Vol. 9
2. Castes and Tribes of South India, Thurdston
3. Etymdological Dictionary by T. Burrow& M B. Emeneau

# 6. மஞ்சள்

மஞ்சள் தமிழ்நாட்டில் தொன்றுதொட்டுப் பயிரிடப் பெற்ற ஒரு செடி; தமிழர் வாழ்வொடு பொருந்திய பொருள்; தமிழர்தம் உள்ளும் புறமும் நல்லமுறையில் வைத்துக்கொள்ள அமைந்த மருந்து; தமிழர் சடங்கு களில் முக்கிய இடம்பெறும் ஒன்று. ஆயினும் இன்றைய தமிழ்ச் சமுதாயம் அதைப் போற்றிக் காக்காத காரணத் தாலேயே ஊர்தொறும் மருந்தகங்கள் தேவைப்படு கின்றன.

மஞ்சள் தமிழ்நாட்டில் இரண்டாயிரமாண்டுகளுக்கு முன்பிருந்தே பயிரிடப்பெற்று வந்ததை அறிகிறோம். மருத நிலத்தில் சிறப்பாகவும் குறிஞ்சி போன்ற பிற நிலங் களில் பரவலாகவும் பயிரிடப்பெற்ற ஒரு கிழங்கு வகையே இது. இதன் வேறு பெயர்கள் அரிசனம், காஞ்சனி, நீசி, பீதம் என்பன. வடமொழியில் அரித்ரா (Haridra) என்பர். ஆங்கிலத்தில் 'Turmeric' என்பர். தாவர அறிஞர் இதற்கு இட்டபெயர் [Botanical Name]—Curceema Longa என்ப தாகும். இது பூமிக்குள் கிழங்காக அமைந்து விளைவ தாகும்.

இந்த மஞ்சளைக் கப்பு மஞ்சள், கறி மஞ்சள் என இரண்டாகப் பிரிப்பர். கப்பு மஞ்சள் கிழங்கின் நடுவாயமைந்த பெரிய பாகத்தை அதன் சிறு கிளை களாகிய விரல் கிழங்குகளிலிருந்து பிரித்து, உலர்த்தி நல்லெண்ணெயில் பக்குவப்படுத்தி வைப்பர். இதையே மகளிர் உடம்பில் பூசுவதற்குப் பயன்படுத்துவர். கறி மஞ்சள், நடுக் கிழங்கிலிருந்து கிளைத்த விரல் போன்ற வற்றை வேறுபடுத்தி எடுத்து, சாணப்பாலில் வேக வைத்து, பதப்படுத்தி, உணவு வகைக்குப் பயன்படுத்துவ

தாகும். இதை விரல் மஞ்சள் என்றும் கூறுவர். இவ்வாறு மனிதனுக்குப் புற உடலின் தன்மையினைக் காப்பதற்கும் அக உடம்பின் மாசுகளை அகற்றித் தூய்மைப்படுத்து வதற்கும் மஞ்சள் தொன்றுதொட்டுப் பயன்பட்டு வரு கின்றது.

சங்ககால இலக்கியங்களாகிய பத்துப்பாட்டு எட்டுத்தொகை தொடங்கி எல்லா இலக்கியங்களிலும் மஞ்சள் குறிக்கப்பெறுகின்றது. 'சிறுபசு மஞ்சளொடு நடுவிரை தெளித்து' (முருகு 235) முருகனை வழிபட்டதை நக்கீரர் திருமுருகாற்றுப்படையில் குறிக்கிறார். அப்படியே வயலில் அவை அசைந்தாடி வளரும் திறத்தினையும் அழகினையும் சிறுபாணாற்றுப்படை (44), பெரும் பாணாற்றுப் படை (354), போன்றவை குறிக்கின்றன. மதுரைக் காஞ்சியும் (289), பட்டினப்பாலையும் (17), மலைபடுகடாமும் (343), பத்துப்பாட்டில் இம் மஞ்சளின் சிறப்பினையும் அது மக்களால் காக்கப்பெறு பொருளாகப் போற்றப்படுவதையும் குறிக்கின்றன. அப்படியே எட்டுத் தொகையில் நற்றிணையும் (101-1), அகமும் (269-9) இதன் சிறப்பினை விளக்குகின்றன. 'மஞ்சள் அழகு' என்றே பதினெண்கீழ்க் கணக்கில் முதலாவதாய நாலடி (131-2) சுட்டுகிறது. காவிரிப் பட்டினத்தில் இந்த மஞ்சள் விளைவதனைச் சிலம்பு சிறப்புறக் காட்டுகிறது ( 0-74— 11-82). இவ்வாறு சங்ககாலத்தில் சுட்டப்பட்ட மஞ்சள் பிற்கால இலக்கியங்களிலும் மக்கள் வாழ்வியலிலும் பயின்றுவருதலை மிகுதியாகக் காணலாம். எனினும் விரிவஞ்சி இந்த அளவில் அமைந்து. அதன் தொன்மை உணர்ந்து மேலே செல்லலாம்.

தமிழ்நாட்டில் இந்த மஞ்சள் இல்லாத சடங்கு இல்லையே. எதற்கும் மஞ்சளை முதலாக வைத்தன்றோ

சடங்கினைத் தொடங்குவர். மஞ்சள் கடவுளாக—பிள்ளையாராக அமைய அதற்கே முதற்பூசை செய்வர். வெற்றிலைப் பாக்குடன் மஞ்சள் தருவதையே மங்கலமாகக் கொள்வர். சிறப்பு நாட்களில் மஞ்சளை வாயில்தொறும் பூசி, குங்குமப் பொட்டிட்டு மாவிலை வேப்பிலை கட்டிச் சிறப்புச் செய்வர். இம் மஞ்சளை அரைத்துத்தேய்த்து அதைத் தம் உடம்பில் பூசி முழுகுவர். இவை யாவும் கப்பு மஞ்சளேயாகும். இனி, கறிமஞ்சள் அதன் உபயோகத்தைத் தன் பெயரிலேயே காட்டிவிடுகிறது. ஆம்! உணவுக்கென அமையும் கறிகளில் இம் மஞ்சளைக் கலப்பர். அது குடலிலும் பிற உறுப்புகளிலும் உள்ள பூச்சிகளை அகற்றி உடல் நலம் கெடாவகையில் மக்களைக் காப்பாற்றுகிறது. எனவே கப்பு மஞ்சளும், கறி மஞ்சளும் மக்களின் புறத்தையும் அகத்தையும் தூய்மைப் படுத்திப் புற அழகினையும் அகத் தெளிவினையும் தந்து அவர்களை நெடிது வாழவைக்க உதவுகின்றன.

மஞ்சளிலிருந்து எடுப்பதே குங்குமம். இதுவும் மகளிரின் மங்கலப் பொருளாகும். கணவனை இழந்தவர் 'மஞ்சள் குங்குமம் போயிற்றே' என்று கலங்கி அழுவதை நாட்டில் பலர் அறிவர். எனவே இந்த இரண்டும்—தமிழ்நாட்டு மகளிர் வாழ்வின் ஒளிவிளக்கங்களன்றோ!

இன்று குங்குமம் என்ற பெயரில் எதை எதையோ விற்கின்றனர். வெறும் கோதுமை மாவு போன்றவற்றில் பல வண்ணங்களைக் கலந்து 'குங்குமம்' எனப் பெயரிட்டு, பல நிறங்களில் விற்கின்றனர் அப்படியே எதை எதையோ சாந்து என விற்கின்றனர். அவற்றின் நலக்கேடு அறியாதவர்—அவற்றின் வண்ணத்தில் தம்மைப் பறிகொடுத்த நாகரிகம் தோய்ந்த பெண்கள் அவற்றை நெற்றியில் பொட்டாக இட்டு, புண் வரப்பெற்றுப் புலம்புவது

அன்றாடக் காட்சியன்றோ! குங்குமம்—மஞ்சளால் ஆகிய குங்குமம்—சிவப்பு நிறமாக இருக்கும். அதைச் செம்மையாகத் தயாரித்தால் அதன் மணமும் மருந்துத் தன்மையும் கெடாமல் இருக்கும்.

இந்த மஞ்சள் குங்குமம் பெண்கள் அணிவதால் மற்றொரு சிறப்பும் உண்டு. மயக்கும் சக்தியால் (Mesmerism) பெண்களை மயக்கிக்கொண்டு செல்லும் கயவர் திறன் இக்குங்குமம் இட்ட பெண்களிடம் பலிக்காது. அவர்தம் மயக்கும் சக்தியை வெல்லும் ஆற்றல் இந்த மஞ்சள் குங்குமத்துக்கு உண்டு. அதனாலேயே மகளிர் எங்கே வெளியில் சென்றாலும் இக் குங்குமத்தை இட்டுக்கொண்டே செல்வர்.

மற்றும் இந்த மஞ்சளைப் பழுக்கப் பூசி, குங்குமத்தை அகல அணிந்து வெளியே செல்லும்போது, காணும் ஆடவர் இவர்களைத் தெய்வமாகவே போற்றுவர். 'கற்புடைப் பெண்டிர் பிறர் நெஞ்சுபுகாரே' என்ற தமிழ் வாக்கியத்துக்கு இவர்கள் சான்றாக நின்று, கண்டவர் தம்மைக் கடவுளராகக் கருதி ஒதுங்கும் நிலைபெறுவர். ஆனால் இன்று பல பெண்கள் இந்த வழுவா அறத்தை மறந்து, உடல் புறம் தெரியும் ஆடை அணிந்து, மாவாகிய 'பவுடரைப்' பூசி எதையோ பொட்டாக இட்டுத் தெருவில் செல்ல கண்டவர் கண்வலைப்பட்டு, கையகப்பட்டு, கசங்கி அழிய விரும்புவதைக் காண்கின்றோம். இந்த அவல நிலையை மஞ்சளே மாற்றவல்லது.

இவ்வாறு உடல்நலத்தையும் கற்பின் அறத்தையும் ஒருங்கே காக்கும் மஞ்சளுக்கு உள்ள மருந்தின் ஆற்றலையும் எண்ணிப்பார்க்க வேண்டும். மகளிர் உடலில் பூசுவதால் உண்டாகும் ஒருசில பயன்பற்றி அறிந்தோம். மேலும் அவ்வாறு பூசிக் குளிப்பதால் உடல்

பொன்னிறத்தைப் பெறுவதோடு, உடலில் தோன்றும் புலால் நாற்றமும் நீங்கப்பெறுவர். நல்ல பசியினை உண்டாக்கும். இதனால் வாந்தி, கோழை முதலிய குற்றங்களும் தலைவலி, நீரேற்றம், வெள்ளை, சளி ஐவகைவலி, வீக்கம், வண்டுகடி, பெரும்புண் ஆகிய நோய் முதலியனவும் இல்லாமல் நீங்கும். எனவே உடலை முற்றும் காக்கும் ஒரு பெருமருந்தாக இது அமைகின்றது.

இன்று கிராமங்களில் மஞ்சளைப் பொடியாக்கிப் புண்கள் மீது தூவுவதையும், மஞ்சளைச் சாதத்துடன் சேர்த்து அரைத்துக் கட்டிகள் மேல் வைத்துக்கட்டுவதையும் அவற்றால் அவை நீங்கப்பெறுவதையும் காண முடியும். கிராமங்களுக்கு மருத்துவ வசதிகளை விஸ்தரிக்க நினைக்கும் தமிழக அரசு இந்த வகையில் பண்டைத் தமிழ் மரபில் கருத்திருத்தினால் மிக்க பயன் விளையும் என்பது உறுதி.

அம்மை உண்டாகும்போது வேப்பிலையுடன் மஞ்சளை அரைத்து அக் கொப்புளங்களின்மீது தடவி, அதன் வேகம் தணிப்பர், மஞ்சளுடன் ஆடாதொடை இலையினைச் சேர்த்து, கோமயம் இட்டு அரைத்து, சொறி, சிரங்கு, நமைப்பு நீங்கப் பூசுவர், மஞ்சளுடன் சுண்ணாம்பு, பொட்டிலுப்பு இட்டு அரைத்து, சுட வைத்து சுளுக்கு, அடிபட்ட புண் இவற்றிற்குப் பயன்படுத்துவர். பச்சைமஞ்சளை அரைத்துச் சாறு எடுத்து, அட்டைக்கடி, நஞ்சு, புதிய காயப்புண், புண்வீக்கம் இவை நீங்கப் பூசி நலம்பெறுவர்; மஞ்சள் பொடியினை அளவாக (10 அல்லது 12 குன்றுமணி அளவு) நீரொடு உண்டு, வயிற்றுப்பொருமல், வயிற்றுவலி, மாறல் சுரம் முதலியன நீங்கப்பெற்று வன்மை பெறுவர்; அந் நீரை அருந்தின் காமாலை போம் என்பர்.

கிராமங்களில் பலர் தூய வெள்ளாடையினை மஞ்சள் நீரில் நனைத்து உலர்த்தி அதை அணிவதைக் காண்கின்றோம். அதனால் வாதநீர்ச்சுருக்கு, இருமல், நச்சுச்சுரம், மாறாத தினவு, தணிச்சுரம், மலக்கட்டு முதலியன நீங்கும் என்பர். கண்நோய் பெற்றவர் இந்த உலர்ந்த மஞ்சள் துணியினை அடிக்கடி கண்ணில் ஒற்றி அந்நோய் நீங்கப் பெறுவதைத் தமிழ்நாட்டு நகரங்களில் இன்றும் காண்கின்றோம்.

இவ்வாறு பலவகையில் மக்கள் உடலுக்குப் பயன் படுவதோடு மருந்தாக, பொலிவுதரும் பொருளாக, காப்புப் பொருளாக, கற்புப் பொருளாக அமைவதோடு, அவர்தம் வீடுகளைத் தூய்மையாக வைத்திருக்கவும் மஞ்சள் உதவுகிறது. தமிழ்நாட்டில் விழாக்களுக்குப் பஞ்சமில்லை; இதோ சரஸ்வதிபூசை, தீபாவளி, கார்த்திகை, பொங்கல் என்று மாதந்தொறும் விழாக்கள் வருகின்றன. அந்நாளிலெல்லாம் வீடுகளைத் துப்புரவு செய்து எங்கும் மஞ்சள் நீர் தெளிக்கிறோம் (நகரங்களிலும் உண்டு). வாயிற்படிகளுக்கெல்லாம் மஞ்சள்பூசி, அதன்மேற் குங்குமத்தையும் இடுகிறோம். பொங்கல் நாளில் மஞ்சள் செடியினை வைத்து, மஞ்சள் இலையில் சோறு இட்டு, நாம் சூரியனை வழிபடுகிறோம். வெள்ளிக்கிழமைதொறும் மஞ்சள்பூசி குங்குமப் பொட்டிட்டு வழிபடும் பழக்கம் உண்டு. இதென்ன, இவ்வளவு நல்ல மருந்தை வாயிற் படிக்கும் பிற மரங்களுக்கும் இட்டுப் பாழாக்குகிறார்களே என்று எண்ணத் தோன்றும், அந்த எண்ணம் தவறாகும்.

தமிழன் கலைநலம் கண்டவன் கல்லிலும் மரத்திலும் பிறவற்றிலும் நுண்ணிய வேலைப்பாடுகளைச் செய்து அதை என்றென்றும் வாழவைத்துக்கொண்டிருக்கிறான். நாட்டிலும் காட்டிலும் மலையிலும் கோயிலிலும்

காட்டிய கலைநலத்தை வீட்டிலும் நிலைநாட்ட விரும்பினான். வாயிற்படிகளில் பலப்பல சித்திர வேலைப் பாடுகளைச் செய்தான். அவற்றுள் சிறுசிறு முழைகள்—உள்ளீடுகள்—புறைகள் எப்படி எப்படியோ நுணுகி அமைத்தான். அவற்றுளெல்லாம் கால இடையீட்டால் சிறுசிறு பூச்சிகள் தங்கி முட்டையிட்டு, இனப்பெருக்கம் செய்து மக்கள் வாழ்விற்கு ஊறு விளைக்கும் அல்லவா! அவற்றைப் போக்கவே இந்த மஞ்சள் பூச்சு. இது அந்த நச்சுப் புழுப்பூச்சிகளை வளரவிடாமல் அழிப்பதோடு, வாயில்களுக்கு அழகையும் நல்லமைப்பையும் தருகின்றதல்லவா!

இன்னும் எத்தனையோ வகையில் இதன் உபயோகத்தையும் பயனையும் எழுதிக் கொண்டு போகலாம். எனினும் இந்த அளவோடு நின்று, திசைமாறி எங்கோ எதை எதையோ நாடிச்செல்லும் தமிழ் மக்களை —சிறப்பாக மகளிரை—வெற்று நாகரிக வேடிக்கை வாழ்வினை மறந்து—மஞ்சள் குங்குமத்தோடு அமைந்த நல்ல உடல்நலத்தையும் உள உரத்தையும் செம்மை வாழ்வினையும் நீண்ட ஆயுளையும் பெற்றுச் சிறக்க முயலுங்கள் என்று வேண்டி அமைகின்றேன்.

—உலகம்

## 7. நல்ல உள்ளம்

உலக நிகழ்ச்சிகள் அனைத்துக்கும் அடிப்படைக் காரணம் மனித உள்ளமே. உள்ள நெகிழ்வும் உணர்வும் பிற உயிர்களுக்கு இருப்பதாக அறிஞர்தம் ஆய்வுகள் ஓரளவு விளக்கினாலும் அவற்றைச் செயலாற்றும் திறனும் நெறியும் அப் பிறவுயிர்களுக்குக் கிடையா. எனவே மனித

உள்ளமும் அதன்வழி அரும்பும் உணர்வுமே உலக நெறியை ஒருவழிப்படுத்துகின்றன என அறியலாம்.

உலகில் எத்தனையோ கோடி மக்கள் வாழ்கின்றார்களே. அவர்தம் உள்ளம் அத்தனையும் எப்படி உலகை ஒருவழிப்படுத்த இயலும் என்ற ஐயம் எழலாம். ஆயினும் மக்கள் அனைவரும் அந்த உள்ள உணர்வைச் செயல்படுத்த நினையா நிலையும் நினைப்பினும் செயலாற்ற முடியாச் சூழலும் எங்கோ ஒருசில மக்களின் உணர்வுவழி உலகம் செல்லக் காரணமாகின்றன. அந்த ஒருசில உள்ளங்கள் நல்ல உள்ளங்களாக அமைந்துவிடின் நாடும் உலகமும் நன்மை பெற்றுச் சிறக்கும்! அல்லாவிடின் என்னாகும்? எடுத்தியம்ப வேண்டா!

இந்த உலகினை நல்வழியினில் ஆற்றுப்படுத்தும் நல்ல உள்ளங்களை அன்றுதொட்டுத் தமிழறிஞர் எண்ணிப் பார்த்துப் பார்த்து ஏட்டிலும் வடித்துச் சென்றுள்ளனர். உள்ளம் தூய்மையாக இருந்து அதன் வழியே செயலாற்றுவதே எல்லா அறங்களுக்கும் மேம்பட்டதாகும் என்ற உண்மையை வள்ளுவர்,

'மனத்துக்கண் மாசிலனாதல் அனைத்தறன்'

என்று வரையறுத்துள்ளார். அப்படியே நல்ல செயல்கள் ஆற்றுவதற்கான அடிப்படையாய உள்ளம் மக்களுக்கு அமையவேண்டும் என்ற உண்மையினையும் அவ்வுள்ளம் நிலை கெட்டு அல்லாதனவற்றை நினைக்கும் அவல நிலையினையும் வள்ளுவர் பலவிடங்களில் சுட்டிக் காட்டத் தவறவில்லை. 'உள்ளுவ தெல்லாம் உயர்வுள்ளல்', 'உள்ளத்தால் உள்ளலும் தீதே பிறர் பொருளைக் கள்ளத் தால் கள்வே மெனல்' என்பன அவர் வாக்குகளன்றோ,

இந்த நல்ல உள்ளத்தை நாட்டில் எப்படித் தேடிக் கண்டுபிடிப்பது? இந்த வினாவுக்கு விடையாக அன்று

முதல் இன்றுவரை எண்ணற்ற வகையில் விடை காட்டி வருகின்றனர். உலகமே அந்த நல்லுள்ளத்தாலும் அதன் வழி அரும்பும் சான்றான்மையாலுமே வாழ்கின்றது என்ற உண்மையை வள்ளுவர் பல பாக்களில் காட்டு கின்றார். இந்த நல்லுளத்தாரை எண்ணித்தான்,

"எவ்வழி நல்லவர் ஆடவர்
அவ்வழி நல்லை வாழிய நிலனே"

என்று பண்டைப் புலவர் பாரினை வாழ்த்துகின்றார்.

இந்த நல்லுளத்தில் அரும்பும் உணர்வு உலகை வாழ்விக்கின்றது. அவ்வுணர்வில் இன்னார் இனியார் என்ற வேறுபாடு இல்லை—உற்றார் அற்றார் என்ற மாறுபாடு இல்லை; மாற்றோரும் இல்லை; கேளிரும் இல்லை. அவ்வுள்ளத்துக்கு ஓரறிவுடைய உயிரும் ஆறறிவுடைய உயிரும் ஒன்றே. உளத்தன்மையில் வேறுபடினும் உயிர்த்தன்மையில் புல் முதல் மனிதன் வரையில் அனைவரும் ஒன்றே என்ற உண்மையைப் பண்டைய புலவர் பாராட்டியுள்ளனர். இன்றைய அறிவியலறிஞர் உணர்ந்து காட்டுகின்றனர். நாத்தழும்பிருப்பப் பாடாதாயினும் முல்லைக்குத் தேர் ஈந்தது பாரியின் நல்ல உள்ளம். மயிலுக்குப் போர்வை ஈந்தது பேகன் உள்ளம். 'எல்லார்க்கும் கொடுமதி' என்று அறிவுறுத்தியது புலவர் உள்ளம். 'வாடிய பயிரைக் கண்ட போதெல்லாம் வாடியது' வள்ளலார் உள்ளம்.

இந்த நல்ல உள்ளங்கள்தாம் நாட்டில் விழாக்களைத் தோற்றுவிக்கக் காரணமாயின. 'நாம் வாழ்வது இருக்கட்டும்; நாடு வாழ்கிறதா?' என்ற அவ்வுள்ளங்கள் எழுப்பிய வினாவுக்கு விடைகளே இந்த விழாக்கள்.

''பசியும் பிணியும் பகையும் நீங்கி
வசியும் வளனும் சுரக்கென வாழ்த்தி'

வள்ளுவ முதுமகன் இந்திரவிழாவினை உலகுக்கு அறிமுகப் படுத்துகிறான் என்று இருபெருங் காப்பியங்களும் நமக்கு உணர்த்துகின்றன. ஆம்! எல்லா நாட்களிலும் மக்கள் அவலம் நீங்கி நலமெலாம் பெற்று வாழ வேண்டிய வர்களே! ஆயினும் எத்தனையோ எதிர்பாராத சூழல் களாலும் பிறவற்றாலும் அந்நிலை முற்ற இல்லையா யினும் விழாக்காலங்களிலாயினும் அந்த நிலை அரும்ப வேண்டும் எனக் கருதிய அந்த நல்ல உள்ளங்கள் அப்படி நினைக்கின்றன.ஆம்! நாட்டில் பசியும் பிணியும் பகையும் இல்லாத நாளே விழா நாள்! அப்படியே மழை பொழிந்து அதன்வழி வளங்கொழிக்கக் கண்டு மகிழும் நாளே விழாநாள்! தமிழர்தம் விழாநாள்கள் பலவற்றுள்ளும் சிறந்த இப் பொங்கல் நாள் இந்த அடிப்படையில் அமைந்ததேயாகும்.

இத்தகைய நல்ல உலகைக் காண விரும்பும் நல்ல உள்ளங்கள் தம் மாசினை முதலில் போக்கிக்கொள்ள வேண்டும்.புறத் தூசினையும் அகத் தூசினையும் 'தீயினில் தூசாகச்' செய்து இருவிடத்தும் தூய்மை காணும் நாளே போகி நாள். இன்னலுக்கும் இடருக்கும் 'போக' எனப் போகியிட்டபின், அடுத்த நல்ல நாளில் உள்ளங்கள் மகிழ்ச்சியினில் பொங்குகின்றன. அந்தப் பொங்கிய நல்லுளத்தில் பரந்த உலகம் இன்பில் திளைக்கவேண்டும் என்ற உணர்வு அரும்ப, உலகைச் சுற்றி நோக்கிடுகின்ற விழாவாகப் பொங்கல் அமைகின்றது. மனிதன் மட்டும் இன்பில் திளைத்து இனிமையில் பொங்கினால் போதாது, 'எல்லா உயிரும் இன்புற்றிருக்க நினைப்பதுவே நல்லது' என்ற உணர்விலே மாட்டுப் பொங்கல் அமைகின்றது.

அடுத்து, அதையும் தாண்டி, அனைவரும் அனைத்தும் இன்பில் திளைக்கின்றனரா—திளைக்கின்றனவா என்ற நிலை காணும் பொங்கலாக அமைகின்றது. இவ்வாறு மாசு நீங்கிய உள்ளம் காணும் நானிலத்தை வாழ வைக்கும் நல்விழாவாக இந்தப் பொங்கல் விழா அமைகின்றது.

வற்றா வளம் வாய்ந்த பொன்னார் தமிழகத்தில் இந்த ஆண்டில் இயற்கைச் சூழலால் வசியின்றி வளம் சுருங்கினாலும் நல்ல உள்ளங்கள் அதைக் கண்டு நைந்தாலும்—வருங்காலம் வளமாகும் நிலையில் நாம் உள்ளோம் என்பதை மறக்கலாகாது. அடுத்துவரும் பொங்கல் விழா 'வசியும் வளனும்' சிறக்கும் விழாவாக அமையவேண்டும் என்று நல்ல உள்ளங்கள் வாழ்த்துகின்றன. எனவே இடுக்கண் வருங்கால் இனிய முகத்துடன் சிரித்து, வருங்காலத்தில் வையம் வற்றா வளம் பெற வேண்டும் என வாழ்த்தும் நல்ல உள்ளங்கள் நமக்கு வழி காட்டிகளாக அமைய நாம் முன்னேற வேண்டும். முன்னேறுவோம் என்பது உறுதி.

அகத்தும் புறத்தும் மாசகன்ற நல்ல உளத்தொடு நாம் அனைவரும் இந்தப் பொங்கல் நன்னாளில் நாடு 'வசியும் வளனும் சுரந்து' ஓங்கவேண்டும் என வாழ்த்துவதுடன் அந்த நல்ல வாழ்வுக்கு அயராது உழைக்கும் ஆக்கப் பணியை மேற்கொள்ள உறுதிபூணுவோமாக! உள்ள உரமும் உடல் உழைப்பும் ஒருங்கே அமையின் நாடு நாடாகும்—நாமும் தலை நிமிர்வோம்! இந்த நல்ல உணர்வோடு—நல்ல உள்ளங்கள் உறவாடும் நிலையில் இப் பொங்கல் விழாவைக் கொண்டாடி புத்துலகப் பொன்வாழ்வை நோக்கி நடப்போமாக! வாழ்க நல்ல உள்ளம்! வளர்க வசியும் வளனும்!

*1975 — பொங்கல் மலர்*

# 2. நாட்டின் நலன் கண்டவர்

## 8. திரு. வி.க.-சில நினைவுகள்

நான் அப்போது வாலாஜாபாத் இந்து மத பாடசாலையில் ஆறாம் வகுப்பில் படித்துக்கொண்டிருந்தேன். என்னை நான் முற்றும் அறியாத காலம் 1925—26 என எண்ணுகிறேன். அப்போது காஞ்சிபுரத்தில் காங்கிரஸ் மாநாடு நடைபெற்றது. (மாநாட்டின் விளைவுகள் தமிழ் நாட்டில் பல வேறுபாடுகளை உண்டாக்கின எனப் பிறகு அறிந்தேன்). அந்த மாநாட்டில் (1926) கலந்துகொண்ட நால்வரை வாலாஜாபாத் பள்ளிக்கு திரு.வா.தி. மாசிலாமணி எனும் பள்ளியின் நிறுவனர் அழைத்துவந்தார். இளங் குழந்தைகள் பலர் பேசினர். நானும் பேசினேன். சாதி ஒற்றுமையா அல்லது சாதி வேற்றுமையா என்பது பொருள். நான் ஆசிரியர் தந்த குறிப்பின்படி சாதி ஒற்றுமையைப்பற்றி வற்புறுத்திப் பேசினேன். என் பேச்சு முடிந்ததும் தலைமைவகித்த டாக்டர் வரதராசலு நாயுடு அவர்கள் அவருக்கு இட்ட மாலையினை எடுத்து, என் கழுத்தில் இட்டு, 'நீ வருங்காலத்தில் சிறக்க உயர்வாய்' என வாழ்த்தினார். பக்கத்தில் இருந்தவர் என்னை முதுகில் தட்டிக் கொடுத்து 'உனக்கு நல்ல எதிர்காலம்' இருக்கிறது என ஆசி கூறினார். அவர்தாம் திரு.வி.க. எனப் பிறகு ஆசிரியர்கள் சொல்ல அறிந்தேன். வந்த

நால்வருள் மற்ற இருவர் எஸ்.சீனிவாச ஐயங்கார், இராஜாஜி ஆகியோர் ஆவார்கள். (திரு.வி.க. வாழ்க்கைக் குறிப்பு-பக்கம் 338) எனவே என் பதினோராவது வயதில் முதல்முதல் நான் 'திரு.வி.க.' அவர்களைச் சந்தித்தேன். ஆனாலும் அப்போது அவரைப்பற்றி எனக்கு ஒன்றும் தெரியாது.

பின் நான் செங்கற்பட்டில் உயர்நிலைப் பள்ளியில் படித்துக் கொண்டிருந்தபோது நாட்டில் விடுதலைக் கிளர்ச்சி எழ, காந்தி அடிகளாரின் தண்டி உப்புச் சத்தியாக்கிரகம் நடைபெற்ற காலத்தில் திரு.வி.க. நவசக்தியின் எழுத்துக்களும், பிற நூல்களும் (சிறப்பாக மனித வாழ்க்கையும் காந்தியடிகளும்) என் உள்ளத்தைத் தொட்டன. அதன் பிறகு ஓரிருமுறை சென்னை வந்தபோது அவர்கள் இல்லத்தில் சென்று அவர்களைக் கண்டுவந்தேன்.

1933-ல் எங்கள் ஊர் இறைவனுக்கென அமைத்த மண்டபத்தினை அவர்கள் கையால் திறக்கவேண்டும் எனக் கேட்டுக் கொண்டேன். அவர்களும் இசைந்து ஊருக்கு வந்து ஒருநாள் முழுதும் தங்கினார்கள். அப்போதுதான் அவர்களுடன் நெருங்கிப் பழகிப் பேச வாய்ப்பு வந்தது. அவர்கள் கூறிய அறிவுரைகள் பல—விளக்கங்கள் பல. அவ்வாறே காஞ்சிபுரம் குமரன் அச்சகத் திறப்புவிழா, திருவதிகை சைவசித்தாந்த சமாசம் (அவர் தலைவர்) ஆகிய நிகழ்ச்சிகளில் அவரோடு உடன் உறையும் வாய்ப்பினால் அவர் என்னை நன்கு புரிந்து கொண்டார். நான் அவரை நன்கு உணர்ந்து கொண்டேன்.

பின் 1941-ல் என் அன்னையார் மறைந்தபோது அன்னையின் இறுதி நாள் சடங்கினைத் 'திரு.வி.க.' அவர்களே வந்து நடத்தி வைத்தார்கள். தம்முடைய

திருவாளர்கள் சச்சிதானந்தம் பிள்ளை, தெ. பொ. மீனாட்சிசுந்தரனார், ரா.பி. சேதுப்பிள்ளை, கோவை இராமச்சந்திரன் செட்டியார், சுந்தர ஓதுவார் மூர்த்திகள் புரிசை சு முருகேச முதலியார் ஆகியோரையும் வரச் சொல்லி, ஒரு பெரிய மகாநாட்டினையே என் சிற்றூரில் நடத்திவைத்தார். ஓரிரு முறை நான் காஞ்சியில் இருந்தபோது என் குடிலுக்கு வந்து தங்கியும் இருக்கிறார்.

பிறகு நான் 1944-ல் சென்னைப் பச்சையப்பனில் பணி ஏற்றபோது, அவரை வணங்கி அவர் நல்வாழ்த்தினைப் பெற்றே பதவி ஏற்றேன். அதுமுதல் அடிக்கடி அவர்கள் வீட்டிற்குச் சென்று வேப்பமரத்தடியில் இருந்து பலப்பல பொருள்களைப் பற்றியெல்லாம் பேசியதுண்டு. அப்போது நான் அரசியலில் இருந்த காரணத்தால் அரசியல் பற்றியும் பேசுவோம். தொழிலாளர் நலன் பற்றியும் பேசுவதுண்டு. நான் நடத்திய 'தமிழ்க் கலை'யில் தொழிலாளர் பற்றிய கட்டுரைகளும் பாடல்களும் இடம் பெறும். பின் சைவசித்தாந்த சமாசத்தின் துணைச் செயலாளனாகவும் அதன் இதழாகிய சித்தாந்தத்தின் துணை ஆசிரியனாகவும் இருந்த காரணத்தால் ஒவ்வொரு மாதத்திலும் ஏழெட்டு நாட்கள் அச்சகப் பணியின் பொருட்டு (அது சாது அச்சுக் கூடத்தில் அச்சிடப் பெற்றது) அங்கே தங்குவேன். அப்படியே சென்னையில் நான் 'தமிழ்க் கலை'யினை வெளியிட்ட சில ஆண்டுகளிலும் (சாது அச்சுக் கூடத்தில் அச்சிடப்பெற்றது) அங்கே பல நாள் தங்குவேன். அப்போதெல்லாம் திரு.வி.க. கூறிய அறிவுரைகளும் ஆக்க உரைகளும் அளப்பில.

இவ்வாறு நெருங்கிப் பழகிய அந்த நல்லவர் தொடர்பு, கடைசிவரையில் இருந்தது. நானும் டாக்டர்

'மு.வ., அவர்களும் அடிக்கடி அங்கே சென்று வருவோம். எதிர் வீட்டிற்கு மாற்றப் பெற்ற போதும் நாங்கள் செல்லத் தவறவில்லை. இறுதியில் சில நாட்கள் பல மணி நேரம் அவர் அருகிலேயே அமர்ந்திருந்தோம். இறுதி ஊர்வலத்திலும் (சுமார் 4½மைல் நீளம்)—எல்லாக் கட்சியினரும்—சமயத்தினரும்—எல்லா இனத்தினரும் —யாவரும் கலந்து கொண்ட அந்த ஊர்வலத்தில்—இறுதி யாத்திரையில் கலந்து அவர் உயிரன்றி உடலும் அமைதியுறக் கண்டு வந்தோம். இவ்வளவு நெருங்கிப் பழகிய போதிலும் நான் அவருக்கு வேண்டியவன் என்றோ, நெருங்கியவன் என்றோ, யாரிடமும் நான் காட்டிக் கொள்வதில்லை; சொல்லுவதில்லை. பேசாமல் ஒதுங்கிவிடுவேன்.

இப்படி 1925 முதல் 1953 வரை அவரிடம் பழகிய பான்மையால் நான் பெற்ற பலன்கள் பல. எனக்கு ஆங்கிலத்தில் நல்ல அழகான சான்றிதழ் ஒன்றினை அவர் கையொப்பமிட்டுத் தந்துள்ளார். அப்படியே ஒரு நூலும் அளித்துள்ளார். அவர் எழுதிய நூல்கள் சில அச்சேறுவதன் முன்பே எங்களுக்கு அவர் படித்துக் காட்டுவார்; அல்லது எங்களைப் படிக்க விடுவார். அவர் பேச்சுகள் சில சமயம் அச்சாகும் போது, அவற்றைப் படிக்கவும் செய்வோம். இவ்வாறு என்னைப் போன்று பல லட்சக்கணக்கான மக்கள் உள்ளங்களில் வாழும் அவருக்கு இன்று தமிழக அரசு நூற்றாண்டு விழா கொண்டாடுவது சாலப் பொருத்தமாகும்.

திரு வி.க அவர்களை நினைக்கும்போது, அவர் தம் தமையனார் உலகநாத முதலியாரும் அண்ணியாருமே என்முன் நிற்கின்றனர், ஆம்! அவர்கள் திரு.வி.க.வினைக் 'கண்ணை இமை இரண்டும் காப்பது போல்' கட்டிக்

காத்திராவிட்டால் இன்று இந்த நூற்றாண்டு விழாவினை நாம் கொண்டாட மாட்டோம். 'சின்னவர்' அல்லது 'சின்ன ஐயா'வைப் பெரியவரும் அவர்தம் துணைவியாரும் ஒருவித கவலையும் சேராவகையில் போற்றிக் காத்தனர். வந்தவர்களோடெல்லாம் வேப்பமரத்தடியில் திரு.வி.க பேசிக்கொண்டும், வழி காட்டிக் கொண்டும், அறிவுரை கூறிக் கொண்டும் இருக்க, பெரியவர் பின் அறையில் இருந்து கொண்டு நவசக்தி, அவர்தம் நூல்கள் முதலியவற்றின் 'புரூப்' களைத் திருத்திக் கொண்டிருப்பார். அண்ணியார் முதல் மாடி மேலே இருந்து அந்தச் சிறிதான (2அடி அளவே இருக்கும்) படியில் அடிக்கடி வந்து அவர்களைக் கண்டு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்வர். தேவையானபோது கீழே இருந்த சாது அச்சுக்கூட 'போர்மேன்' நாராயண சாமியைக் கூப்பிட்டு அண்ணியார் அவர்களுக்கு வேண்டியதைக் கொடுத்து உதவுவார்கள். இப்படி 'சின்னவர்' பாதுகாக்கப்பட்டதாலேயே அவர் எந்தக் கவலையுமின்றி எல்லாருக்கும் உபதேசம் செய்யும் பெரியவரானார்; இராயப்பேட்டை முனிவர் ஆனார். ஒரு நிகழ்ச்சியினைச் சுட்டிக் காட்டலாம் என எண்ணு கிறேன். மாலை நான்கு மணி அளவில் அண்ணியார் சிறிய படியில் பாதி இறங்கி வந்து 'நாராயணசாமி, சின்னய்யா இன்று வெளியே போக வேண்டுமல்லவா?' என்பார்கள். நாராயணசாமியும் 'ஆமாம் அம்மா! பெரிய ஐயா ஏற்பாடு செய்துவிட்டார்கள்' என்பார். அண்ணியார் திரும்பிமேலே சென்று விடுவார்கள். என்ன ஏற்பாடு? யாருக்கும் புரியாது தான்.

திரு.வி.க. அவர்கள் அடிக்கடி கூட்டங்களில் தலைமை வகிக்கவோ பேசவோ மாலை வேளைகளில் வெளியே செல்வார். அழைக்க மற்றவர்கள் வந்தாலும் வேண்டா

மென்று சொல்லுவதோடு அவர்களிடம் போக்குவரத்துக்குக் கூடக் காசு வாங்க மாட்டார்கள். பேச்சுக்கு இவ்வளவு என்று கேட்பதும் ஒரே ஊரில் மூன்று நான்கு நிகழ்ச்சிகள் இருப்பினும் மூன்று நான்கு இடத்தும் போக்குவரவுச் செலவு பெறுவதும் போன்ற 'நாகரிகம்' அவர் அறியாதது. எனவே எதற்கும் காசு பெறமாட்டார். ஆனால் சில சமயங்களில் பஸ் செலவுக்கு எனக் காசு எடுத்துக் கொள்ளாமலேயே 'பஸ் ஸ்டாண்டு' வரையில் வந்து நினைத்துக் கொண்டு பிறகு வீடு சென்று காசுடன் புறப்படுவார். 'பஸ் ஸ்டாண்டு' அவர் வீட்டுக்குப் பக்கத்திலேயே இருந்தது. சில சமயம் 'பஸ்' ஏறிய பிறகு பையைத் துழாவிக் காசு கொண்டுவராததை உணர்வார். எனினும் அவரைப் பலரும் அறிந்துள்ளமையின் 'பஸ்' சில் யாராவது அவர் போகுமிடத்துக்கு 'டிக்கெட்' எடுத்துத் தருவார்கள். இந்தச் சிக்கலைத் தவிர்ப்பதற்கு அண்ணனாரும் அண்ணியாரும் ஒரு ஏற்பாடு செய்து வந்தனர். அவர் புறப்படுமுன் அவர் போட்டுக் கொண்டு போக இருக்கும் 'சொக்கா'யினை எடுத்து மாட்டி, அதில் இரண்டு ரூபாய்க்குச் சில்லறையைப் போட்டு வைப்பார்கள். அந்தக் காலத்தில் சென்னையில் எங்கே சென்று வந்தாலும் ஒரு ரூபாய்க்குமேல் செலவு ஆகாது. இதை அண்ணா பல வேலைகளுக்கு இடையில் செய்ய மறந்தாலும் அண்ணியார் மறப்பதில்லை. இதைத்தான் முன்னே 'ஏற்பாடு' என்று சொன்னேன். இது ஒரு எடுத்துக்காட்டு. இப்படி எல்லா வகையிலும் திரு.வி.க.வைக் கண்ணெனஅண்ணலாரும் அண்ணியும் போற்றிய காரணத்தால்தான் நாம் இன்று நூற்றாண்டு விழாவினைக் கொண்டாடும் அளவுக்கு அவர் புகழ் பெற்றார். அவருடைய பேரப்பிள்ளைகள் என்று இப்போது நாம் அழைக்கும் அனைவரும் உலகநாத

முதலியார் பேரப்பிள்ளைகளேயாவர் (இருபெண்கள் வழியே). திரு.வி.க.வின் பிள்ளைகள் யாரும் வாழவில்லை.

இனி திரு.வி.க.வை நினைக்கும்போது பெரியார் அவர்தம் உருவும் என்முன் நிழலிடுகின்றது. பெரியாரைத் தந்தை என்றால் திரு.வி.க.வைத் தாய் என்போம். அந்தத் தாய்க்கும் தந்தைக்கும் எத்தனையோ வகையில் பிணக்குகளும் மாறுபாடுகளும் இருந்தபோதிலும் இருவருக்கும் குறிக்கோள் ஒன்றாக இருந்தமையின் அவர்கள் கடைசிவரை இணைந்தே இருந்தார்கள். அவர்கள் குறிக்கோள்தான் என்ன? ஆம். 'அவர்தம் மக்கள் அனைவரும் வாழவேண்டும்' என்பதே. இருவருக்கும் சொந்தக் குழந்தைகள் கிடையா. ஆயினும் தமிழ் நாட்டு மக்கள் அனைவரையும் தங்கள் குழந்தைகளாகவே பாவித்து, அவர்கள் வாழ்க்கை உயரவே இருவரும் அயராது பாடுபட்டு உழைத்தனர். பாடுபட்ட வழிகள் வேறாக இருந்தாலும் குறிக்கோள் ஒன்றே!

இன்று நாட்டில் உள்ள திராவிட இயக்கத்துக்கு வித்திட்டவர் தந்தை பெரியார் என்றால் அதற்குப் பெயரிட்டவர் தாய் 'திரு.வி.க.' தாய் இட்ட பெயரை இன்று ஊர் இட்டு அழைக்கின்றது. அவ்வளவே! எப்படி? பெரியார் முதலில் தமிழர் இயக்கம் தொடங்கி, 'தமிழ்நாடு தமிழருக்கே' என்ற முழக்கத்தை நாடு எங்கும் எழுப்பினார். அதைப் பலபேர் ஏற்றாலும் சிலர் அவருக்கு விரோதமாக 'நீ தமிழன் அல்லன், நீ 'தமிழ்நாடு தமிழருக்கே' என்று முழங்கி எங்களை ஏமாற்றாதே' எனப் பேசக் கிளம்பினர். எனவே தந்தை பெரியார் சென்று அன்னை திரு வி.க. வுடன் ஆலோசித்தார். திரு.வி.க. அவர்களே 'திராடநாடு திராவிடருக்கே' என்ற முழக்கம் செய்யச் சொன்னார். ஆம்! அந்த வேப்பமரத்தடியிலேதான் இந்த முடிவு

எடுக்கப் பெற்றது. பெரியார் வந்து சென்ற அன்று, அவர் சென்ற சிறிது நேரத்துக்கெல்லாம் நானும் டாக்டர் மு.வ. அவர்களும் திரு.வி.க. வினைப் பார்க்கச் சென்றோம். அவர்களே இந்த முடிவினை எங்களுக்குச் சொன்னார்கள். இவ்வாறு பலவகையில் 1926ம் ஆண்டின் காஞ்சிபுர மாநாட்டிற்கு முன்பும் அதற்குப் பின்பும் தந்தையும் தாயும் பலவகையில் ஒன்றித் தமிழ் நாடும் தமிழ் மொழியும் தமிழர் நலமும் வாழப் பாடுபட்டனர். முன் தந்தையின் நூற்றாண்டு விழா நடந்து முடிவுற்றது. இன்று தாயின் நூற்றாண்டு விழா தொடங்குகின்றது.

திரு.வி.க. தமக்கென ஒன்றும் சேர்த்து வைத்துக் கொள்ளாதவர். தன்னுடையது என்று எதையும் கூறிக் கொள்ளாதவர். கடைசிக் காலத்திலும் பலர் வலியவந்து உதவி செய்ய நினைத்த போதும் வேண்டாம் என விலக்கியவர். டாக்டர்.மு.வ. அவர்கள் சென்னைப் பல்கலைக் கழகத்தில் பாடநூல் குழு உறுப்பினராகவும், ரா.பி.சேதுப் பிள்ளை அவர்கள் தலைவராகவும் இருந்த காலத்தில் திரு.வி.க.விடம் நாங்கள் நேரில் சென்று, 'தங்கள் நூல் ஒன்றினைப் பல்கலைக் கழகப் பட்டப்படிப்புக்குப் பாடமாக வைக்க விரும்புகிறோம்' என்று பலமுறை வற்புறுத்தி வேண்டினோம். ஆயினும் அவர்கள் இருக்கும் வரையில் அதற்கு இசைவினைத் தரவில்லை. அவ்வாறு பாடமாக வைப்பின் வரும் ஒரு சில ஆயிரங்கள் அவர்தம் கடைசிநாளில் பயன்படுமே என்று நாங்கள் செய்த முயற்சி பலன்தரவே இல்லை. ஆயினும் அவர் மறைந்த பிறகு நான் பாடநூற் குழுவின் தலைவராக இருந்தபோது அவருடைய 'முருகன் அல்லது அழகு' என்ற நூலைப் பாடமாக வைத்து மன நிறைவு கொள்ளவேண்டி இருந்தது.

'தனக்கென வாழாப் பிறர்க்குரியவராக' வாழ்ந்த திரு.வி.க.வினைப் பலரும் பல கோணங்களில் கண்டு, பழகி, பேசி, எழுதி வருகிறார்கள். அதை எண்ண எனக்குத் திருக்கோவையாரின் பாயிரப் பாடல்தான் நினைவுக்கு வருகிறது. ஒரே நூலாகிய திருக்கோவை யாருக்கு ஒவ்வொருவரும் தத்தம் கொள்கைக்கும் கருத்துக் கும் ஏற்ப உரை கண்டு ஒவ்வொரு நிலையிலும் தத்தம் கொள்கையினைத் தாங்கும் ஒரு நூல் அது என மதிப்பிட்டனர் என்கிறது பாயிரம். இதோ அந்தப் பாடல்

**'ஆரணங் காண் என்பர் அந்தணர் யோகியர் ஆகமத்தின்**
**காரணங் காண் என்பர் காமுகர் காமநன் நூலதென்பர்**
**ஏரணங் காண் என்பர் எண்ணர் எழுத்தென்பர் இன்**
**புலவோர்**
**சீரணங் காய சிற்றம்பலக் கோவையைச் செப்பிடினே'**

என்ற பாடல், மணிவாசகர் தம் திருக்கோவையாரைப் பல கோணங்களில் நம்மைக் காண வைக்கிறது. திரு.வி.கவும் திருக்கோவையார் போன்றவரே. அரசியலில் அனைத்துக் கட்சியாரும் தம்மைச் சேர்ந்தவர் என்றனர். தொழிலாளி தம் துயர் தீர்க்க வந்த தீரர் என்றனர். சைவர்கள் அவரைச் சைவர் என்றனர். பிற சமயத்தவர் தத்தம் மதச் சார்பு உடையவர் என்றனர். பெண்கள் தம் பெருமை பாட வந்தவர் என்றனர். ஏழைகள் தங்களை வாழ வைத்த தெய்வம் என்றனர். அரசர் போன்ற பெருஞ் செல்வர்களும் அவரை நாடி வந்து வணங்கி வாழ்த்தினைப் பெற்றுச் சென்றனர். அறிஞர் புலவர் என்றனர். கவிஞர் நல்ல கவி என்றனர். குழந்தைகள் எங்களுக்குப் புரியும் தமிழில் பேசும் புண்ணியன் என்றனர். சமரச ஞானிகள் எங்கள் தலைவர் என்றனர்.

இல்லறத்தார் நல்லறம் காட்டும் தலைவர் என்றனர். பெண்கள் எங்கள் அரண் - காப்பு என்றனர். துறவோர் எங்கள் ராயப்பேட்டை முனிவர் என்றனர். இப்படி எல்லாரும் ஒரே முகமாகப்போற்றப் பெற்ற ஒரு மனிதரை இதுவரை நாம் கண்டதில்லை. இனியும் காண்போமா என்பதும் தெரியவில்லை.

இன்னும் எத்தனையோ நினைவுகள் என் முன் வருகின்றன. இராஜாஜி, சீனிவாச ஐயங்கார் போன்ற தமிழ் நாட்டு அரசியல் தலைவர்கள், திலகர், காந்தி போன்ற வடநாட்டு அரசியல் தலைவர்கள், ஞானியார், கதிர்வேற் பிள்ளை போன்ற சமயத் தலைவர்கள், அறிவறிந்த தமிழ்ப் புலவர்கள். சைவ, வைணவ, கிறிஸ்தவ. இஸ்லாமிய, பௌத்த, சமணத் தலைவர்கள், வாடியா போன்ற தொழிலாளர், அன்னிபெசன்ட், அசலாம்பிகையார் போன்ற பெண் தலைவர்கள் நாள்தோறும் அவரை நாடியும் தேடியும் வந்தும், கண்டும், கேட்டும், உணர்ந்தும், உணர்த்தியும், வாழ்ந்து காட்டியும் அவருடன் நின்ற நிகழ்ச்சிகள் பல. குள்ளச் சாமியார் என்ற (சண்முகானந்தா) துறவியார் கடைசிக்காலத்தில் அவருடன் கூடவே இருந்தனர். அவர்களுடன் பழகிய நிகழ்ச்சிகள்—பேசிய பேச்சுக்கள்—செயல்கள் பலவற்றை அவரே தம் வாழ்க்கைக் குறிப்பில் காட்டியுள்ளார், காட்டாதன பல.

இவ்வாறு எல்லாரும் எல்லா வகையிலும் போற்றப் பெற்ற வகையில் வாழ்ந்த இராயப்பேட்டை முனிவர் திரு. வி. கலியாண சுந்தரனாருக்கு நாம் நிலைத்த நினைவாலயம் எடுக்கக் கடமைப்பட்டுள்ளோம். என்னால் கூடியவரை அவர் பெயர் நிலைக்க ஒரு சில செயல்களை மேற்கொண்டேன். நான் செயலாளனாக இருந்து தொடங்கிய (டாக்டர். மு.வ., டாக்டர் சுந்தரவதனம்

போன்றோர் தம் உதவியுடன்) பள்ளியினைத் திரு.வி.க பெயரால் அமைக்க முடிந்தது. அப்படியே எங்கள் பேட்டையில் அமைந்த ஒரு பெரிய பூங்காவினை, ஒரு சிலர் எதிர்ப்புக்களுக்கு இடையில், 'திரு.வி.க.' பூங்கா என அமைக்க முடிந்தது. இப்பூங்கா சென்னை நகராண்மைக் கழக எல்லையில் உள்ளவற்றுள்ளே பெரிய பூங்கா எனச் சொல்லுகின்றனர். அப்படியே எங்கள் எல்லையில் அண்ணாநகர் கிழக்குக் கோடியில் அமைந்த குடியிருப்புக்கு 'திரு.வி க.' குடி என்ற பெயர் அமைக்க முடிந்தது. இன்னும் எவ்வளவோ செய்ய ஆசை. ஆனால் தனி மனிதனாகிய என்னால் செய்ய இயலுமோ!

நூற்றாண்டு விழாவினைக் கொண்டாடும் தமிழக அரசினைத் தாழ்ந்து வேண்டிக் கொள்வேன். அவர் தம் நூல்கள் பல கிடைக்கவில்லை; அவற்றைத் தமிழர் தம் பொதுச் சொத்தாக்கி (வேண்டுமானால் உரியவர்களுக்கு உரிய தொகை தந்து) வெளியிட ஏற்பாடு செய்ய வேண்டும். அவர் வாழ்ந்த வீட்டினை வாங்கி, நூலகம் அமைத்து, பொதுப் பொருளாகக் காக்க வேண்டும். திரு.வி.க.நகர் அமைத்து, திரு.வி.க. பாலம் அமைத்து, 'திரு.வி.க.' பரிசு அமைத்து அவரைப் பாராட்டிய அரசுக்கு இவை பெரிதன்று. இன்னும் எவ்வளவோ பேசவேண்டும் என்ற ஆசை என்னைத் தூண்டுகிறது. எனினும் இப்போது இந்த அளவே போதும் என அமைகிறேன்.

வாழ்க 'திரு.வி.க.'வின் திருப்புகழ்! வளர்க அவர் காட்டிய தொண்டுநெறி.

திரு.வி.க. நூற்றாண்டு விழா (பேச்சு)

# 9. திரு.வி.க.- வாழ்க்கைக் குறிப்பு

திரு.வி.க. நல்ல தமிழ்ப் பரம்பரையின் வழி வந்தவர். அவர் பாட்டனார் காலத்தில்—இராம வேங்கடாசல முதலியார்—திருவாரூரில் வழிவழியாக வாழ்ந்த அவர் மரபு (சோழிய வேளாளர்) சென்னைக்குக் குடியேறிற்று. (இராயப்பேட்டை—புதுப்பேட்டைப் பகுதி). திரு.வி.க. கடைசிவரையில் அந்தப் பகுதியிலேயே இருந்தார்.

தந்தையார்—விருத்தாசல முதலியார்—தாய்—சின்னம்மா—பெரியப்பா—நமசிவாய முதலியார். சென்னையில் அரிசி வாணிபம் செய்த விருத்தாசல முதலியார் செம்பரம்பாக்கம் ஏரி ஒப்பந்த வேலைக்காக வெளியே சென்றார். பின் துள்ளல் என்னும் கிராமத்தில் தங்கிவிட்டார். திரு.வி.க.வும் அவர் அண்ணார் உலகநாத முதலியாரும் அங்கே பிறந்தவர்கள். 'திரு' திருவாரூரைக் குறிக்கும். 'வி' தகப்பனார் பெயரைக் குறிக்கும்.

12-9-1881ல் உலகநாத முதலியாரும் 26-8-1883ல் திரு.வி.க.வும் பிறந்தனர். முதலில் இவர்கள் பெரியசாமி, சின்னசாமி எனவே அழைக்கப்பெற்றனர். திரு.வி.க. பெற்றோருக்கு ஆறாவது பிள்ளை. வீடு துள்ளல்—ஓலை வேய்ந்த சிறுவீடு. அங்கேயே வளர்ந்தார். அப்போதே இயற்கையோடு பழகினார். தந்தையே முதல் ஆசிரியர்—தாழ்வாரமே பள்ளிக்கூடம் (தந்தையாரின் கடையின் தாழ்வாரம்) தெருப்பள்ளிக்கூட மரபில் அரிச்சுவடி, ஆத்திச்சூடி, கொன்றைவேந்தன் முதலியன இருவராலும் ஒப்புவிக்கப் பெறும். பிறகு சென்னை இராயப்பேட்டை (புதுப்பேட்டையில்) 1890ல் குடியேறினர். முதலில்

தெருக்கோடியில் இருந்த 'ஆரியன் பிரைமரி' பள்ளியில் படித்தார். ஒவ்வொரு வகுப்பிலும் முதன் மாணவராகப் பரிசு பெற்றார். 1898ல் வெஸ்லி கலாசாலையில் சேர்ந்தார். 5வது பாரத்தில் யாழ்ப்பாணம் நா. கதிரை வேற் பிள்ளை அவர்களிடம் தமிழ் பயின்றார். அவருடன் கலந்து, அவருக்காக வழக்குமன்றம் சென்றும் அவரோடு பிறவகையிலும் காலம் கழித்தமையால் பள்ளி இறுதித் தேர்வு எழுத முடியவில்லை. தந்தையார் மறைந்தார். பள்ளிப் படிப்பு முடிந்தது. 'கமர்ஷியல் பள்ளியில் "புக்கீப்பிங்" பயின்றார்.

'இராயப்பேட்டை பாலசுப்பிரமணிய பக்த ஜன சபை' அப்போது உண்டாக்கப்பட்டது. கதிரைவேற் பிள்ளையின் பேச்சுக்களைக் கேட்டுக் கேட்டுத் தாமும் தமிழ்ப் புலமை பெற்றார். பல தமிழ் அறிஞரோடு கலந்து உறவாடினார். தமிழுடன் சித்தாந்த சாத்திரமும் பயின்றார். 1912ல் உள்ள அவரது புகைப்படம் அவரை ஒரு பெரும் சமயாசாரியராகக் காட்டும். வடமொழியும் ஓரளவு கற்றார். "ஷேக்ஸ்பியர் கிளப்புடன்" தொடர்பு கொண்டு ஆங்கிலமும் நன்கு தெரியப் பெற்றார். ஓவியமும், இசையும் ஓரளவு அறிந்தார். அப்போதே பெரியபுராணத்துக்குக் குறிப்புரை கண்டார். இயற்கை யோடு இயற்கை முறையில் பழகத் தொடங்கினார். 1906ல் முதல் முதல் கதிரைவேற் பிள்ளையின் சரித்திரம் எழுதினார்—பின் பல நூல்கள் உரையிலும் பாட்டிலும். 1917ல் பத்திரிகை உலகில் புகுந்தார்.

பின்னி கம்பெனி முதலிய இடங்களில் சிலசில காலம் வேலை பார்த்தார். 1908ல் அவை முடிவுற்றன. 'உமாபதி குருப்பிரகாசம் பிரஸ்' என்ற அச்சுக்கூடம் அவர் தமையனார் அமைத்தார். அதில்

இவர்தம் பெரியபுராணக் குறிப்பு சஞ்சிகையாக வெளி வந்தது. பின் 1910ல் ஆயிரம்விளக்கு வெஸ்லி பள்ளியின் மூன்றாம் வகுப்பு ஆசிரியராக அமர்ந்தார். மாணவருக் குத் தமிழ்ப் பயிற்றும் பணி கொண்டார். கணக்கும் கற்பித்தார். பின் 1916ல் வெஸ்லி கல்லூரியில் தமிழ்ப் பேராசிரியரானார். அப்போதே அரசியல் நாட்டம் பெற்றார். 1917 இறுதியில் கல்லூரியை விடுத்து 'தேச பக்தன்' ஆசிரியரானார். பின் 'நவசக்தி' எழுந்தது.

1906-07லேயே திரு.வி.க. அரசியல் தொடர்பு கொண்டார். ஜஸ்டிஸ் கட்சி தோன்றியது. அது சமயத்தைப் பழித்த காரணத்தால் அதற்கு எதிராகத் திரு.வி.க. பேசினார்—எழுதினார். பெசன்ட் அம்மையார், சர். பி. தியாகராய செட்டியார், நாயர் முதலியோருடன் தொடர்பு கொண்டார். 1917ல் முதல் முதல் வெளிப்படை யாக மாநாட்டில் மேடை ஏறிப் பேசினார். பிறகு பல மாநாடுகளில் தலைமை தாங்கியும் சொற்பொழிவாற்றி யும் வந்தார். அவர் பேச்சுத் திறமை பலரைக் கவர்ந்தது. தமிழின் எளியநடை அனைவருக்கும் புரிந்தது. பத்திரிகை வழி 'நல்ல தமிழ்' வளர அழகிய தேவையான கட்டுரைகள் எழுதினார். தேச பக்தனும், நவசக்தியும் இன்றைய பல எழுத்தாளர்களுக்கு வழி காட்டிகளாம். அக்கால அரசியல் பற்றிய பல கட்டுரைகள் அவற்றில் வந்தன. அவரும் பலவற்றில் பங்கு கொண்டார். அக்கால அரசாங்கத்தைத் தீவிரமாக எதிர்த்தார்; அதனால் பல தொல்லைக்கு உள்ளானார். தேச பக்தனை விடுத்து 22-10-20ல் நவசக்தி தொடங் கினார்; காங்கிரஸ் சார்புடையது; அதனாலும் அரசாங்கத் தொல்லைக்கு ஆளாகியது. அதில் வளர்ச்சியும் சரிவும் இடையிடை காணப்பட்டன. காங்கிரஸ் பற்றியும் பிற நாட்டு நிகழ்ச்சிகள் பற்றியும்

எளிய தமிழில் படிப்பவர் உள்ளத்தில் பதியும்படி எழுதுவார். அத்துடன் கூட்டங்களில் கலந்துகொள்வார். சமய மாநாடுகளிலும் தலைமை வகித்தும் பேசியும் தொண்டு செய்வார். காஞ்சியில் 31வது தமிழர் மாநாடு திரு.வி.க. தலைமையில் 1925-26ல் நடைபெற்றது. அது தமிழக அரசியலில் மாற்றம் கண்டது. பெரியார் காங்கிரசை விட்டுப் பிரிந்தார் (வகுப்புவாத அடிப்படை அமைப்பில்). குடியரசுக்கும் நவசக்திக்கும் மாறுபாடு இருந்தது—எழுத்தில்.

திரு.வி.க. 'சாது' என அழைக்கப் பெற்றார். எனவே அவர் அச்சகமும் 'சாது அச்சுக் கூட'மாயிற்று. சன்மார்க்க அரசியல் வேண்டும் என்று வலியுறுத்தி எழுதிவந்தார்.

தொழிலாளருடன் தொடர்பு பெரியது. 1908லிருந்தே திரு.வி.க.வுக்கும் இதில் தொடர்பு உண்டு. வாடியா, செல்வபதி செட்டியார் போன்றோர் தொடர்பு அதிகம். வாடியாவின் ஆங்கிலப் பேச்சுக்களைத் தமிழில் மொழி பெயர்ப்பார். செல்லுமிடமெங்கும் தொழிற் சங்கம் அமைக்க முயன்று, வெற்றியும் கண்டார். பல எதிர்ப்புக்கள், கதவடைப்புகளைச் சமாளித்தார். 1920ல் சென்னையில் நடந்த முதல் மாநாட்டின் வரவேற்புத் தலைவராக இருந்தார். பல மாறுபாட்டுச் சங்கங்களும் எதிர்ப்புகளும் கொடுமைகளும் ஏற்று முறியடிக்கப் பெற்றன. (பக்கிங்ஹாம் மில், கர்னாடிக் மில் முதலியன) பல போராட்டங்களைத் தலைமையேற்று நடத்தியுள்ளார். அரசாங்கத்தை எதிர்த்துப் போராடினார். மிக அதிகமாக உழைத்த காரணத்தாலேயே திண்ணிய அவர் உடல்நலம் குறையலாயிற்று. தொடர்ந்து தமிழில் எழுதுவதையும் நவசக்திப் பணியையும் தொழிலாளர் பணிகளுக்கிடையே நடத்திவந்தார்.

இவர் வாழ்க்கைத் துணைவியாகச் சில காலம் வாழ்ந்தவர் 'கமலாம்பிகை' அம்மையார். 13.9.1912 திருமணத்தில் சைவர், கிறித்தவர் அனைவரும் அவரவர் சமய முறைப்படி வாழ்த்தினர். 18.9.1918ல் மனைவி மறைந்தார்.

திரு.வி.க. ஆழ்ந்த சமயப் பற்றுடையவர்—சைவர். சைவசித்தாந்த மகாசமாசத் தலைவராக இருந்தார். சைவர் மாநாடுகள் பலவற்றுள்—இந்தியா இலங்கை—தலைமையேற்றும் சொற்பொழிவாற்றியும் சிறந்தார். எனினும் பிற சமயக் காழ்ப்பு இல்லை. சோமசுந்தர நாயகர், கதிரைவேற் பிள்ளை போன்றோர் தொடர்பால் சைவப் பற்றும் தமிழ்ப் பற்றும் வளர்ந்தன. இளமையில் ஆங்கிலத்தில் இவருக்கு மோகம் இருந்தபோதிலும் பின் தமிழ்ப் பித்தரானார். 'இராயப்பேட்டை இளைஞர் கல்விக் கழகம்' என்ற ஆங்கிலம் வளர்த்த சபை 1903-ல் 'பாலசுப்பிரமணிய பக்த ஜன சபையாக' மாறிற்று. வடிவேல் செட்டியார் போன்றோருடன்.பழகி வேதாந்த நூல்களையும் கற்றார். பல விழாக்களில் பங்கு கொண்டார். திருவல்லிக்கேணி சிவனடியார் திருக்கூட்டத்தின் முதல் தலைவராக இருந்தார். அப்படியே பல சைவ, தமிழ்ச் சபைகளின் தலைவராக இருந்தார். சமாசத்தில் ஒரு பாதிரியைப்போல உழைத்தார். தீட்சைகளில் பற்று இல்லை. தீட்சை பெற்றும் பின் அனுஷ்டானங்களைக் கைவிட்டார். கோவில்களுக்குச் சென்று வழிபடுவார், அப்படியே வைணவ சமயத்திலும் ஈடுபாடு கொண்டு பல சபைகளில் பங்கு கொண்டார். மேலும் ஜைனம். பௌத்தம், கிறித்தவம், இஸ்லாம் ஆகிய மதங்களுடன் தொடர்பு கொண்டார். இவை எல்லாவற்றிலும் இயக்கும் இறைவன் ஒருவனே எனும் சமரச உணர்வை

யாண்டும் போதித்தார். ஆயினும் மதமாற்றத்தை இவர் விரும்பவில்லை. சில சிறித்தவர் சைவத்தைப் பழித்தால் விடமாட்டார். தம் கொள்கையினை விளக்கி வெற்றி காண்பார். எல்லாச் சமயங்களிலும் உள்ள நலக்கேடுகளை எடுத்துக் காட்டுவார். சமரசம் ஒன்றே உலகை வாழவைக்கும் என்பதை உணர்ந்து உணர்த்தினார். நவசக்தியிலும் எழுதினார். சமயவெறி கூடாது என வற்புறுத்தினார். இச்சமரசம் பற்றி இவர் எழுதிய பல பாடல்கள் ‘பொதுமை வேட்டல்’ என்ற இவர் பாடல் தொகுப்பில் உள்ளன.

பெண்களிடம் உயர்ந்த மதிப்பு வைத்திருந்தார். ‘பெண்ணின் பெருமை’ இவர் நூல்களுள் சிறந்தது. பெண் களைத் தாயாக—தெய்வமாக மதித்துப் பேசினார்; எழுதினார். இவர் இல்வாழ்வு சில காலமே இருந்தது என்றாலும் இல்லறத்தை உயர்வாகப் போற்றினார். அவ் வாழ்வில் பெண்கள் கொள்ளவேண்டிய கொள்கைகளை யும் வாழ்க்கை முறைகளையும் உணர்த்தினார். தம் தமையனாரின் இரு பெண்களையும் கண் எனக் காத்தார். தமையனாரின் ஒரே மகன்—பாலசுப்பிரமணியன் இளமை யில் மறைந்தார். இவருக்குப் பிள்ளைப்பேறு இல்லை. சில பள்ளிகளின் பொறுப்பாளராக இருந்து நடத்தினார். தெருவில், பிறவிடங்களில் குடும்பப் பெண்கள் அவர் தம் கணவர்களால் துன்புறுத்தப் பெறும்போது, தாமே வலியச் சென்று அவர்களை நல்வழிப்படுத்தினார்.

தமிழ் மொழி வளர்ச்சியில் அவர் பங்கு பெரிது. இதழ்கள் நடத்தியமை, பேசியமை தவிர்த்து அவர் எழுதிய நூல்கள் பலப்பல—கவிதைகள் பலப்பல— சீர்திருத்தக் கட்டுரைகள் பலப்பல. சாதி, சமய வேறுபாடு களைக் கண்டித்து எழுதியவை—தொழிலாளர் நலம் பற்றியவை—அரசியல் போராட்டங்கள் - பற்றியவை

காந்தியடிகள் பற்றியவை யாவும் நூல்களாக வந்தன. அவை இன்று பெற முடியவில்லை. அப்படியே கைம்மை மணம், கலப்பு மணம் போன்ற சமுதாயச் சீர்திருத்தங்கள் பற்றியும் பேசியும் எழுதியும் வந்ததோடு, தாமே பலவற்றை முன்னின்று நடத்திவைத்தார். சில சமயம் அவரைத் தமிழக அரசாங்கம் 'வீட்டுச் சிறை' வைத்தது. அப்போதும் மனம் கலங்காது அப்பரைப் போன்று தொண்டே துணையாக வாழ்ந்தார்.

'நீங்கள் ஏடுகளைப் பயில்வதோடு நில்லாது. ஒய்ந்த நேரங்களில் இயற்கை நிலையங்களில் புகுந்து, இயற்கைக் கழகத்தில் நின்று, இயற்கைக் கல்வி பயில்வீர்களானால், இயற்கையோடியைந்த வாழ்வு நடத்த வல்லராவீர்கள். காடு செறிந்த ஒரு மலை மீதிவர்ந்து, ஒரு மரத்தடியில் நின்று, மண்ணையும் விண்ணையும் நோக்குங்கள்; ஆண்டவன் இயற்கை ஓவியத்தைக் கண்டு மகிழுங்கள். மண் வழங்கும் பரந்த பசுமையிலும், வெண்மையிலும், நீலத்திலும், விண் வழங்கும் நீலத்திலும் தோய்ந்து திளையுங்கள். காலையில் இளஞாயிறு, கடலிலும் வானிலும் செக்கர் உமிழ்ந்து எழுங் காட்சியை நெஞ்சில் எழுதுங்கள். அருவி முழவும், குயில் குரலும், வண்டிசையும், மயிலாலும், மலர் மணமும், தேனினிமையும், தென்றல் வீசலும் புலன்களுக்கு விருந்தாக இயற்கை அன்னையைப் பாருங்கள். ஆங்கே சூழ்ந்துள்ள செடி, கொடி, மரங்களையும், பறவைகளையும், விலங்குகளையும் உற்று நோக்கி, ''சில செடிகள் பூமியிற் பரந்தும், சில செடிகள் எழுந்து நின்றும், சில கொடிகள் நீண்டு நீண்டு மடிந்தும், சில கொடிகள் சுருண்டு சுருண்டு படர்ந்தும், சில மரங்களுக்கு நீள் கிளையும், சில மரங்களுக்கு வீழும், கிளிக்கு வளைந்த மூக்கும், யானைக்குத் துதிக்கையும், மானிற்குக் கொம்பும் அமைந்திருப்பதற்கு என்ன காரணம் என எண்ணுங்கள்,

அந்தியில் ஞாயிறு அமரும் கோலத்தையும், பறவைகள் பறந்து செல்வதையும் கால்நடைகளின் மணி ஓசையையும் காணுங்கள்; கேளுங்கள், நீலவானில் வெண்திங்கள் தோன்றித் தண்ணிலவு பொழிவதை நோக்குங்கள். அந் நிலவு பசுமைக் கானிலும் பைங்கூழிலும் வெண்மண லினும், நீலக்கடலினும் படிந்து வழங்கும் அழகுக் காட்சி யில் மூழ்குங்கள். மூழ்கி இன்புற்று, மலையினின்று இழிந்து வென்றி அடல்விடைபோல் நடந்து வீடு செல்லுங்கள். இவ்வாறு இயற்கைக் கழகத்தில் பயின்று பயின்று, சங்கப்புலவர், இளங்கோ, திருத்தக்க தேவர், திருஞானசம்பந்தர், ஆண்டாள், சேக்கிழார், கம்பர், பரஞ்சோதி முதலியோர் இயற்கைக் கோலத்தை எவ்வாறு எழுத்தோவியத்தில் இறக்கியிருக்கிறார் என்று ஆராயுங்கள். பழைய கோயில்களிலும் மன்றங்களிலும் நுழைந்து, இயற்கைத் திருக்கோலத்தைச் சிற்பர் எவ்வாறு ஓவியங்களில் வடித்திருக்கிறார் என்பதையும் உணர ஓவியங்களை ஊன்றி நோக்குங்கள். நந்தமிழ்க் காவியங்களும் ஓவியங்களும் இயற்கை அமிழ்தாய் உயிரை யும் உடலையும் ஓம்புவதை உணர்வீர்கள், என்பது அவர் அறிவுரை.

மொத்தத்தில் தமிழ்த் தொண்டனாக—தொழிலாளர் தொண்டனாக—நாட்டுத் தொண்டனாக — உலகத் தொண்டனாக—ஏழை எளியவர் தொண்டனாக—எல்லாருக்கும் நல்லவனாக—உர உளத்தில் வல்லவனாக—திரு.வி.க. அவர்கள் வாழ்ந்தார்கள் என்பது உண்மை. அவர் வாழ்ந்த வீட்டின்பின் இருந்த வேப்பமரம் வாய் இருந்தால் அனைத்தையும் சொல்லும். பெரியார், வரத ராஜுலு நாயுடு, ராஜாஜி தொடங்கிப் பல அரசியல் தலைவர்கள், அனைத்திந்திய தொழிலாளர் தலைவர்கள்,

தமிழகத் தொழிலாளர் தலைவர்கள், தமிழகத் தொழிலாளர் தொண்டர்கள், சமூக ஊழியர்கள், பெண்கள் சங்கத்தலைவியர், தமிழ்ப் பேராசிரியர்கள், தமிழ் அன்பர்கள், புலவர்கள், பல சமயத்தையும் சார்ந்த சான்றோர்கள், துறவிகள், இல்லறத்தார், அரசாங்க உயர் அலுவலர்கள், அமைச்சர்கள், நாட்டு வாழ்வில் நலம் காண விரும்பியவர், வீட்டுப் பிணக்கில் வேறுபாடு நீங்க விரும்பியவர் அனைவரும் அடிக்கடி வந்து அந்த அரச மரத்தின் கீழே அன்றாடம் திரு.வி.க.வுடன் கலந்து பேசி, தத்தம் செயலுக்கும் கருத்துக்கும் ஏற்ற ஆக்க அறிவுரைகளைப் பெற்றுச் சென்றுள்ளனர். ஆம்! அவரைக் காணாதவர் எந்தத் துறையிலும் இலர் எனலாம்.

அவருடைய இறுதிக் காலத்தில் மிகத் தாழ்ந்து, இருந்த வீட்டில் இருந்து அப்புறப்படுத்தப்பட்ட போது, எதிர் வீட்டில் ஒண்டி இருந்தார். பலர் தங்களுடன் வந்து இருக்கக் கேட்டும் இசையவில்லை. பொன்னும் பொருளும் கொடுக்க முன்வந்தும் பெறவில்லை.

அவர் இறுதி யாத்திரையில் கலந்து கொள்ளாத மக்களிலர். எல்லாக் கட்சிகளின் கொடிகளும் அரைக் கம்பத்தில் பறந்தன. யாத்திரையில் அவரவர் கொடிகளைத் தாங்கி எல்லாக் கட்சிகளும் கலந்துகொண்டன. பல தலைவர்கள், பேராசிரியர்கள், தொழிலாளர்கள், தொண்டர்கள், இலட்சக்கணக்கில் கலந்து இறுதி வணக்கம் செலுத்தினர். அந்த யாத்திரை ஊர்வலம் வீடு தொடங்கி சுடலை வரையில் ஒரே தொடராக சுமார் 1½ கல் நீளம் இருந்தது என்பது அவருக்கு மக்களிடம் இருந்த செல்வாக்கினையும் அவர்கள் அவரிடம் காட்டிய மரியாதையினையும் விளக்கும்.

அவர் பெயரால் பல தனியார் நிறுவனங்களும் அரசாங்கப் பாலங்கள், குடியிருப்புக்கள் போன்றவையும் இருப்பினும், நிலைத்து என்றும்—எல்லா வேறுபாடுகளும் அற்ற அத்தலைவர் திரு.வி.க. பெயர் இருக்கும் வகையில் தமிழக அரசாங்கம் ஆவன செய்யக் கடமைப்பட்டுள்ளது. தமிழ் மக்களும் அதற்குரிய தங்கள் பங்கை ஆற்றி அளிக்கக் கடமைப்பட்டுள்ளனர்.

(24-8-1982)

## 10. பண்டிதமணி

**சை**வ சித்தாந்த மகாசமாசத்தின் ஆண்டு விழாக் களில் பண்டிதமணி அவர்கள் பெரும்பாலும் கலந்து கொள்வார்கள். நான் 1931 முதல் என் இளமை தொட்டே அவ் விழாக்களில் கலந்து கொள்வேன். பண்டிதமணி அவர்கள் சமாச விழாக்களில் ஆற்றும் சொற்பொழிவுகள் பொருள் ஆழம் பொதிந்தவையாயும் திருவாசகம் போன்ற சமய இலக்கியங்களின் நுண் பொருளை விளக்குபவைகளாகவும் அமையும். ஒருமுறை திருவாசகச் சொற்பொழிவில் 'இருதலைக் கொள்ளியின் உள்ளெறும்பு ஒத்து' என்ற தொடருக்கு அவர் தந்த விளக்கமே என்னை அவரிடம் ஈர்த்துப் பழக வைத்தது. அத் தொடருக்கு அதற்குமுன் பலர் விளக்கம் சொல்லவும் எழுதவும் கேட்டிருப்பினும் 'உள்' என்ற சொல்லுக்குப் பண்டிதமணி அவர்களே தெளிந்த விளக்கந்தந்தனர்.

'ஒரு உள்ளே புழையுடை மூங்கில் குழாய்' உள்ளே எறும்பு புகுந்தது. மூங்கிலின் இருபுறமும் தீ பற்றிக் கொண்டது. எப்படி அந்த எறும்பு தப்ப முடியும்? வெறும்

'இருதலைக் கொள்ளி' எறும்பு என்றால் அந்தக் கொள்ளி பற்றி நிற்கும் இடத்தின் வழி அது தப்பலாம். ஆனால் உள் எறும்பு தப்ப இயலாதே. இதை எண்ணியே மணிவாசகர் 'உள்' எறும்பு என்று உவமை காட்டித் தன் நிலையை விளக்குகிறார் என்ற வகையில் பண்டிதமணி அவர்கள் விளக்கங் கூறினார்கள். அப்படியே பொருள் விளங்காத பல திருவாசகத் தொடர்களுக்கு அவர்கள் காட்டிய விளக்கங்கள் அனைவரையும் மகிழச் செய்யும்.

அப்படியே மற்றொரு சமாச மாநாட்டில் 'ஞானத்தின் திருவுருவை' என்ற பெரியபுராணப் பாடலின் விளக்கமும் அப்போது அவர்களது தம்மை மறந்த உணர்வு நிலையும் என்னை மறக்கச் செய்தன.

அவர்தம் கதிர்மணி விளக்கம் என்ற திருவாசகத் திருச்சதக உரையிலும், உரைத் தொடக்கம், முன்னுரை முதலியவற்றிலும் அவர்தம் உணர்வும் மொழித்திறனும் சமய ஈடுபாடும் பிற இயல்புகளும் நன்கு விளங்கும். அந் நூலை நான் இன்றும் நாள்தோறும் போற்றிப் பயின்று வருநிலையில் அதன் பெருமையை உணர்கிறேன். சைவ சித்தாந்த சமாசத்திற்கு வந்து தங்குங்கால் பல விடங்களில் இராப்பொழுதில் அவர்களோடு அருகே இருந்திருக்கிறேன். அக் காலத்தில் உறங்குமுன் அவர்கள் திரு. சுந்தர ஓதுவாமூர்த்திகள், தூத்துக்குடி சிவகுருநாதப் பிள்ளை போன்ற பலப்பல பெரியார்களோடு சமய இலக்கியங்களுக்குப் புதுப் புதுவகையான பொருள் காண்பதும் வேடிக்கையாகவும் விளையாட்டாகவும் பிள்ளை உள்ளத்தோடு பேசுவதும் இன்றும் என் நினைவில் உள்ளன. ஒருமுறை தூத்துக்குடி மாநாட்டிற்குச் சென்றபோது ஓர் இரவு முழுவதும் அதேபோல் பேசிக் கொண்டிருந்ததில் பொழுது விடிந்ததே தெரியவில்லை.

அப்போது ஒருவர் பண்டிதமணியை நோக்கி 'தாங்கள் குழந்தைபோல் பேசுகிறீர்கள்' என்றார். உடனே பண்டிதமணி அவர்கள் 'ஆம் நான் குழந்தை தான். என்னால் நடக்க முடியாது! எனக்குப் பற்கள் இல்லை. குழந்தையாயிருப்பதற்கு வேறு என்ன வேண்டும்' என்றார். அனைவரும் நகைத்தோம். இவ்வாறு பலப்பல விதமான பேச்சுக்களை அவர்கள் பேசுவார்கள்.

அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தே தமிழ் மன்றச் செயலாளனாக நான் இருந்த காலத்தில் (1933-34) அன்றைய செட்டி நாட்டு அரசர் நாண்மங்கல விழாவின் போது பண்டிதமணி உட்பட அன்றைய தமிழகப் பேரறிஞர் அனைவரும் வந்து கலந்துகொண்டனர். அவர் களுடன் தமிழ் மன்றத்தினர் எடுத்துக்கொண்ட புகைப் படத்தினை இன்றும் நான் போற்றிக் காக்கின்றேன். அதில் பண்டிதமணி அவர்களின் தோற்றம் எடுப்பாக உள்ளது. அதில் அக்காலத்திய பிற்காலத்திய பெரும் புலவர்கள் இடம் பெற்றுள்ளனர்.

பண்டிதமணி அவர்தம் தெளிந்த வடமொழி, தமிழ்ப் புலமையும் சைவநெறி பற்றிய தளரா உணர்வும் பழகும் நல்ல பண்பும் எடுப்பான தோற்றப் பொலிவும் என்னால் என்றும் மறக்கமுடியாதவை.

—1981

## 11. பேரறிஞர் அண்ணா
### சிந்தனைகள் சில

பேரறிஞர் அண்ணா அவர்களை நினைக்கும்போது சிந்தனை நீள்கிறது; ஐம்பது ஆண்டுகள் எல்லையைக் கடந்தும் அது செல்லுகிறது. நானும் காஞ்சிபுரத்தைச் சேர்ந்தவனாதலின், இளமை முதற்கொண்டே அண்ணா அவர்களுடன் தொடர்பு கொண்டிருந்தேன். இளமையில் படிக்கும் காலத்தில் காங்கிரசு கட்சியின் சார்பு கொண்டவனாயினும், 1937ல் இந்தி தமிழகத்தில் திணிக்கப்பட்டபோது அதிலிருந்து நீங்கி, தமிழ்த் தொண்டு செய்து வருகின்றவன். அந்த நாள் தொட்டும் அதற்கு முன்பும் அண்ணா அவர்களை நன்கு அறிவேன். 1930ல் செங்கற்பட்டில் சுயமரியாதை இயக்க மாநாட்டில் தொண்டனாகப் பணியாற்றியவன் ஆதலின், அந்த நாள் தொட்டே 'ஐயா' பெரியார் அவர்களையும் அண்ணா அவர்களையும் அறிவேன். 1936ல் காஞ்சியில் பணி ஏற்ற பின்பு அவர்களுடன் நெருங்கிப் பழக வாய்ப்பு வந்தது.

1938ல் நான் காஞ்சியில் ஆண்டர்சன்ட் பள்ளியில் பணியாற்றிய அந்த நாளில் 'காங்கிரசு' கட்சியை எதிர்த்து மாவட்ட ஆட்சிக் குழு உறுப்பினர் பதவிக்குப் போட்டி யிட்டேன் நான். அந்தக் காலத்தில் மாவட்ட எல்லா அதிகாரங்களும் அதனிடம் குவிந்திருந்தன. எனவே போட்டி கடுமையாக இருந்தது. மேலும் அந்தக் காலத்தில் காங்கிரசுக்கு மிகுந்த செல்வாக்கு இருந்தமை யின், அதை எதிர்த்துப் போட்டியிடப் பெருந் தலைவர் களும் செல்வர்களும் அஞ்சினர். சாதாரண ஓர் உயர்

நிலைப் பள்ளியின் தமிழாசிரியனாகிய நான் போட்டி யிடுவதா? வெற்றி பெறுவதா? எனச் சிலர் ஏளனம் செய்தனர். ஆனால் அண்ணா அவர்கள் 'தமிழாசிரியர் அரசியலுக்கு வருவது தமிழகத்திலேயே முதல் தடவை; எனவே துணிந்து நில்லுங்கள்' என ஊக்கினார்கள். அத்துடன் அவர்களே என்னுடன் மாட்டு வண்டியில் சில ஊர்களுக்கு இரண்டொரு நாள் வந்து எனக்காக வாக்குகளைக் கேட்டு உதவினார்கள். (அப்போது அவர்கள் ஈரோட்டில் குடியரசு இதழில் பணியாற்றிக் கொண்டிருந்தார்கள் என நினைக்கிறேன்) இந்த மறவா நிகழ்ச்சியினை என் 'காஞ்சி வாழ்க்கை' என்ற நூலில் (பக்கம் 93) குறிப்பிட்டுள்ளேன்.

பின் காஞ்சியில் நான் 'தமிழ்க்கலை' தொடங்கி நடத்திய காலத்தில் 'தமிழ்க்கலை' இல்லத்துக்கு அண்ணா வந்து வாழ்த்து வழங்கினார்கள். அவர்கள் ஈரோட்டி லிருந்து 16.10.40ல் கலைஞர் தி.க.சண்முகம் அவர்களுக்கு எழுதிய கடிதத்தில் காஞ்சீபுரம் 'தமிழ்க்கலை நம்மைச் சார்ந்த பத்திரிகை' என்று குறிப்பிட்டுள்ளதை இன்றும் எண்ணி எண்ணிப் பெருமைப்படுகிறேன்.

காஞ்சியில் அவர்கள் திராவிடநாடு தொடங்கி, ஈழத்து அடிகளார் மேற்பார்வையில் அலுவலகம் இயங்கிக் கொண்டிருந்தகாலை, அடிக்கடி சென்று அவர் களோடு அளவளாவிய பேச்சுக்களும் பிறவும் கண்முன் நிழலாடுகின்றன.

பின் 1944ல் சென்னைக்கு வந்து பச்சையப்பனில் நான் பணி ஏற்ற பிறகு, அண்ணா அவர்கள் தாம் பயின்ற கல்லூரியில் பணி ஏற்றமை குறித்துப் பாராட்டினார்கள். பின் அவர்கள் முதலமைச்சராகப்

பணியேற்றபோது, பச்சையப்பரில் அதுவரையில் தமிழாசிரியர் கல்லூரியின் முதல்வராக இருந்ததில்லை என்பதைக் கல்லூரி அளித்த பாராட்டு விழாவில் விளக்கிச் சொன்னார்கள். அனைவரும் என்னை எண்ணித்தான் அண்ணா அவர்கள் அதைச் சொன்னார்கள் என்றனர். அப்போது இருந்த முதல்வரும் துணை முதல்வரும் என்னினும் இளையவர்கள் ஆனதால் எனக்கு அப்பதவி தர இயலா நிலையில், எண்ணி எண்ணி, ஆட்சிக் குழுவினர் என் ஒய்வுக் காலத்தை 62 வயதுவரை தள்ளி வைத்து, மூன்றாண்டுகள் மற்றொரு பதவி அளித்து துணை முதல்வராக நியமித்தனர். நான் ஓய்வு பெற்றதும் அப்பதவியும் இல்லையாயிற்று. அண்ணா அவர்கள் கருத்தின் வழியே நான் பெற்ற பதவியை எண்ணி மகிழ்ந்தேன்.

காஞ்சியை அடுத்த வாலாஜாபாத்தில் நான் செயலாளனாக இருந்து ஓர் உயர்நிலைப்பள்ளியினைத் தொடங்கினேன். வட்டத் தலைநகரங்கள் தவிர்த்து வேறு இடங்களில் உயர்நிலைப்பள்ளி இல்லாத காலம் அது. 6 ஏக்கர் நிலமும் 25,000 ரூபாயும் தந்தால் அரசாங்க உயர்நிலைப்பள்ளி அமைக்க ஏற்பாடு செய்ய வழி இருந்தது. அப்போது நான் சென்னையில் பணியாற்றிக் கொண்டிருந்தாலும் சொந்த ஊரில் உயர்நிலைப்பள்ளி தொடங்க விரும்பி முயன்றேன். பல அன்பர்கள் உதவினர். எனினும் 25,000 ரூபாய் சேர அன்று வழி இல்லை. உளம் உடைந்து நின்ற அந்த வேளையில், அண்ணா அவர்கள் தாமே வலிய வந்து உதவுவதாகக் கூறி 'நீதிதேவன் மயக்கம்' என்ற நாடகத்தையும் மற்றொன்றையும் இரண்டுநாள் வாலாஜாபாத்தில் நடத்தி, அதன் முழு வருவாயினையும் பள்ளிக் குழுவுக்கு அளித்ததை என்றும்

நான் மறந்தறியேன்—ஆம்! அது மேநிலைப் பள்ளியாக இன்று நடைபெற்று வருகின்றது. அப்பள்ளியின் தொடக்கவிழா, கட்டடக் கால்கோள் விழா, கட்டடத் திறப்புவிழா அனைத்திலும் அண்ணா அவர்கள் பங்கு கொண்டு சிறப்பித்தார்கள். (பள்ளியில் உள்ள கல்வெட்டு இன்றும் சான்று பகரும்)

இடையில் அரசியல் மோதல் பற்றிய நிகழ்ச்சி ஒன்று நினைவுக்கு வருகிறது. சட்டமன்றத் தேர்தலின்போது—1957 என எண்ணுகிறேன்—காங்கிரசினை எதிர்த்து இருவர் போட்டியிட்டனர். இவர்கள் போட்டியினால் இருவரும் வெற்றிபெற முடியாத நிலை இருந்தது. நான் அப்போது அரசியலில் இல்லையாயினும், என் வட்டத்தைச் சேர்ந்தகாரணத்தால் சிலர் சில செயல்களுக்காக என்னை அழைப்பர். இந்த இருவர் போட்டியினைப் பற்றி அண்ணாவும் நானும் கலந்து பேசி, ஒருநாள் இரவு ஒன்பது மணி அளவில் அண்ணாவின் இல்லத்துக்கு, அந்த இருவரையும் அவர்களைச் சார்ந்தவர்களையும் வரச் சொன்னோம். அவ்வாறு அவர்கள் வந்தபிறகு, பேசியதில் இருவரும் தேர்தல் களத்திலிருந்து விலக மறுத்து எத்தனையோ காரணங்கள் காட்டினார்கள். என்றாலும் ஏழு மணி நேரம் பேச்சுக்கிடையில்-விடியல் மூன்று மணிக்கு—ஒருவர் விண்ணப்பத்தைத் திருப்பிப் பெற ஏற்பாடு செய்ய முடிந்தது. இந்த முயற்சியில் அண்ணா அவர்கள் கையாண்ட நல்ல உத்திகள் போற்றற்குரியன வாம்.

பேரறிஞர் அண்ணா அவர்கள் முதல் அமைச்சரராகப் பதவி ஏற்றபோது, நான் தமிழக அரசினால் ஐதராபாத் அனுப்பப்பெற்று, உஸ்மாணியப்பல்கலைக் கழகத்தில் பணி செய்து வந்தேன். அப்போது முதலமைச்சராக இருந்த மாண்புமிகு திரு. பக்தவத்சலம் அவர்கள் என்னைக்

கேளாமலேயே, என்னை அத் தமிழ்த்துறைத் தலைவர் பதவிக்குப் பரிந்துரைத்திருந்தார். அங்கிருந்து உத்தரவு வந்தபோது அவர்களைக் கண்டு கேட்க, 'நீங்கள் சொன்னால் போகமாட்டீர்கள் என்பது தெரியும்; எனவே சொல்லாமல் அனுப்பினேன்' என்றார்கள். அவர் அன்பறிந்து அங்கேசென்று பணி யாற்றினேன். அங்கிருந்த துணைவேந்தர் அவர்கள் என் பணிகண்டு மேலும் தொடர்ந்து சில ஆண்டுகளாயினும் இருக்கவேண்டும் எனக் கேட்டு, தமிழக அரசுக்கும் கடிதம் எழுதினார். அப்போது அண்ணா அவர்கள் முதலமைச்சராக இருந்தார்கள். நான் ஏப்பிரல் விடுமுறையில் அவர்களைக் காணச் சென்றேன். அவர்கள் உதகை சென்றிருந்தனர். அங்கே விருந்தினர் மாளிகையில் கண்டு மகிழ்ந்தேன். அவர்களே அரசாங்கத்துக்கு என்னைப்பற்றி வந்திருந்த தகவலைச் சொல்லி, 'இனி நீங்கள் அங்கே போக வேண்டாம்; இங்கே உங்களுக்கு நிறையப் பணி காத்திருக்கிறது' என்று சொன்னதோடு, என்னை அனுப்ப இயலாதென அவர்களுக்கும் தெரிவிக்க ஏற்பாடு செய்துவிட்டனர். ஆம்! அவர்கள் என்வழியே தமிழ்மொழிக்கும் நாட்டுக்கும் பல செய்ய நினைத்தார்கள். ஆனால் அதற்குள் அவர் வாழ்வின் எல்லை வற்றிவிட்டது; கண்ணீர் பெருகுகின்றது.

தமிழகப் பல்கலைக் கழகங்களில் பட்டம் பெற்று வெளியேறுபவருக்கு, அக்காலத்திலெல்லாம் பட்டமளிப்பு விழா நடத்தி, அனைவரையும் வரவழைத்து ஒன்று கூட்டி உரையாற்றிப் பட்டமளித்தல் மரபு. அண்ணா அவர்கள் அவ் விழாக்களில் பட்டம் பெறுவோர் அனைவர் கையிலும் பட்டச் சான்றிதழோடு ஆங்கிலத்தில் மொழி பெயர்க்கப் பெற்ற திருக்குறளும் இருக்குமாறு ஏற்பாடு

செய்ய நினைத்தார்கள். அதற்குள் அவர் பயண எல்லை முடிவுற்றது.

அண்ணா அவர்கள் அரசியலில் மாற்றாரையும் மதிக்கும் நல்லவர் என்பதை எண்ண வேண்டியுள்ளது. தமிழக முதல்வராக இருந்த மாண்புமிகு திரு. பக்தவத்சலம் அவர்கள் தம் பிறந்தநாள் விழாவினை ஆண்டு தோறும் கொண்டாடுவதுண்டு. நானும் அதில் முக்கியப் பங்கு கொள்வேன். அண்ணா அவர்கள் முதல் அமைச்சராக வந்த ஆண்டு, அந்தஅவர் தம் பிறந்தநாள் விழாவுக்கு ஏற்பாடு செய்ய முயன்றோம். யாரைத் தலைவராகக் கொள்வது என்ற பேச்சு எழுந்தது. பலரைச் சொன்னார்கள். நான் அன்றைய முதல் அமைச்சர் அண்ணாவே தலைமை வகிக்க வேண்டும் என்றேன். பலரும் 'அவர் வரமாட்டார்' என்றனர். எனினும் நான் 'அந்தப் பொறுப்பை என்னிடம் விடுங்கள்; அண்ணாவின் நல் உள்ளத்தையும் கண்ணியத்தையும் உங்களுக்குக் காட்டுகிறேன்' என்றேன். அனைவரும் இயைந்தனர். கூட்டம் திருவல்லிக்கேணியில் நடந்தது. நான் அங்கிருந்து நேரே நுங்கம்பாக்கம் அவின்யூ சாலைக்கு வந்தேன். அண்ணா தம் பணியில் ஆழ்ந்திருந்தார்கள்; நான் எப்போதும் நேரே உள்ளே சென்றுவிடுவது வழக்கம். அன்றும் அப்படியே சென்றேன். இரவு 8.30 இருக்கும். 'இந்த வேளையில் எங்கே வந்தீர்கள்' என்றார்கள். நான் நடந்தவற்றைச் சொல்லி மாண்புமிகு பக்தவத்சலம் அவர்கள் பிறந்தநாள் வாழ்வில் தலைமை வகிக்க வேண்டும் என்றேன்; நாளும் குறித்தேன். உடனே 'இதைவிட எனக்கு வேறு என்ன வேலை? கட்டாயம் வருகிறேன்' என்று சொல்லி, தன் செயலரை அழைத்து, அன்று இருந்த வேறு நிகழ்ச்சியை

மாற்றச் சொல்லி, இந்த விழாவினைக் குறித்துக் கொள்ளச் சொன்னார்கள். அப்படியே குறித்த வேளையில் (திருவல்லிக்கேணி நேஷனல் மகளிர் உயர்நிலைப்பள்ளியில் நடந்தது) வந்து சிறப்பாகத் தலைமையேற்றுப் பேசி அனைவரையும் மகிழ்வித்தனர். கூட்டத்தில் வரவேற்ற நான் இன்றேபோல் 'நும்புணர்ச்சி' என்ற சங்கச் சான்றோர் அடியினால் வாழ்த்தினேன்.

காஞ்சியில் கல்லூரி இல்லையே என்ற குறை அண்ணா அவர்களுக்கு உண்டு. அதில் நானும் பங்கு கொண்டேன். பல அன்பர்கள் உதவினர்; கல்லூரி உருவாயிற்று. கல்லூரித் தொடக்க விழாவில் சர். ஆர்க்காடு இராமசாமி முதலியார் அவர்கள் தலைமை வகித்துத் தொடங்கிவைத்தார். அவர் பேச்சு ஆங்கிலத்தில் அழகுற அமைந்தது. ஆயினும் அதைப் பழகு பைந்தமிழில் அண்ணா அவர்கள் மொழி பெயர்த்துத் தந்தமையே அதற்கு ஏற்றம் அளித்தது. அப்படியே அதற்கெனக் கட்டி முடிக்கப்பெற்ற கட்டடத் திறப்பு விழாவிற்குச் சர். ஆர்க்காடு இலட்சுமணசாமி முதலியார். தலைமை வகித்து அதைத் திறந்து வைத்தார்கள் அவரும் ஆங்கிலத்தில் அழகுறப் பேசினார்கள். ஆயினும் அதை மொழிபெயர்க்க அண்ணா அன்று அங்கு இல்லை. அங்குள்ள அனைவரும் அண்ணா இல்லை; அவர்கள் வாரிசாக நீங்கள்தாம் மொழிபெயர்க்க வேண்டுமென என்னிடம் கூறினர். நானும் மொழிபெயர்த்தேன். காஞ்சிவாழ் மக்கள் என்னை அண்ணாவுடன் இணைத்துப் பாராட்டிய பெருமையினை இன்றும் எண்ணி எண்ணி மகிழ்கிறேன்

ஒருமுறை அவர் முதலமைச்சராக இருந்தபோது, ஒரு துறையில் உள்ள குறைபாடுகளை அவரிடம் சுட்டிக் காட்டி, அவர்களை அத்துறையின் அமைச்சரிடம் சொல்லித் திருத்துமாறு கூறினேன். அவர் உடனே 'உங்கள்......' தானே அத்துறை அமைச்சர்; 'நீங்களே சொல்லுங்கள்' என்றார். நான் உடனே என்ன அண்ணா! 'உங்கள்' என்று இப்படிச் சொல்லுகிறீர்கள். உங்கள் தம்பி அல்லவா அவர் என்றேன். அவரும் 'தம்பிதான், தம்பி அண்ணன் சொல்லைக் கேட்கவில்லையே; என்ன செய்வது' என்று வேதனைப்பட்டார். அந்த வேதனைக் காட்சி என் உள்ளத்தை உலுக்கியது, உருக்கியது.

சென்னை உலகத்தமிழ் மாநாட்டின் அறிஞர் கூட்டத்தின் கடைசி நாளில் பல்கலைக்கழக மண்டபத்தில் அண்ணா அவர்கள் ஒரு மணி நேரத்திற்கு மேல் ஆங்கிலத்தில் பேசிய பேச்சினை—சொல்லாட்சியும் பொருள் மாட்சியும்—கேட்டு, வந்திருந்த அனைவரும் பாராட்டிய அந்தப் பாராட்டு, 'கல்வியே கரையிலாத காஞ்சி மாநகர்' தந்த அந்த அறிவுச் செல்வத்தின் சிறப்பினை—பாரறியச்செய்த நலத்தினை எண்ணி எண்ணி வியந்தேன்—வியக்கிறேன்—உள்ள நாள் வரையில் இவை அனைத்தையும் எண்ணி மகிழ்வேன்.

அவரோடு மட்டுமன்றி அவ்வரைப் பரிந்து வளர்த்த சிற்றன்னையாருடன் அவர்கள் வீட்டில் பல நாட்கள் பேசிய பேச்சுக்களும், அவ்வன்னையார் கூறிய ஆக்கநெறி—வாழ்க்கை நெறி பற்றிய அறிவுரைகளும் எழுத்தில் அடங்கா!

அண்ணா அவர்கள் முதல்வராக இருந்தபோது எண்ணி மகிழ்ந்து 'திருத்தொண்டர் அண்ணா' என்ற

தலைப்பில் ஐந்து பாடல்கள் எழுதினேன். அவை என் கவிதை உள்ளம் என்ற நூலில் (பக்கம். 156-57) இடம் பெற்றுள்ளன.

எண்ண எண்ண எத்தனையோ கருத்துக்கள்—அவரோடு பழகிய காலத்தில் பெற்ற அனுபவங்கள்—பல போட்டியிட்டு உள்ளத்தில் ஒன்றன் முன் ஒன்றாக வந்து நிற்கின்றன. எனினும் எல்லை கருதி இந்த அளவோடு அமையலாம் என எண்ணுகின்றேன். அண்ணாவின் புகழ் என்றும் வாழ்க! அவர் வழி ஆற்றும் தொண்டுகள் சிறக்க!

—1984

## 12. வாழ்க பச்சையப்பர்!

இமயமுதல் குமரிவரை எண்ணற்ற அறக்கட்டளைகளை அமைத்து, நாடும் மொழியும் சமயமும் சமூகமும் வாழ வழி வகுத்த தலையாய பெரியார் பச்சையப்பர். அவர் பெயரால் இயங்கும் கல்வி நிலையங்கள் தம் 125ஆம் ஆண்டு விழாவை இதோ இவ்வாரம் கொண்டாடுகின்றன. இத் திங்கள் (மார்ச்சு) 22, 23, 24 ஆகிய மூன்று நாட்களிலும் இவ்விழா நடைபெறுகிறது. இம் மார்ச்சு மாத இருபத்திரண்டாம் நாள் பச்சையப்பர் வாழ்விலும்—ஏன் நம் வாழ்விலும் தான்—பொன்னெழுத்துக்களால் பொறிக்கப்பெறவேண்டிய நல்ல நாள். நாற்பது ஆண்டுகளே உலகில் வாழ்ந்த வள்ளல் பச்சையப்பர் அக் குறைந்த வாழ்நாளிலேயே நிறையப் பொருள் ஈட்டி, பெற்ற

பொருளையெல்லாம் நாட்டு மக்கள் வாட்டம் தீர்க்கும் அறப்பணிக்கே செலவிட்டார்கள். அவ்வாறு செலவிடும் நெறிக்கு உறுதி அளிக்கும் அவர்தம் உயிராவணத்தை (வில்) 1794ஆம் ஆண்டு மார்ச்சு 22ஆம் நாள் எழுதி முடித்தார். எனவே, இந்நாள், அறநிலைய ஆட்சிப் பொறுப்பினராகிய எங்களுக்கு மட்டுமன்றி—அவர்தம் கல்வி நிலையங்களின் வழியே ஆண்டுதோறும் எண்ணற்ற பயன்பெறு மாணவர்களுக்கு மட்டுமன்றி—அறக் கட்டளைகளால் நலம் பெறுவாருக்கு மட்டுமன்றி—நாட்டுக்கே நல்ல நாளன்றோ? ஆம்! இத்தகைய அறநெறியை—சன்மார்க்க சத்திய நெறியைச் சமுதாயத்துக்கு விளக்கி, பெற்றதை மற்றவர்களுக்கு அளித்து, இறந்தும் என்றும் இறவாத புகழ் பெற்ற பச்சையப்பர் விருப்பாவணம் எழுதி வைத்த இந்த நாள் நல்ல நாளேயாம்!

காஞ்சிபுரத்தைச் சார்ந்த எளிய குடும்பத்தில் தந்தை விசுவநாத முதலியாருக்கும் தாய் பூச்சியம்மாளுக்கும் 1754இல் இவர் பிறந்தார். பச்சையப்பர் கருவில் வளரும் காலத்திலேயே தந்தையாரை இழந்தமையின், அவர் தாயார் ஏழ்மைக்கிடையில் காஞ்சியை விட்டுப் பெரியபாளையம் சேர, அங்கேயே நம் வள்ளல் பிறந்தார். பின் அங்கும் நிலைத்து வாழ முடியாவகையில் சென்னையை நாடினார். சென்னையில் அக்காலத்தில் சிறப்புற வாழ்ந்த இருமொழி அறிந்த (துவிபாஷி) தரகராய் வாழ்ந்த பவுனி நாராயணப் பிள்ளை அவர்களே பச்சையப்பர்தம் குடும்பத்தை ஏற்றுப் பாதுகாத்ததோடு, பிற்காலத்தில் அவர் வாழ்வையும் வளமுறச் செய்தவ ராவர்.

இளமையிலேயே பவுனி நாராயணப் பிள்ளையுடன் பழகி, தாமும் 'துவிபாஷி'யாகி; ஆங்கிலக் கல்வி

கணக்கறிவு இவற்றுடன் சிறந்து, பச்சையப்பர் பல பண்டங்களை வாங்கியும் விற்றும் வாணிபத் துறையில் தேர்ச்சியுற்றார்; பதினாறு வயதிலேயே நல்ல வருவாய் பெற்றார். எனினும் எதிர்பாராத விதமாக யாரிடமும் சொல்லாமல் பச்சையப்பர் ஆங்கிலேயர் படையில் சேர்ந்துவிட்டார். ஆனாலும் அவரை ஆதரித்த பவுனி நாராயணப் பிள்ளை தம் செல்வாக்கைப் பயன்படுத்தி, அவரை மீட்டு, தாம் ஆற்றிவந்த 'துவிபாஷி'ப் பணியிலேயே, 'நிகோலஸ்' என்ற ஆங்கில வணிகரிடம் அமர்த்தினார். அந்த வாழ்க்கைத் திருப்பமே வையத்தில் பல்லாயிரக்கணக்கான ஏழை மக்களை வாழ வைக்கும் நல்ல திருப்பமாக அமைந்துவிட்டது.

பச்சையப்பருடன் பிறந்த தமக்கையர் இருவர்; அவர்கள் மணம் புரிந்து வாழ்ந்துவந்தனர். பச்சையப்பர் தம் தமக்கை மகளான அய்யாரு அம்மையை மணந்து வாழ்ந்தார். எனினும் மகப்பேறு இன்மையின் பின்னர், திருமறைக்காட்டினைச் சேர்ந்த பழநியம்மாளை இரண்டாம் தாரமாக மணந்தார். இரண்டாம் மனைவிக்குப் பெண் குழந்தை பிறந்தது. எனினும் இவருடைய அந்த இரண்டாம் மனைவியும் மகளும் இறந்துவிட்டனர். முதல் மனைவியார் இவர் விருப்ப ஆவணம் செயல்பட ஆவன செய்தார்கள்.

பச்சையப்பருக்கு இளமையிலேயே அற உணர்வும் சமய ஈடுபாட்டுணர்வும் மிகுதியாக இருந்தன. இளமையிலேயே—இருபதாவது வயதிலேயே—தம் சொந்த ஊராகிய காஞ்சிபுரத்தில் கோயில் கொண்டுள்ள—ஏகாம்பரநாதருக்குப் பல திருப்பணிகள் செய்தார்—திருமண மண்டபம் கட்டினார்—கும்பாபிஷேகம் செய்ய

உதவினார். இவையன்றிப் பலவகைப் பொதுப்பணிகளை யும் செய்து சமுதாயத்தைக் கைதூக்கிவிட்டார்.

அக் காலத்திய நிலையில் ஆங்கிலேயருக்கும் நவாபு களுக்கும் இடையில் பல இடங்களில் நிலவரி முதலிய வற்றைத் திரட்டித் தருவதிலும் பிற பணிகளிலும் ஈடுபட்ட பச்சையப்பர், தம் நிலையினைச் செல்வத் தாலும் செல்வாக்காலும் உயர்த்திக்கொண்டார். தமிழ் நாட்டுத் தென்பகுதியில் இவர்தம் உதவியை வேண்டினர் ஆங்கிலேயர். அங்கேயும் சென்று ஒல்லும் வகையில் உதவி அவர்களுடன் நின்றார்; பின் தஞ்சை அரசருடன் கலந்து பல பணிகளை மேற்கொண்டார். மொத்தத்தில் தமிழ்நாடு முழுதும் பச்சையப்பரின் பணிபுரி திறனும் செயல் நலனும் சிறந்தோங்க, அவர்தம் வாழ்வும் வளமும் செல்வமும் செல்வாக்கும் பெருகின.

இத்தகைய பெரும் பணிகளுக்கிடையிலேதான் பச்சையப்பர் சமயப் பணியினையும் தளராது செய்து வந்தார். சத்திரங்கள் கட்டினார்—கோயில்களைப் புதுப் பித்தார்—அன்ன சாலைகள் அமைத்தார். தில்லைப் பெருமானுக்குப் பல திருப்பணிகள் புரிந்தார். இன்று பச்சையப்பர் அறப்பணி நடவாத பெருங்கோயில்கள் நாட்டில் இல்லை எனலாம்.

இவர் சென்னையில் கோமளீஸ்வரன் பேட்டையில் கூவம் ஆற்றங்கரையில் ஒரு வீடுகட்டிக் கொண்டு தங்கினார். இவர் இருந்த தெருவிற்குக் 'காஞ்சிபுரம் பச்சையப்ப முதலியார் தெரு' என்றே பெயரிட்டார்கள். ஆயினும் இன்று அப் பெயர்ப் பலகைகூட அங்கே இல்லாத நிலையில் உள்ளது. சென்னை நகராட்சியாளர்

அவர் பெயர் பொறித்த பலகையினைத் தெருவில் இரு புறங்களிலும் இடுவார்கள் என நம்புகிறேன்.

கும்பகோணத்தில் திருப்பணி செய்து கொண்டிருந்த வேளையில் அவருக்கு நலிவு உண்டாயிற்று—நீங்காத நலிவாயிற்று. எனவே 1794 மார்ச்சு 22இல் தம் உயிராவணத்தை எழுதி முடித்தார். அதைப் பவுனி நாராயணப் பிள்ளைக்கு அனுப்பி, தம் இறுதிநாள் நெருங்கிவிட்டதையும் குறிப்பிட்டார். அப்பர் கயிலைக் காட்சி கண்ட—தென் கயிலாயம் என்று போற்றப்பெறு கின்ற திருவையாற்றில் தம் உயிர்பிரிதல் வேண்டுமென்று விரும்பிய பச்சையப்பர், தம் விருப்பப்படியே அங்கே சென்று தங்கி, 1794 மார்ச்சு 31இல் இறையடி யுற்றார்.

பின் இவ்வள்ளலது உயிராவணப்படி பல அறங்கள் நடைபெற ஏற்பாடு செய்யவேண்டிய வழிவகைகளைப் பவுனி நாராயணப் பிள்ளை மேற்கொண்டார். குடும்பம் காரணமாகப் பல சிக்கல்கள் தோன்றினபோதிலும், இறுதி யில் நீதிமன்றம் நல்ல ஆட்சிக்குழுவினை அமைத்து, என்றும் செயல்படும் வகையில் ஏற்பாடு செய்தது. இவ்வாறு தொடங்கப்பெற்ற அவ்வறக் கட்டளைகளின் அடிப்படையில் அப்போது 'அட்வொகேட் ஜெனரலாக' இருந்த 'ஜார்ஜ் நார்ட்டன்' என்னும் அறிஞரின் முயற்சி யால் 1842ல் கல்விக்கூடம் தொடங்கப்பெற்றது. அந்தத் தொடக்க நாளிலிருந்து நாம் இப்போது 125 ஆண்டுகளை கடந்துவிட்டோம். ஆம்! இந்த நீண்ட காலத்தில் நாம் எவ்வெவ்வாறு வளர்ந்தோம்—உயர்ந்தோம்—பணி யாற்றினோம்—பயனளித்தோம் என்பதை இனிக் காண்போமாக!

"சென்ற காலத்தின் பழுதிலாத் திறமும்
இனி எதிர் காலத்தின் சிறப்பும்
இன்றெழுந் தருளப் பெற்ற பேறிதனால்
என்றைக்கும் திருவருள் உடையேம்"

என்று தெய்வச் சேக்கிழார் பாடிய பாடல் இங்கே என் நினைவிற்கு வருகின்றது. கடந்த 125 ஆண்டுகளில் பச்சையப்பர் ஆற்றிய கல்விப்பணி அளவிடற்கரியது.

'எஸ்பிளனேடில்' சிறிய அளவில் தொடங்கிய பள்ளி உயர்ந்தது. அப்படியே அதன் கட்டடம் வானோங்கி இன்றளவும் சிறந்து நிற்கின்றது. நூறு ஆண்டுகளுக்கு மேலாகியும் அக்கட்டடம் தன் கலையும் எழிலும் குன்றாது பசுமையோடு விளங்குகின்றது. சென்னைக்கு வருவார் யாரும் அதன் தோற்றத்தைக் கண்டு வியவாதிரார். அங்கே தொடங்கிய பச்சையப்பர் கல்லூரி, காலந்தோறும் வளர்ந்து நல்ல நிலையுற்று, ஆயிரக்கணக்கான மக்களை ஏற்று, பல்வேறு துறைப்பாடங்களையும்கொண்டு ஓங்கிய காலத்து, இடத்தின் எல்லையில் குறுக்கம் கண்டது. எனவே, சேத்துப்பட்டில் உள்ள இன்றைய கட்டடங்கள் கால் நூற்றாண்டுக்கு முன் எழுந்தன—வளர்ந்தன. இன்று தனியார் கல்லூரிகளில் மிக அதிகமான பாடங்களைப் பட்ட வகுப்பு நிலையிலும் உயர்நிலையிலும் கொண்டுள்ளது பச்சையப்பன் கல்லூரியே ஆகும். இக் கல்லூரியில் பயின்ற மாணவர்கள் தமிழ்நாட்டில் மட்டுமன்றி, பரந்த பாரத நாட்டில் மட்டுமன்றி—விரிந்த உலகில் பல்வேறு இடங்களில் பல்வேறு துறைகளில் பணியாற்றிச் சிறந்து வாழ்ந்தார்—வாழ்கின்றனர். கல்லூரிப் பேராசிரியர் பலர்—கல்லூரி முதல்வர் பலர்—வணிகர் பலர்—உயர்நீதிமன்ற, இந்தியப் பெருநீதிமன்ற நடுவர் பலர்—அரசியல் மேல் அலுவலர் பலர்—அந்நிய

நாடுகளில் இந்தியத் தூதுவர் அலுவலகங்களில் பலர்—ஏன்?—அமைச்சர்கள் பலர்—பாராளுமன்ற உறுப்பினர் பலர்—சட்டமன்ற உறுப்பினர் பலர்—இன்றைய தமிழக முதலமைச்சர் திரு. சி.என். அண்ணாதுரை அவர்களும் ஆந்திர மாநில முதலமைச்சர் திரு. பிரம்மானந்த ரெட்டியவர்களும் பச்சையப்பர் தந்த செல்வங்களே! இன்று தில்லிப் பாராளுமன்றத்தில் ஒரே கல்லூரியில் பயின்ற மாணவர் அதிக எண்ணிக்கையில் உள்ளனர் என்றால், அக்கல்லூரி பச்சையப்பர் கல்லூரியே யாகும். இவ்வாறே எல்லாத்துறைகளிலும் எங்கள் பழைய மாணவ மணிகள் ஒளிவிட்டுத் திகழ்வதைக் காண நாங்கள் உள மகிழ்கின்றோம்.

வளர்ந்துவரும் அறிவியல் துறையிலும் வாழ்வளிக்கும் மொழித் துறையிலும் எங்கள் கல்லூரி முதலிடம் பெறுகிறது. வேதியியல் விலங்கியல், மரவியல், இயற்பியல் போன்ற துறைகளில் பட்டப்படிப்பும் உயர் பட்டப் படிப்பும் (எம்.எசி) கொண்டுள்ளதோடு, வேதியியல் துறையில் ஆய்வுப் படிப்புக்கும் வகை செய்துள்ளோம். அப்படியே தாய்மொழியாம் தமிழ் மொழியில் எல்லா வகுப்புக்களிலும் சிறப்பு நிலை கண்டு முதுகலை வகுப்பும் (எம்.ஏ.) ஆய்வுப் படிப்பும் ஆக்கம் பெறச் செய்துள்ளோம் இத்துறைகளில் பயின்று பயன்பெற்றோர் பலர். இங்கே மொழி வேறுபாடு இன்றி அறுவகை மொழிகளை மாணவருக்கு அளிக்கிறோம். ‘பச்சையப்பர் கல்லூரிப் படிக்கட்டும் பைந்தமிழ் பாடும்’ என்பது நாடறிந்த நல்ல மொழி. ஆம். இங்கே தமிழைச் சிறப்பாகப் பயின்ற மாணவர் இன்று உலகில்—இந்திய நாட்டின் பல பாகங் களில் சிறப்புப் பணியாற்றுகின்றனர். காசியில்—தில்லியில். —சண்டிகரில்—கல்கத்தாவில்—பம்பாயில் — கோலாலம் பூரில்—ஏன்?—அமெரிக்க நாட்டில் சில இடங்களில் பச்சை

யப்பரின் பைந்தமிழ்க்கொடி பறக்கின்றது. இவ்வாறே பிற துறைகளில் பயின்ற மாணவர் நாடெங்கும் நலம் பெற—திறம் உற—செம்மை விளங்கச் செயலாற்றுகின்றனர். தமிழ்நாட்டு வங்கிகள் பலவற்றிலும் பல நெறியிலும் எம் மாணவர் செயலாற்றுகின்றனர். சுருங்கச் சொல்லின் எம் கல்லூரி மாணவர் 'வாழ்வாங்கு வாழக்' கற்றுச் சிறக்கின்றனர் எனலாம்.

பச்சையப்பர்தம் செம்மை திறம்பா அற ஆட்சியைக் கண்ட அறவோர் பலர் தம் செல்வத்தால் அறம் வளர்க்கக் கருதிய ஞான்று, அச்செல்வங்களைப் பச்சையப்பர் அறநிலையக் குழுவினரிடம் ஒப்படைத்தனர். அதனால் அறநிலையப் பொருள் வருவாய் மிகுந்ததோடு, அறமாற்றும் நிலையும் உயர்ந்தது. அந்த அடிப்படையிலேயே சென்னையில் உள்ள கல்லூரி மட்டுமன்றி இங்கேயே வேறு பல நிறுவனங்களும் பிறவிடங்களில் கல்லூரிகளும் உயர்நிலைப் பள்ளிகளும் தோன்றி வளரலாயின. செங்கல்வராய நாயக்கர் தொழிற்பயிற்சி நிலையம் ஆண்டுதோறும் அத் தொழில் துறையில் வல்ல மாணவர்களை நாட்டுக்கு நல்குகிறது. சென்னை, காஞ்சி, சிதம்பரம் ஆகிய இடங்களில் உயர்நிலைப்பள்ளிகளும், நடுநிலைப்பள்ளிகளும் நன்கு செயல்படுகின்றன. காஞ்சியில் பச்சையப்பர் கல்லூரி தொடங்கப்பெற்று பல ஆண்டுகளாகச் சிறக்க நடைபெறுகின்றது. இவ்வாண்டு காஞ்சியிலும் கடலூரிலும் மகளிர் கல்லூரி தொடங்கியுள்ளோம். சென்னையிலும் அண்மையில் அறமாற்றிய கந்தசாமி நாயுடு பேரால் மற்றொரு கல்லூரி தொடங்கியுள்ளோம். இன்னும் சென்னையில் மகளிர் கல்லூரி ஒன்றும் பயிற்றாளர் கல்லூரி (ட்ரெயினிங்) ஒன்றும் தொடங்கத் திட்டமிட்டுள்ளோம். எங்கள் கல்விப்பணி ஒல்லும் வகை

யிலெல்லாம் ஓங்க உதவிய—உதவும் எல்லா அன்பர்களுக்கும் எங்கள் வணக்கமும் நன்றியும் உரியனவாகும்:

இக் கல்லூரிகளிலும் பிற கல்விக்கூடங்களிலும் பயிலும் மாணவர்களுள் பலர் ஏழை மக்களே. ஏழையாகப் பிறந்து, ஏழ்மையை உணர்ந்த பச்சையப்பர்தம் அற நிலையம் அந்த ஏழை மக்களை ஏற்று எல்லாத் துறைகளிலும் அவர்கள் முன்னேறப் பாடுபடுகின்றது. பச்சையப்பர் ஏழை மாணவன் ஒருவனை அணைந்து நிற்கும் காட்சியே—பச்சையப்பர் கல்லூரியின் முகப்பில் உள்ள காட்சியே—எங்கள் வாழ்வின் இலட்சியக் காட்சி. இந்தக் குறிக்கோள் அடிப்படையில் எங்கள் அறக்கோயில் அமைகின்றது.

**கற்றதனா லாய பயனென்கொல் வாலறிவன்**
**நற்றாள் தொழாஅர் எனின்**

என்பது வள்ளுவர் வாய்மொழி. எனவே கல்விப் பயன் கடவுள் உணர்வு பெறுதலேயாம். பச்சையப்பர் அற நிலையத்தின் பெரும்பணி அத் துறையிலேயே நடைபெறுகின்றது. குமரி தொட்டு இமயம் வரையில் உள்ள பெருங் கோயில்களிலெல்லாம் பச்சையப்பர் அறக்கட்டளை உண்டு. சிதம்பரத்தில் ஆண்டுக்கு இருமுறை நடக்கும் தேர்த்திருவிழா பச்சையப்பரைச் சார்ந்ததே. ஆக, கல்வி, சமயம் இரண்டின் அடிப்படையிலே சமுதாய வாழ்வைச் செம்மை நெறிக்கு ஈர்த்துச் செல்லும் பெருவழிகாட்டியாக எங்கள் அறநிலையம் இயங்குகிறது.

தமிழ்நாட்டிலே பல நிறுவனங்களை அமைத்து, ஒரு நூறு ஆண்டுகளுக்கு மேலாக அவற்றைப் போற்றிப் பாதுகாத்து, மக்கள் வாழ்வுக் கண்ணாகிய கல்வியையும் அதன்வழி வளத்தையும் அளித்து வரும் எங்கள் அறநிலையம் இன்னும் பலப்பல ஆக்கப்பணி செய்ய

அவாவுகின்றது. நம் பச்சையப்பர் பெயராலேயே பல்கலைக்கழகமே அமைய வேண்டாவோ? வளர்ந்து வரும் தேவைகளுக்கு ஏற்ப, கல்லூரிகளில் புதுப்புது பாடங்களுக்கு உரிய இடமும் கட்டடங்களும் அமைத்தல் வேண்டும். புதிதாகத் தோன்றியுள்ள கல்லூரிகளின் வளர்ச்சிக்குப் பெருந்தொகை செலவிட வேண்டும். பிற அறப்பணிகள் செம்மையாக வளர வேண்டும். இப் பல்வேறு நிறுவனங்களில் பணியாற்றுவோர் அனைவரும் நிறைநலம் பெறக்கூடிய வகையில் நாங்கள் செயலாற்றுகிறோம். இன்னும் அவர்தம் வாழ்வும் வளமும் ஓங்க பல செயல்கள் ஆற்றப்பெறல் வேண்டும். பச்சையப்பர் பெயரால் உள்ள அறச்சாலைகள்—அட்டிற்சாலைகள்—ஆதுலர் சாலைகள்—பிற செயலகங்கள் அனைத்தும் வளரின் நாடு நாடாகும் என்பதை நல்லவர் அறிந்துள்ளார்கள். இந்த 125 ஆண்டுகளாகத் திறம்படச் செயலாற்றிய அறக்குழுவினர் அயராது மேலும் மேலும் செயல்பட முன் நிற்கின்றனர். எனவே உலகெங்கணும் உயர்ந்து செம்மைப் பணியாற்றும் எம் பச்சையப்பர் பயந்த நல்லவர் அனைவரும் இவ்வறப்பணி வளர ஆவன காண வேண்டும் எனக் கேட்டுக் கொள்ளுகிறேன்.

நாங்கள் நடத்தும் கல்விச்சாலைகள் 'இந்து மக்களுக்கே' என்று வரையறுத்த சட்டத்தால் அறுதியிட்ட போதிலும் 'யாதும் ஊரே யாவரும் கேளிர்' என்ற தமிழ்ப் பண்பாட்டு அடிப்படையிலும் 'தென்னாடுடைய சிவனே எந்நாட்டவர்க்கும் இறை' என்ற சமய ஒருமைப் பாட்டு உணர்விலும் இன்று எல்லாச் சமய மாணவர்களையும் சேர்த்து அணைத்துச் செல்லுகிறோம் என்பதைப் பெருமையோடு கூறிக்கொள்ளுகிறேன். எனவே இந்த அறநிலை பழம் கடவுளைப் போன்று சாதி சமயம் கடந்ததாய்—நாட்டு எல்லை கடந்ததாய்—நிற

வேறுபாடு கடந்ததாய்—ஏன்?—காலங் கடந்ததாய் வாழும் ஒரு பெரும் அறநிலையமாகும்! இத்தகைய நல்ல அறநிலையம், தன் கடந்த 125 ஆண்டு வாழ்வைத் திரும்பிப் பார்க்கும் அதே வேளையில், எதிரில் நிற்கும் எண்ணற்ற ஆண்டுகளையும் எண்ணி எண்ணி நாடு வளமுற—மொழி வளம் பெற—மக்கள் வாழ் வாழ்வாகத் தக்க ஆக்கப்பணி புரியத் திட்டமிடுகின்றது. அதன் தொடக்கமே இம் மாதம் 22, 23, 24ல் நடைபெறும் விழா! இந்த நல்ல பணி நாடொறும் தழைக்கவும் ஓங்கவும் உயரவும் மக்கள் அனைவரும் சேரவந்து உதவ வேண்டும் என்று கேட்டுக்கொண்டு அமைகின்றேன். வணக்கம்.

1967—கல்லூரி 125வது ஆண்டு மலர்

## 13. வளரும் தமிழை வாழ வைத்தவர்

தமிழ் தொன்மையான மொழி. அத்துடன் அது தன்னைத் தொட்டாரை வாழ வைக்கும் தன்மை வாய்ந்தது. வேற்றுப் பணி புரியவந்த பிற நாட்டவருள் சிலர் தமிழைத் தொட்டுச் சாகாவரம் பெற்றமை நாடறியும். அப்படியே தமிழ்நாட்டில் தமிழராகப் பிறந்து தமிழைக் கற்காது—தமிழ் அறியாது—செம்மாந்து வாழ்ந்து உலகில் தாம் வாழ்ந்த சுவடே தெரியாமல் மறைந்தவர் பலர். ஆனால் ஏழையராயினும் எளியராயினும் தமிழைத் தொட்டுத் தமிழைப் போற்றி, தமிழ் வாழத் தாம் வாழ நினைத்தவர்களை அத் தமிழ் வாழ வைக்கத் தவறவில்லை. இலக்கிய வரலாற்றினை

நன்கு அறிந்தவர் யாவரும் இவ்வுண்மையை நன்கு உணர்வர். ‘இருந்தமிழே உன்னால் இருந்தேன்’ என்ற தமிழ்விடு தூதின் அடிக்கேற்ப, சிலர் நாட்டில் தமிழால் தம் வாழ்வைப் பெருக்கிக்கொண்டு, வாழ்ந்து மறையும் அதே வேளையில், ‘இருந்தமிழே உனக்காக இருந்தேன்’ என்று தம் வாழ்வைத் தமிழுக்காக ஒப்படைக்கும் நல்லவர்கள் காலத்தை வென்று வாழ்கின்றார்கள். இது அன்றுதொட்டு இன்று வரையில் காணும் வரலாற்று—வாழ்வு நிகழ்ச்சியாகும். இந்த வரிசையில்—மரபில் இன்றை தமிழக முதல்வர் கலைஞர் அவர்களும் சிறக்க இடம் பெறுகிறார்கள்.

தமிழர், தமிழ், தமிழ்நாடு என்று சொன்னாலே தமிழராலேயே வேற்றுப் பார்வையில் பார்க்கப்பெற்ற அந்த நாளிலேயே ‘தமிழ் வாழ்க’ எனப் பட்டிதொட்டி களிலெல்லாம் முழக்கித் தமிழ் மாணவரினத்தைத் தட்டி எழுப்பித் ‘தமிழினம்’ என்ற தனி இனம் உண்டு என்ற உணர்வை மூட்டி, அத் தமிழினம் உலகில் தலைநிமிர்ந்து வாழத்தக்க வளமும் வரலாறும் பெற்ற ஒன்று என்பதை யும் நிறுவி, மக்கள் உள்ளங்களில் ஒளிவிளக்கு ஏற்றி வைத்த பெருமை பேரறிஞர் அண்ணா அவர்களைச் சாரும். அவர்தம் உடன்பிறவாத் தம்பியாய்—அவர் தொட்ட பணிகள் துலங்கும் வகையில் தம் வாழ்வை அமைத்துக் கொண்ட கலைஞர் அவர்தம் தொண்டு போற்றக் கூடியதாகும்.

தமிழ்நாட்டில் பிறந்தவர் தமிழையே அறியாத நிலையில் வேற்றுமொழிகளைக் கட்டாயமாக்கிய அரசாங்கங்களை எதிர்த்துப் போராட்டக் காலங்களில் எல்லாம் கலைஞர் அவர்கள், அப்போர்களின் முன்னணி யில் நின்று வீரம் விளைத்து வெற்றி கண்டவராவார்.

தம் உடல் நலம் தளர்ந்த நிலையிலும் உள்ளம் தளராது நோய் தாங்கிக் காவலர் (போலீஸ்) தம் தடியடியினைத் தாங்கித் தமிழுக்காகவே வாடி, வதங்கிச் சிறையிடைப் பட்டு உழன்ற காலத்தை எண்ணின் கண்ணில் நீர் முட்டு-கின்றது. ஆம்! அத்தகைய அருமைத் தமிழ்த் தொண்டே—ஆக்கப் பணியே—மொழிப்பற்றே இன்று அவரைத் தமிழக முதல்வராக்கிற்று என்றால் இதில் யாரும் ஐயப்படமாட்டார்கள் அன்றோ!

எழுத்திலும் பேச்சிலும் தமிழ் நலத்தைக் கண்ட மக்கள் அண்ணாவிடத்தும் அவர்தம் தம்பியரிடத்தும் தம் உள்ளத்தைப் பறிகொடுத்த காரணம்தான், பாராளும் சட்டமன்றங்களில் அவர்தம் கழகத்தைச் சார்ந்த பலர் இடம்பெற ஏதுவாகின்றது. ஏழைத் தமிழ் மக்கள் தம் தெய்வத் தமிழ் நலம் காப்பார் யாரையும் காப்பார் என்ற உண்மையை நிறுவிவிட்டனர். எனவே கலைஞர் ஆட்சி தமிழகத்தில் மலர்ந்து சிறக்கின்றது.

கலைஞர்தம் பேச்சுத் திறனும் எழுத்தும் கவித் திறனும் நாடறிந்தவையே. ஆசுகவியாக அகில உலகம் புகழும் வகையில் அவர்தம் ஆக்கப்பாடல்கள் பல நாட்டு மூலை முடுக்குகளில் எல்லாம் ஒலித்துக் கொண்டிருக் கின்றன. மாற்றாரும் விரும்பிப் படிக்கும்வண்ணம் அவர்தம் தெள்ளிய துள்ளும் தமிழ் நடையை நாளிதழ், கிழமை இதழ்கள் வழியே காண்கிறோம். அவரைப் பழித்துரைக்கும் பத்திரிகையாளர்களும்கூட, அவர்தம் கவிதைகளையும் கட்டுரைகளையும் போட்டியிட்டு வாங்கி வெளியிடும் செயலொன்றே அவர்தம் கலைநலத்தை— கருத்து விளக்கத்தை—கலையுள்ளத்தைக் காட்டும்,

எழுத்தில் மட்டுமன்றிக் கலைஞர் தம் செயலிலும் தமிழ் நலம் தெளிவாகும். ஓடும் உந்து வண்டிகள் எல்லாம், திருக்குறளை மக்களுக்கு விளக்கிக்கொண்டே இருக்கின்றனவன்றோ? எத்தனையோ ஊர்ப்பெயர்கள் உண்மையான நல்ல தமிழ்ப்பெயரைப் பெற்றுத் திகழ் கின்றன. பாரதியார் கண்ட 'தமிழ்நாடு' என்ற பெயர் இந்நாட்டுக்கு இவர்கள் கட்சி ஆட்சிக்கு வந்த பிறகே பெற வாய்ப்பு உண்டாயிற்று.

"தமிழ்த்திரு நாடுதனைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா"

என்ற பாரதியின் வாக்கை வாழவைத்த பெருமையோடு, அத் தமிழ்த்தாய் வணக்கத்தையே தெய்வ வணக்க மாக்கிய பெருமையும் இவர்கட்கு உண்டன்றோ? வள்ளுவர் கோட்டம் கண்டு அவர் புகழ் பரப்ப வழி வகுத்தது—பூம்புகார் கண்டு தமிழர் பழைமையைக் காத்தது—இவை போற்றப்பட வேண்டியவை.

அலுவலகங்களிலும் ஆவணங்களிலும் பிற இடங் களிலும் நல்ல தமிழ்—நாட்டுமொழி—மக்கள் உணரும் மொழி இடம்பெறச் செய்த பெருமை கலைஞரையே சாரும் என்பது தெளிவு. பெயர் விளங்காப் பல ஊர்களின் பெயர்கள் தற்போது தெளிவுற்றுத் தம் பெயர்களை விளக்கிக் கொண்டுள்ளன. எங்கு நோக்கினும் நல்ல தமிழைத் தாங்கிக்கொண்டு பெயர்ப் பலகைகளும் விளம்பரங்களும் காட்சி அளிப்பதைக் கண்டு தமிழ் உள்ளம் களிதுளும்புகின்றது இவ்வாறு தமிழ்நாட்டில் எங்கும் எதிலும் தமிழ் என்பதைச் செயலில் கொண்டு வந்து, அத் தமிழை வாழவைத்த நல்ல ஆட்சிக்குத் தலைவராக உள்ள கலைஞர் அவர்கள் 'நீடு வாழ்க' என வாழ்த்துகிறேன்.

கற்றாரும் மற்றாரும் போற்றும் வகையில் ஆட்சிப் பணிகளுக்கு இடையில் அரிய கட்டுரைகளையும் கவிதைகளையும் நாள்தொறும் வடித்துத் தந்துகொண்டிருக்கும் கலைஞர் செயலே அவர் தமிழ் உள்ளத்தினைத் தெள்ளத் தெளியக் காட்டுகின்றது. இன்னும் தமிழ் நாட்டுக்கும், தமிழுக்கும், தமிழ் மக்களுக்கும் செய்ய வேண்டிய தொண்டுகள் பல 'தமிழ் மொழியை உலகம் உணர்ந்து போற்றத் தொடங்கிவிட்ட போதிலும் அதன் ஏற்றம் முற்றும் போற்றப் பெறவில்லை தமிழ் வாழ்வு ஏற்றம் பெறவேண்டிய அளவு முற்றும் உயரவில்லை. தமிழகம் 'நாடென்ப நாடா வளத்தன'. என்ற வள்ளுவர் வாக்குக்கு முற்றும் இலக்காகவில்லை. கலைஞர் அவர்கள் இன்னும் முயன்று, நாட்டில் உலகில் நம் தமிழை—தமிழரை—தமிழ்நாட்டை எல்லா வகையிலும் ஏற்றம் பெறுமாறு காண ஆவன செய்வார்கள் என்ற நம்பிக்கையுடையேன். அவர்தம் திறன்மிகு செயலால், பாட்டால், எழுத்தால் தமிழ்நாடு—மொழி—மக்கள் அனைத்தும் நலம் பெறும் என்ற துணிவோடு. கலைஞர் அவர்கள் செயலும் திறனும் காலம் வென்று அவரை வாழ்விக்கும் என்ற உணர்வோடு, அவர்தம் ஆக்கப்பணிகள் சிறக்க என்ற வாழ்த்தோடு என் உரையை முடித்துக்கொள்கிறேன்.

பேச்சு—1972

## 14. நாட்டுக்குழைத்த நல்லவர்

திரு மீ. பக்தவத்சலம் அவர்களை நான் இளமை முதலே அறிவேன். நான் செங்கற்பட்டில் பள்ளியில் படித்துக் கொண்டிருந்தபோது 'இந்திய வாலிபர் சங்கம்' அமைத்துத் 'தீண்டாமை விலக்கு', 'மது விலக்கு' போன்ற

பிரசாரங்களைச் (1929-31) செய்துவந்தேன். பலர் உறுப்பினராகி உடன் செயலாற்றினர். அப்போது சென்னையில் படித்துவந்த ஓ.வி. அளகேசன் அவர்கள் தீவிர காங்கிரஸ்வாதி. அவர் எங்கள் சங்கத்தில் கலந்து ஊக்கமளிப்பார். அப்படியே திரு. பக்தவத்சலம் அவர்களும் ஆண்டு விழா முதலியவற்றில் கலந்துகொண்டு எங்களை வாழ்த்துவார்கள். எனவே அந்த நாள் முதலே (1930) அவர்களை நன்கு அறிவேன்.

பின் நான் செங்கற்பட்டு மாவட்டக் கழகத்துக்கு உறுப்பினனாகப் போட்டியிட்டபோது, இந்தித் திணிப்பின் காரணமாக காங்கிரஸ் தொடர்பு அற்றவனானேன். அதற்கு முன்பும் நான் தீவிர உறுப்பினனாக இன்றேனும், காங்கிரஸ் கட்சியில் ஈடுபாடு கொண்டு நின்றேன். 1936ல் இராஜாஜி மந்திரிசபை அமைத்தபோது பக்தவத்சலம் அவர்கள் பார்லிமெண்டரி காரியதரிசியாகி, மயிலை வடக்கு மாடவீதியில் குடியிருந்தார். (அன்றைய எண்-4) அப்போது அடிக்கடி அவர்களைப் பார்ப்பதுண்டு. பின் நான் காங்கிரஸ் வேட்பாளரை எதிர்த்துத் தேர்தலில் 1938ல் போட்டியிட்டபோது எனக்கு எதிராக அளகேசன், பெரியார் முத்துரங்க முதலியார் உட்படப் பலர் ஊர்தொறும் பிரசாரம் செய்தனர். ஆயினும் பக்தவத்சலம் அவர்களை அழைத்தபோது 'நான் பரம சிவானந்தத்துக்கு எதிராக பிரசாரம் செய்ய வர மாட்டேன்' என மறுத்துவிட்டார். இதை எனக்குப் போட்டியாக, காங்கிரஸ் சார்பில் நிறுத்தி வைக்கப்பெற்ற என் நண்பரே சொல்லக் கேட்டு வியந்தேன். பிறகு சென்னை வந்தபோது அவரைக் கண்டு நன்றி தெரிவித்துக் கொண்டேன். தேர்தலில் நான் வெற்றி பெற்று ஐந்தாண்டு (1838-43) உறுப்பினனாக இருந்தேன்.

திரு பக்தவத்சலம் அவர்கள் தொடர்ந்து அரசாங்கத்தில் காரியதரிசியாகவும் பின் அமைச்சராகவும் பொறுப்பான உயர்நிலையில் இருந்தமையால் அடிக்கடி மக்கள் தேவை — நலம் கருதி அவரைக் கண்டேன். அவரும் 'காட்சிக் கெளியராய்', கேட்டுக் கூடியவரையில் பல நல்ல ஆக்கப் பணிகளுக்கு உதவி அளித்தார். ஒருமுறை நாட்டில் ஊற்றுக் கால்வாய்களைத் துப்பரவு செய்து, வேளாண்மையைப் பெருக்க நினைத்த நிலையில் எங்களூர்களுக்கு நன்மை செய்ய வலிந்து உதவினார். (அவர் பொதுப் பணித்துறை அமைச்சராக இருந்தார்.) என்னை அழைத்து அவர்கள், உங்களூர்க் கால்வாயினைச் சுத்தம் செய்யும் பணியினை நீயே எடுத்துக் கொள். ஒப்பந்தக்காரர்கள் கொண்டால் பாதிப் பணமும் அதில் வந்து சேராது. இப் பணியில் ஊரார் நான்கில் ஒருபாகம் தருவதாக (பணியாக) இசைந்தால், உடன் நீ பணியினை மேற்கொள்ளலாம் என்றார். நான் உடனே என் ஊரில் (அங்கம்பாக்கம்) உள்ள பெரியவர்களைக் கலந்து அப்படியே செய்வதாக ஒப்புக் கொண்டேன். ஒரே வாரத்தில் (1947-48 என எண்ணுகிறேன்) அப்பணி என்னிடம் ஒப்படைக்கப் பெற்றது. (அப்போது கோபால ஐயர் என்பவர் செயற் பொறியராகவும் திருமலை ஐயங்கார் மேற்பார்வைப் பொறியாளராகவும் இருந்தனர் எனஎண்ணுகிறேன்) இவ்வாறு பல வகையில் அன்று ஊர் மக்களுக்கு உதவினார்கள்.

நான் செயலாளனாக இருந்து வாலாஜாபாத்தில் உயர்நிலைப்பள்ளி தொடங்கிய நாளில், எங்களுக்குத் தேவையான ஆறு ஏக்கர் நிலத்தினை (புகைவண்டி நிலையத்துக்கு எதிரில்) அன்றை மாவட்ட ஆட்சியாளரிடம் சொல்லி எங்களிடம் ஒப்படைக்கச் செய்தனர்.

பின் அதன் தொடக்கவிழா, கட்டடக் கால்கோள், திறப்புவிழா ஆகியவற்றில் கலந்து சிறப்பித்தனர். அந்தப் பள்ளிக்குக் கட்ட இருபத்தையாயிரம் குறைய, பேரறிஞர் அண்ணா அவர்கள் இரு நாடகங்கள் நடத்தி முழுவசூலையும் தந்து உதவினார்கள். எல்லா விழாக்களிலும் இருவருமே கலந்துகொள்வர்.

நான் சென்னைப் பச்சையப்பரில் பணி ஏற்றபின் அடிக்கடி அமைச்சர் பக்தவத்சலம் அவர்களைக் காண்பேன். எப்போதும் இன்முகத்தோடு வரவேற்று, வேண்டிய மக்கள் நலத் தொண்டுகள் நடைபெற உதவுவார். நான் என் தேர்தல் வெற்றிக்குப் பின் எந்தக் கட்சிகளுடனும் தொடர்புகொள்ளாது தமிழ்ப்பணி. செய்வது ஒன்றனையே கடனாகக் கொண்டேன் (கருத்தரங்கக் கட்டுரைகள்—ம.கி. தசரதன்). உடன் சமுதாயப் பணிகளில் ஈடுபட்டுத் தொண்டாற்றினேன்

1955ல் திரு.வி.க. மறைவிற்குப் பிறகு ஷெனாய் நகரில் நான் செயலாளனாக இருந்து ஒரு பள்ளி தொடங்க முயன்று வெற்றி கண்டு, அதற்குத் திரு.வி.க. உயர்நிலைப்பள்ளி என்றே பெயரிட்டேன். அதற்கு டாக்டர் மு.வ. அவர்களும், டாக்டர் சுந்தரவதனம் அவர்களும் பெரிதும் உதவினர். அதற்குரிய நிலம்பெற (சுமார் 8 ஏக்கர்) திரு பக்தவத்சலம் அவர்கள் நகராண்மைக் கழக ஆணையருக்குச் சொல்லி உதவினர். பின் பள்ளித் திறப்பு விழாவின்போது அவர்களும் பெருந்தலைவர் காமராசரும் அன்றைய கல்வி அமைச்சர் சுப்பிரமணியம் அவர்களும் ஒருசேர வந்து கலந்து வாழ்த்தினர். இன்று அத் 'திரு.வி,க.' பள்ளி சிறக்க வளர்ந்து மூவாயிரத்துக்கும் மேற்பட்ட நடுத்தர—ஏழை மாணவர்களுக்கு உதவுகிறது.

அமைந்தகரையில் நான் சொந்தமாக வீடுகட்டிக் குடியேறியபோது அந்தத் 'தமிழ்க்கலை இல்லத்தினை திரு பக்தவத்சலம் அவர்களே திறந்து வைத்தார்கள். திறந்து வைத்து எங்களுடன் உடன் இருந்து உண்டு வாழ்த்திச் சென்றனர். பின் அவர் வாழ்த்தின் பலத்தால் என் தனிவாழ்வும் சமுதாயப் பணியும் தொடர்ந்து வளர்ந்துகொண்டே இருக்கின்றன.

தமிழுக்கு அவர்கள் ஆற்றிய பணியினையும் குறிக்கக் கடமைப்பட்டிருக்கிறேன். அவர் காலத்தில்தான் 'ஜான் முர்டாக்'கின் தமிழகம் பற்றிய தொகுப்பும் பிறவும் வெளிவந்தன. தமிழ் வளர்ச்சிக் கழகம் போன்ற அமைப்புகள் உருவாயின. வெளிப் பல்கலைக்கழகங்களில் தமிழ்த்துறை அமைக்கப் பெரிதும் உதவினார். அவர் நிதி அமைச்சராக இருந்தபோது அவற்றிற்கு வேண்டிய நிதியினை உதவினார். ஒருமுறை பெங்களூர் தமிழ்ச் சங்கத்தார் நிதி வேண்டி என்னையும் அழைத்துக் கொண்டு அவரிடம் சென்றனர். ஒரு பத்தாயிரம் எதிர் பார்த்தனர் என அறிந்தேன். அவர்களிடம் பெங்களூரில் இவர்கள் செய்யும் தொண்டினை விளக்கி, வந்த காரியத் தையும் குறித்தேன். 'எவ்வளவு தரவேண்டும்' என்று என்னையே கேட்டார். 'தங்கள் விருப்பம்' என்றேன் அவர்கள் நினைந்து வந்ததற்கு இரண்டு மடங்குக்கு மேலாகத் தருவதாகக் கூறி, அவர்கள் விண்ணப்பத்தி னைப் பெற்று ஒரு வாரத்தில் உரிய காசோலையினையும் அனுப்பி உதவினார்கள்.

அவர்கள் காலத்தில் முதல் முதல் அரசாங்கக் கல்லூரிகளில் தமிழாசிரியர்களுக்கு இருந்த தாழ்வுநிலை நீங்கிற்று. அவரேதான் முதல்முதல் தமிழாசிரியர்களை

முதல்வராகும் நிலைக்கு உயர்த்தினர். பின் பல்கலைக் கழகத்தின் தலையீட்டால் அந்நிலை இடர்படினும் இறுதியில் இவர் முடிவு ஏற்றுக்கொள்ளப் பெற்றது. உஸ்மானியா, தில்லி, லக்னோ, பஞ்சாப் ஆகிய இடங்களில் தமிழ்த்துறை அமைய இவரே முதற் காரணர் என்பது உண்மை. இவ்வாறே பலவகையாய் இவர் தமிழுக்குத் தொண்டாற்றியுள்ளார்.

கோலாலம்பூரில் மலேயாப் பல்கலைக்கழகம் தொடங்கிய காலத்தில் இந்திய மொழித்துறைக்கு எந்த மொழியை அமைப்பது என்று கேட்டனர். அது பற்றிச் சென்று கண்டுவந்த பெரியவர், அம்மொழி 'வடமொழி' யாகத்தான் இருக்கவேண்டும் என இந்திய அரசுக்குத் தெரிவித்தனர். ஆயினும் அன்று தமிழக முதல்வராக இருந்த ஓமந்தூராரும் திரு பக்தவத்சலமும் அதை ஏற்றுக் கொள்ளவில்லை. என்னை அழைத்து உடன் மலேயா செல்ல வேண்டும் என ஆணையிட்டார் பக்தவத்சலம் அவர்கள். 1948ல், அவர்கள் ஆணையினை ஏற்று, மலேயா முழுவதும் சுற்றிச் சுமார் இரண்டு மாதங்கள் இருந்து உண்மை கண்டு இந்தியத்துறைக்குத் தமிழே இருத்தல் வேண்டும் என்று வற்புறுத்தினேன். அப்படியே அங்கே தமிழ் இடம்பெற்று, இன்றும் சிறந்து வாழ்கிறது. இதை நினைவில் வைத்த மலேயா நாளிதழ் 'தமிழ் நேசன்' நான் 1985ல் அங்கே சென்றபோது, முதல் பக்கத்தில் பெரிய தலைப்பில், 'மலேயாப் பல்கலைக் கழகத்தில் தமிழ் வேண்டுமென்று வற்புறுத்திய பேராசிரியர் வருகை' என்று என் புகைப்படத்துடன் செய்தியை வெளியிட்டது. எனவே மலேயா பல்கலைக் கழகத்தில் தமிழ் இடம் பெற்றமைக்குரிய பெரும் பங்கு இவரையே சாரும்.

1956ல் ஜூன் மாதத்தில் ஐதராபாத் உஸ்மானியப் பல்கலைக் கழகத்திலிருந்து எனக்கு ஒரு கடிதம் வந்தது. அதில் 'தமிழக அரசின் (அன்றைய சென்னை அரசின்) பரிந்துரையின்பேரில் அப்பல்கலைக்கழகத் தமிழ்த்துறைத் தலைவனாக நான் நியமிக்கப் பெற்றிருப்பதாகவும் உடன் பணியில் சேரவேண்டும்' என்றும் குறிப்பிட்டிருந்தது. எனக்கு ஒன்றும் விளங்கவில்லை. நான் அதுபற்றி நினைக்கவும் இல்லை. அன்றைய தமிழக முதல்வர் இவர் தாம். எனவே உடனே இவர்கள் இல்லம் சென்று கடிதத்தைக் காட்டினேன். அவர் 'ஆம்! நான்தான் பரிந்துரை செய்தேன். நீங்கள் எங்கும் வெளியூர் செல்ல மாட்டீர்கள் என்பது தெரியும் (ஒருமுறை இதியோப்பியாவுக்கு என்னைச் செல்லுமாறு பணிக்க நான் மறுத்ததைச் சுட்டிக் காட்டினார்). எனவே கேளாமல் அனுப்பி விட்டேன். வெளிமாநிலத்தில் தமிழரின் பெருமையைத் தக்கவாறே காக்கவேண்டும். எனவே நீங்கள் செல்லத்தான் வேண்டும்' என வலியுறுத்தினார். எனினும் நான் இசைந்து, ஒரு வேண்டுகோள் விடுத்தேன். நான் அங்கிருக்கும்போது, அவர்கள் பலமுறை தில்லி செல்லும் வழியில் ஒருநாள் ஐதராபாத்தில் தங்கி, அங்குள்ள தமிழர் கூட்டங்களில் பேசவேண்டும் என்பதே அது. அவர்களும் இசைந்தார்கள்.

உஸ்மானியாவில் ஒருநாள் என் அறையிலிருந்து பணியாற்றிக் கொண்டிருந்தபோது, தொலைபேசியில் சென்னை முதல்வரின் செயலர் என்னை அழைப்பதாகக் கூறினர். உடனே சென்று கேட்டபோது முதல்வரின் செயலர் (கிருஷ்ணையா என நினைக்கிறேன்) மறுநாள் காலை தில்லி செல்லும் வழியில் 9 மணிக்கு முதல்வர் அங்கு இறங்கி, மறுநாள் அதே விமானத்தில் செல்வதாகத்

தகவல் தந்தார். ஆந்திர அரசுக்கும் தெரிவித்திருந்தனர். அப்போது திரு. பிரமானந்த ரெட்டி அங்கே முதல்வர். அவர்கள் அங்கே தங்குவதற்கு வேண்டிய எல்லா ஏற்பாடு களையும் செய்திருந்தனர்.

மறுநாள் காலை விமான நிலையத்தில் தமிழர் பலர் சூழ அவரை வரவேற்றேன். அன்று பிற்பகலிலும் மாலை யிலும் ஐதராபாத்திலும், சிக்கந்திராபாத்திலும் தமிழர் பெருங்கூட்டத்தில் பேசி மறுநாள் காலை புறப்பட்டுச் சென்றார். விமான நிலையத்தில் வழியனுப்ப வந்த என்னிடம், 'திருப்திதானே' என்று சிரித்துக்கொண்டே கேட்டார். நான் அவர்தம் பெருந்தன்மையினை எண்ணி, வியந்து, போற்றி வழியனுப்பினேன்.

அவர்தம் மகளார் ருக்குமணி அவர்கள் திருமணத்தின் போது அவர் அமைச்சராக இல்லை. எனினும் அந்த மண வேளையில் (சுமார் 10-30 மணி இருக்கும்) தலைமைச் செயலகத்தில் பணிபுரியும் எல்லாச் செயலர்களும் பிற அதிகாரிகளும் வந்திருந்ததை, அத்திருமணத்திற்கு வந்து மணமக்களை வாழ்த்திய அன்றைய முதல்வர் இராஜாஜி அவர்கள் 'செக்ரடேரியட்டே இங்கே வந்திருக்கின்றதே' என வியந்தனர். இதுவே திரு பக்தவத்சலம் அவர்களது பண்பினையும் மக்கள் தொடர்பையும் அவர் கீழ் பணிபுரிந்த செயலர் மற்றவர்தம் பரிவினையும் விளக்கும்.

அவர்கள் 1952 தேர்தலில் தோல்வியுற்றபின் பாரத தேவியின் நிருவாக ஆசிரியரானார். எனினும் அதன் பொறுப்பினைக் கவனிக்க ஒருவர் தேவையாக இருந்தது. என்னை அந்தப் பொறுப்பினை ஏற்றுக்கொள்ளச் சொன்னார். நான் கல்லூரியில் பணி செய்வதால் இயலாநிலையினைச் சொன்னேன். பின் அவர்கள் அன்று

பச்சையப்பர் அறநிலையக் குழுவின் முக்கிய தலைவர் செட்டிநாட்டு அரசரிடம் ஏதோ சொன்னார். அவர் ஆணையின்படி எனக்கு உரிய மணிகள் (11) பகல் இரண்டு மணி வரையிலும் கல்லூரியில் அமைய, பிற்பகல் 3 மணியிலிருந்து இரவு 8 மணி வரையில் அவருடன் இருந்து நிருவாகத்தைக் கவனித்து வந்தேன். பாரததேவி காலைப் பத்திரிகை. பின் அவர்கள் சுதேசமித்திரனில் ஆசிரியராக இருந்தபோதுகூட என்னை வரச்சொல்லிப் பேசுவார்கள்.

அவர்தம் பிறந்தநாள் விழா ஆண்டுதோறும் நடைபெறும். சில ஆண்டுகளில் நான் செயலாளனாக இருப்பேன். திரு இராஜாஜி, திரு காமராசர் போன்ற பெருந்தலைவர்கள் வந்து தலைமை வகித்து வாழ்த்துவர். 1967ல் நான் செயலாளனாக இருந்தேன். செயற்குழு திருவல்லிக்கேணியில் கூடியது. யார் தலைமை வகிப்பது என்று பேசினர். நான் அன்றைய முதல்வர் 'அண்ணா அவர்களை அழைக்கலாம்,' என்றேன். எனினும் பலர் அவர்கள் வரமாட்டார்கள் என்றனர். நான் அந்தப் பொறுப்பை என்னிடம் விட்டுவிடுங்கள் என்றேன். கூட்டம் இரவு 8-30க்கு முடிந்தது. நேரே நுங்கம்பாக்கம் 'அவின்யூ சாலை' அண்ணா இல்லத்துக்கு வந்தேன். அவர்கள் மேலே இருந்தார்கள். கீழே செயலர் (திரு. சொக்கலிங்கம் என எண்ணுகிறேன்—சரியாக நினைவில்லை) இருந்தார். என்னை மேலே போகச் சொன்னார். நான் அந்நேரத்தில் வந்ததைக் கேட்க, நான் 'முன்னாள் முதல்வர் பிறந்தநாள் விழாவிற்கு இந்நாள் முதல்வர் தலைமையேற்க வேண்டும்' என்று சொன்னேன். உடனே அண்ணா அவர்கள் 'இதைவிட எனக்கு வேறு என்ன வேலை?' என்று கூறி, செயலாளரை நாட்குறிப்பைக் கொண்டுவரச் சொன்னார்கள், அதில்

அன்று வேறு நிகழ்ச்சி குறிக்கப்பெற்றிருந்தது. அதை மாற்றிக்கொள்ளச் செய்து, தலைமை ஏற்க இசைந்தார்கள். வந்தார்கள். இருவரும் கலந்து மகிழ்ந்த காட்சியினைக் கண்டு மகிழ்ந்தேன். திருவல்லிக்கேணி நேஷனல் மகளிர் பள்ளியில் விழா நடைபெற்றது. விழாவில் வரவேற்றுப் பேசிய நான், இருவரையும் பாராட்டி, போற்றி 'இன்றே போல்க நும்புணர்ச்சி' என்ற சங்கப் புலவன் வாழ்த்தால் வாழ்த்தி மகிழ்ந்தேன். இருவர்தம் உள்ளமும் இயைந்த பெருநிலை கண்டு பெருமகிழ்வெய்தினேன்.

ஒருமுறை சட்டமன்ற மேலவையில் நியமன உறுப்பினர் ஒருவரைத் தேர்வு செய்யவேண்டி வந்தது. திரு பக்தவத்சலம் என்னை அழைத்து, மேலவைக்கு ஒருவரை நியமிக்கவேண்டும். அதற்கு உங்கள் பெயரை சிபாரிசு செய்யப்போகிறேன். 'தமிழாசிரியர் ஒருவரைத் தான் நான் சிபாரிசு செய்வேன்' என்றார். நான் தாழ்மையாக 'ஐயா! நான் அரசியலிலிருந்து விலகி நெடுந் தூரம் வந்துவிட்டேன். மன்னியுங்கள். என்னை விட்டு விடுங்கள்' என்றேன். அவர் இசைந்தார். எனினும் அந்த இடத்துக்கு மற்றொரு தமிழாசிரியரையே நியமித்தார் என்பது குறிப்பிடத்தக்கது.

இவ்வாறே பலவகையில் பணிபுரிந்த நல்லவர். நான் என் சொந்தப் பொறுப்பில் வள்ளியம்மாள் கல்வி அறம் தொடங்கிய போதும் இடம் பெற உதவி செய்தார். (இதனை விரிவாக என் 'திரும்பிப் பார்க்கிறேன்—திகைத்து நிற்கிறேன்' என்ற நூலில் விரிவாக எழுதியுள்ளேன். (பக். 151—152). தவிர, பள்ளி தொடங்கும் போதும் கட்டடத் திறப்பின்போதும் வந்து கலந்து

கொண்டு மகிழ்வித்தனர். பார்வை குறைந்த காலத்தும் எங்கள் குழந்தைகள், சமயத்தோடு பொருந்திய சமுதாயத் தொண்டினைப் பாடியில் (திருவலிதாயம்) தொடங்கிய ஞான்று வந்திருந்து வாழ்த்தினார்கள்.

நான் அரசியலுக்கு அப்பாற்பட்டவனாயினும், பட்டம் பதவிகளை வேண்டாமென ஒதுங்கி நின்றவனா யினும் அவர் என்னிடம் இவ்வாறு நெருங்கியநிலை சிலர் உள்ளத்தில் பட்டிருக்கலாம் போலும். ஒரு கல்லூரி விழாவில் தலைமை வகித்த ஒரு பெரியவர், தன்னைப் பற்றிக் கூறிக்கொண்டு வந்தபோது, 'நான் சென்னை யிலிருந்து டில்லிக்கு ஒருவரால் தூக்கி எறியப்பட்டேன். இதோ எதிரில் இருக்கிறாரே (நான்தான் எதிரில் உட்கார்ந்திருந்தேன்) இவருக்கு ரொம்ப வேண்டியவரால் என்றார். அவர் திரு பக்தவத்சலத்தைத்தான் குறிக் கிறார் என்பது அன்று பலருக்கும் புரிந்த ஒன்றாகும். அப்படியே அவர் மறைந்தபோது, அங்கே பலரொடு நானும் இருந்தேன். உடனிருந்த திரு. அளகேசன் அவர்கள் பக்கத்திலிருந்த முன்னாள் அமைச்சர் பூவராகன், அன்றைய அமைச்சர் சௌந்தரராஜன் போன்ற மற்றவரிடம் என்னை 'அவருக்கு மிகவும் ரொம்பவும் வேண்டியவர்' என்று அறிமுகப்படுத்தினார்.

திரு பக்தவத்சலம் அவர்களை அவர்கள் நோயுற்றிருந்தபோது நான் அடிக்கடி சென்று காண்பேன். மறைய ஒருசில நாட்கள் இருந்தபோது நான் கண்ட நிலை என்னைத் துணுக்குறச் செய்தது. உடனே திருமதி சரோஜினி அம்மையாரிடம் உடனே மருந்தகத்துக்கு அழைத்துச் செல்ல வேண்டும் என வற்புறுத்திவிட்டு வந்தேன்—மருந்தகத்தில் சேர்க்கப்

பெற்றார். அங்கேயும் கண்டேன். முடிவில் வாழ்வையே தமிழ்நாட்டு—இந்திய நாட்டுத் தொண்டுக்கெனவே தியாகம் செய்த நல்லவர் உயிர் பிரிந்தது. அவர்தம் பல்வகைத் தொண்டுகளைப் பற்றி விரிக்கின் பெருகும். அவர் அரசாங்கத்தில் ஏற்காத துறை இல்லை; ஆற்றாத ஆக்கப் பணிகளில்லை; எனினும் விரிவஞ்சி அமை கின்றேன். அவர்தம் திருப்பெயர் என்றும் வாழ்க என வாழ்த்தி அமைகின்றேன்.

பேச்சு— 1987

## 15. அறிஞரும் ஆவர்

மாண்புமிகு தமிழக முதல்வர் மறைந்த புரட்சித் தலைவர் எம்.ஜி. இராமச்சந்திரன் அவர்கள் இதுவரை யில் எந்தத் தலைவரும் பெற்றிராத பெரும் புகழைப் பெற்றுவிட்டார். மறைந்தும் என்றும் வாழும் ஏற்றம் பெற்ற அவரை நான் நாற்பது ஆண்டுகளாக அறிவேன். யாரிடமும் நெருங்கிப் பழகும் தன்மையோ அன்றி அவ்வாறு பழகுவதை மற்றவர் தெரியப் பறை சாற்றுவதோ என் வழக்கமில்லை யாதலால் எங்கள் உறவு பற்றிப் பலருக்குத் தெரியாது. அவரை நேரில் கண்டு பேசி யறியாத—நன்கு புரிந்துகொள்ளாத எத்தனையோ பேர் அவரைப் பற்றிப் பேசினார்கள். பலப்பல பண்புகளைப் பாராட்டினார்கள். அவர்கள் அனைவரும் அவர்தம் பிரிவினை எண்ணி உளமுருகிப் பேசியவை என்முன் நிழலிடுகின்றன.

1947இல் நான் எங்களூர் வாலாஜாபாத்தில் உயர் நிலைப்பள்ளியினைத் தொடங்கத் திட்டமிட்டேன்.

அவ்வூர்ப் பஞ்சாயத்துக் குழுவின் தலைவரும் என்னுடன் பயின்றவருமான திரு தேவராசன் தலைவராகவும் நான் செயலாளனாகவும் பிற உறுப்பினர்களும் கொண்ட குழு அமைக்கப்பெற்றது. எங்கள் இருவருக்கும் உற்ற நண்பரான பேரறிஞர் அண்ணா அவர்கள் அப் பள்ளிக் கென இரு நாடகங்கள் நடத்தி, அவற்றின் வருவாயினை அளித்தனர். (இது பற்றி என் இரு நூல்களிலும் கட்டுரை களிலும் குறித்திருக்கிறேன்.) திரு தேவராசன் சென்னை யில் வாணிபம் நடத்திவந்தார். நானும் பச்சையப்பரில் பணி ஏற்று அதற்குச் சற்று முன்தான் (1944) சென்னை வந்தேன். அவருடைய வீட்டில் (கோவிந்தப்ப நாயக்கன் தெரு 182 என எண்ணுகிறேன்) நாங்கள் இருவரும் அண்ணா அவர்களும் அடிக்கடி பேசிக் கொண்டிருப் போம். அதற்கு முன்பே—இளமை தொட்டே அண்ணா வும் நானும்ஒன்றிய நண்பர்களாக இருந்து வந்தோம். காஞ்சியில் எங்கள் இரு அலுவலகங்களுக்கும்—திராவிட நாடு—தமிழ்க் கலை—நெருங்கிய தொடர்பு உண்டு. அப்போது நமது மாண்புமிகு முதல்வர் 'எம்.ஜி.ஆர். அவர்கள் அண்ணாவைக் காண அடிக்கடி கோவிந்தப்ப நாயக்கன் தெரு வீட்டிற்கு வருவார்; வந்து அவர் முன் கைகட்டியே நின்றிருப்பார். 'உட்கார்' என்று அண்ணா சொன்னாலும் உட்காரமாட்டார், அண்ணாவின் முன் அவர் உட்கார்ந்து நான் பார்த்ததே இல்லை.

அண்ணா அவர்களின் கட்சி வளர்ச்சிக்குப் பொருளை வாரி வழங்கியவர் இருவர், ஒருவர் எம். ஜி. ஆர்; மற்றவர் தேவராசன். 'நாளை எனக்குக் கட்சிச் செலவுக்காக இவ்வளவு வேண்டுமே' என்பார் அண்ணா அவர்கள். மறுநாள் 'எம்.ஜி.ஆர்.' பணத்துடன்தான் வருவார். இவ்வாறு அந்த நாளிலேயே அள்ளி வழங்கிய வள்ளலாக

வும் அண்ணா அவர்களின் முதல் தொண்டராகவும் அண்ணாவின் நண்பர்களுக்கு உற்ற நண்பராகவும் விளங்கினார்.

பின் நான் திரு.வி.க. உயர்நிலைப் பள்ளியினை ஷெனாய் நகரில் தொடங்கிய காலத்து, அவரை அணுகி நின்றபோது, உடனே ஐயாயிர ரூபாய்க்கு ஒரு காசோலை தந்து வாழ்த்தி அனுப்பினார். பின் 1958ல் பள்ளிக்கு வந்து வாழ்த்தியு முள்ளார். அப்படியே நான் பச்சையப்பரில் பணியாற்றியபோது, இயல், இசை நாடகப் போட்டிகளுக்குச் சுழற் கோப்பைகளும் பரிசுகளும் நிறுவிய போது ஓரங்க நாடகப் போட்டிக்கு மிக உயரிய சுழற் கோப்பை ஒன்றையும் செலவுக்கென வைப்புநிதியினையும் அளித்ததோடு, எங்கள் வேண்டுகோளுக்கிணங்கி, முதலாண்டு விழாவில் தலைமையேற்றும் வாழ்த்தியருளினார். இப்படியே கேட்டவர்களுக்கெல்லாம் வாரி வழங்கிய வள்ளலாக அவர் வாழ்ந்தார். வாழ்கிறார்.

திரு டாக்டர் மு.வ. அவர்கள் மறைந்த நாளன்று, இவர் முன்பே வீட்டிற்கு வந்து பார்த்துவிட்டுச் சென்றாலும், பின் சுடுகாட்டிற்குத் திரும்ப வந்தார், கடைசியாக மரியாதை செலுத்துவதற்கு. எனினும் இவரைக் காணவே பெருங்கூட்டம் கூடினமையால் சிதை அருகேயும் செல்லாமல், தள்ளி இருந்த என்னைக் கட்டித் தழுவி தம் ஆறுதலைச் சொல்லி அகன்றார். தமிழ் வளர, தமிழர் நிலை உயர இவர் செய்தன பல—பலப்பல.

1977இல் இவர் ஆட்சிப் பொறுப்பை ஏற்றபிறகு இவர் செய்த தொண்டினை நாடறியும். தமிழ் அறிவும் மேலும் அறியவேண்டும் என்ற அவாவும் உடையவர் இவர். ஒருநாள் காலை இவர் வளர்ப்பு மகள் திருமதி

சானகி சிவராமன் அவர்கள் என்னைத் தொலைபேசியில் அழைத்து 'ஐயா! சேஷா உங்களோடு பேசவேண்டுமாம்,' என்றார்கள். எதற்கோ என்ற வியப்போடும் அச்சத்தோடும் சொல்லுங்கள் என்றேன்—ஒன்றை இங்கே சொல்லவேண்டும் 'சேஷா' (சேச்சா) என்பது குடும்பத்தார் அவரை அழைக்கும் செல்லப் பெயர். அவர் குடும்பத்தைச் சேர்ந்தோருக்கும் என் போன்ற ஒரு சிலருக்கு மட்டுமே அது தெரியும். முதலில் அது விளங்க வில்லை. பின் நானே விளக்கினேன். அந்த ஆதிசேடன் உலகைத் தாங்குவது போன்று இன்று இவ்வுலகை இவர் தாங்குவதால் இச் சேஷா என்று கூறுவது மிகவும் பொருந்தும் என்றேன்.

தொலைபேசியில் என்னைக் கூப்பிட்ட இவர் 'அ.மு.ப. ஐயாவா' என விளித்து ஒரு பாட்டினைச் சொல்லி (இரண்டு அடிகள்) இது இன்னார் பாடியது தானே என்றார். நான் 'ஆம்' என்றேன். அதற்குப் பொருள் சொல்லிச் சரிதானே என்றார். 'சரி! என்றேன். இதே கருத்தினையுடைய வேறு பாடல்கள் உள்ளனவா என்றார். நான் வேறு ஒருவர் பாடிய பாடலைச் சொல்லி விளக்கினேன். மிகவும் மகிழ்ந்தார். மற்றொருமுறை தொலைபேசியில் அழைத்து ஒரு பாடலைச் சொல்லி 'இதற்கு இவ்வாறு பொருள் எழுதியிருக்கிறது. ஆனால் இவ்வாறு சொன்னால் சிறப்பாக இருக்குமல்லவா' என்றார். நான் மலைத்தேன். உண்மையிலேயே அவர் கருத்து மிகச் சிறந்ததாக இருந்தது. மகிழ்ச்சியோடு அக் கருத்து மிகச் சிறந்தது என்றேன். அவர் தமிழ் வளர்த்த புரவலராக மட்டுமின்றித் தமிழ் உணர்த்தும் புலவராகவும் இருந்தார்.

எங்கள் வள்ளியம்மை பள்ளிக்கு இவர் உதவிய உதவியை என்றென்றும் மறக்க முடியாது. பள்ளிக்கு வரவில்லை யாயினும் **தம் கையாலேயே** இரண்டு முழுப் பக்கங்கள் எழுதி வாழ்த்தனுப்பிய அவர் தம் அன்பினை எப்படி அறுதியிட முடியும்! அதைக் காண்பார் யாரும் 'அவராதம் கையாலேயா இவ்வளவு நீண்ட வாழ்த்தினை எழுதினார்' எனக் கண்டு கண்டு இன்றும் வியக்கின்றனர். அன்பு திரு. பரமசிவானந்தம் எனத் தொடங்கி என் அன்னையின் பெயரால் அமைந்த தொண்டினைப் பாராட்டித் 'தங்களைப் போன்றோர் தான், **தமிழகத்தையும் தமிழர்களையும் தமிழையும்** வாழ வைக்கும் பணியினைச் செய்கிறீர்கள்' என்று கோடிட்டு வாழ்த்தியுள்ள பெருமைக்கு என்னை உரியவனாக்கினார்கள் (**24-2-82**)

எங்கள் பள்ளிக்கென ஒதுக்கிய நிலத்தினை வேறு சிலர் பறித்து உரிமையாக்கிக் கொள்ள நினைத்தனர். அவர்கள் பெரும் செல்வமும் செல்வாக்கும் பெற்றவர்கள்- உயர் பதவிகளில் இருந்தவர்கள். அவர்களுடன் நான் போட்டியிட முடியாது திகைத்தேன். எனினும் நியாயம் என்பக்கம் இருந்ததால் அரசிடம் முறையிட்டேன். மாண்புமிகு புரட்சித் தலைவர் அவர்கள், 'காலம் கருதி இடம் கருதி செய்வினையின் மூலம் கருதி' ஒன்றரை யாண்டுக்காலம் அமைதியாக இருந்து அதை எங்களுக்கே தந்து உதவினார்கள். நாங்கள் மகிழ்ந்ததைக் காட்டிலும் 'அறம்வென்றது' என்று மகிழ்ந்தார் அன்று வீட்டுவசதி வாரிய அமைச்சராக இருந்த மாண்புமிகு திரு. இராகவானந்தம் அவர்கள்.

தமிழறிஞர்களுக்கு அவர்கள் செய்த மற்றொரு உதவி மறக்கற்பாலதன்று. மருத்துவக் கல்லூரியில்

(M.B.B.S. வகுப்பிற்கு) தமிழறிஞர் தம் பிள்ளைகளுக் கெனத் தனியாக இடம் ஒதுக்கிய பெருமை நம் முதல்வர் அவர்களுக்கே உண்டு. தொடக்கத்தில் மூன்று இடமாக இருந்தது; இன்று ஐந்து இடமாக உயர்ந்துள்ளது. இந்த ஒதுக்கு முறையிலே முதல் முதல் இடம் பெற்றவர் என் பெயர்த்தியே என்பதையும் பெருமையோடு சொல்லிக் கொள்கிறேன். இன்று பிற மாநிலங்களிலும் இம்முறை பின்பற்றப்பெறுகின்றது.

தமிழ்ப் பல்கலைக்கழகம் கண்டவர் நம் முதல்வர். தமிழின் தொன்மை மேன்மை இனிமை முதலியவற்றை வளர்க்க வழிகண்ட இவர்தம் இதயத்தை என்னென்று போற்றுவது! அத் தமிழ்ப் பல்கலைக்கழக முதலாவது ஆட்சிக்குழுவில் என்னையும் உறுப்பினனாக்கிப் பெருமைப் படுத்தினார்கள். ஒருமுறை அப் பல்கலைக்கழகக் கூட்டம் சென்னையில் நடந்தது. முதல்வர் தலைமை தாங்கினார். கல்வி அமைச்சரும் இலங்கை அமைச்சர் ஒருவரும் (திரு. தொண்டைமான் என எண்ணுகிறேன்) வந்திருந் தனர். நிகழ்ச்சிகள் முறையாக நடைபெற்றன. ஆயினும் தலைவர் பேசவில்லை. அவர் கருத்துக்கு மாறாகப் பல்கலைக்கழகத் துணைவேந்தர் ஒரு செயலைச் செய்து விட்டார். அந்த நிலையில் அவர் பேச விரும்பவில்லை போலும். எனினும் கையில் பேசுவதற்குரிய குறிப்புச் சுருள் இருந்ததைக் கண்டேன். கல்வி அமைச்சர் அவர்கள் சொல்லியும் பேசவில்லை. நான் அச்சத்தோடும் பணிவோடும் மெல்ல எழுந்து, 'ஐயா! தாங்கள் பேசா விட்டால் எங்கள் மனம் அமைதியுறாது ஏன்? உங்களுக்குந்தான்! குறிப்பையும் கொண்டு வந்திருக் கிறீர்கள். வாழ்த்துங்கள்' என்றேன். அவர்களும் உடனே எழுந்து பதினைந்து நிமிடம் பேசினார்கள். மற்றவர் மாறுபட்ட நிலையினையும் பிறவற்றையும்

சுட்டியதோடு, பல்கலைக்கழக வளர்ச்சி பற்றிப் பல விளக்கம் தந்தார்கள். என் வேண்டுகோளை ஏற்று அவர்கள் பேசியது, எனக்கு ஓர் உயர்வையும் பெருமையும் தந்தது என்றால் மறுக்க முடியுமா?

நான் அடிக்கடி யாரையும் சென்று பார்ப்பதில்லை; அதிலும் முதல்வர் அவர்களைக் காண்பதரிது. எங்கேனும் கூட்டங்களில் காண்பார். நான் சில சமயம் அவருக்குப் பின் இரண்டாவது வரிசையில் இருப்பேன். புறப்படும் போது பின் திரும்பி என் கையைப் பிடித்துக் குலுக்கி வாழ்த்திவிட்டுச் செல்வார். (இருமுறை நினைவில் உள்ளது, மதுரை மாநாடு, திரு.வி.க. நூற்றாண்டு விழா) பிறகு அவர்கள் ஒருமுறை சொன்னார்கள், அனைவர் முன்னிலையிலும் கைகுலுக்கித் தழுவிப் பேசினால், காணும் பலர் 'முதல்வர் உங்களுக்குத்தெரியும், இதைச் செய்யச் சொல்லுங்கள் அதைச் செய்யச் சொல்லுங்கள்' எனப் பின்னர் உங்களைத் தொந்தரவு செய்வார்கள். அந்தச் சங்கடத்திலிருந்து விடுவிக்கவே அப்படிச் செய்வேன் என்றார்கள். நான் அந்த வகையிலும் தொல்லைப்படக்கூடாது என்று காட்டிய அவர் பரிவினை எண்ணி எண்ணி உள்ளம் உருகினேன்.

அவர் கடமைக்காகவே வாழ்ந்தார். கடமைக்காகவே உயிர்விட்டார். மருத்துவப் பல்கலைக்கழகத்துக்கு அவர் பெயரை வைக்க விரும்பவில்லை என்பதை நானறிவேன். வாழும் மனிதர் பெயரால் நிறுவனங்கள் கூடாதென வகை செய்தவர்—முறை செய்தவர்—இதைச் செய்வாரோ? சில நிலையங்கள் அந்த முறையில் பெயர் மாற்றம் பெற்றன. எனினும் இவர் விருப்பமின்றேனும் அது உருப்பெற்றது. ஆயினும் அவர் விரும்பவில்லை. எனவே அதுபற்றிய துணைவேந்தர் நியமனத்திலும் அவர் கையொப்பம்

இடவில்லை. (முன்னாள் இரவு, செயலர் கேட்டுக்கொண்ட போதும் பார்த்துக்கொள்ளலாம் என ஒதுக்கியிருக்கிறார்.) அவர் எண்ணி எண்ணி ஒய்ந்தார். தான் செய்த முறையைத் தானே மாற்றுவது முறையாகுமா எனச் சிந்தித்தார். ஒன்று அதைவிடவேண்டும்; அல்லது உயிர் விடவேண்டும். அதை எப்படி விடுவது? சட்டமன்றம் நிறைவேற்றி, நாட்டுத்தலைவர் விழா ஆற்ற நாளை வருகிறார். எனவே அதற்குள் நாம் செல்லுதலே முறை என அவர் உள்ளம் எண்ணிற்று. எண்ணியது முடிந்தது.

கொடுத்த வரத்தை இல்லை என்று சொல்லுவதைக் காட்டிலும் இறப்பதேமேல் என்று அன்று தசரதன் இறந்தான். அவர் மகன் பெயர்தாங்கிய, ஜானகியின் கணவனாகிய நம் புரட்சித்தலைவர் தாம் வகுத்த கொள்கையினை மீறுவதிலும் மறைவதே மேல் எனத் தன் வாழ்வைச் சுருக்கிக் கொண்டார். ஆம்! அன்று அவர் மறைவில் ஒரு பெருங் காவியம் எழுந்தது. இன்று "எம்.ஜி.ஆர்." மறைவில் ஒரு நிலைத்த காவியம் எழும்! அவர் புகழ் வாழும்! அவர் பணிகள் வளரும்! அவர் தொட்ட பணியெல்லாம் துலங்கும்! வாழ்க எம்.ஜி.ஆரின் வற்றாத புகழ் நலம்!

—பிப்ரவரி, 1988

# 3. ஆய்வு நெறி

## 16. ஊர்ப் பெயர்களின் உருமாற்றம்

தமிழ் மரபு தொன்மை வாய்ந்தது. தமிழர் தம் அத்தொன்மை மரபு, வாழ்வின் ஒவ்வொரு துறையிலும் விளங்கக் காணலாம். நல்ல பண்பாட்டையும் பிற நல்லியல்புகளையும் அதில் காண முடிகின்றது. தமிழகத்தில் நிலப் பிரிவுகளும்கூட இத்தமிழ் மரபின் பண்பினைக் காட்டிக்கொண்டு நிற்கின்றன. ஆயினும் காலவெள்ளத்திடையில் பல்வேறு வகைப்பட்ட பண்பாடு, நாகரிகம், கலை, வாழ்க்கைமுறை, அரசியல் முதலியன தமிழ் நாட்டில் கடந்த மூவாயிரமாண்டுகளாக வந்து கலந்து நிலைபெற்ற காரணத்தால் இன்று எத்தனையோ மாறுபாடுகளைக் காண்கின்றோம். அவற்றுள் ஊர்ப்பெயர்களின் உருமாற்றமும் ஒன்றாகும்.

தமிழர் தாம் வாழிடங்களைத் தம் பண்போடு ஒட்டியே போற்றினார்கள். மிகப் பழங்காலத்தில் அவ்வவ்விடங்களின் இயற்கை நிலையை ஒட்டியே காரணக் குறியீடுகளின் அடிப்படையிலேயே தத்தம் ஊர்ப்பெயர்களை அமைத்துக்கொண்டனர் தமிழர். பிற்காலத்தார் தம் பெருமையோ—தம் பாராட்டுக்குரியோரின் பெருமையோ விளங்க, அவரவர் பெயர்களாலே எத்தனையோ ஊர்களையும் தெருக்களையும்

உருமாற்றி வழங்குவதறிகிறோம். பின் வந்தவர் எத்துணை மாற்றத்தைச் செய்யினும் ஒரு சில அடிப்படைப் பெயர்கள் நிலைகெடாது—தம் பண்டை மரபு கெடாவகையில் இன்றும் வாழ்கின்றன. தற்பெருமை யாலும் பிற போற்றுதலாலும் வழங்கப்பெற்ற பெயர் களுள் பெரும்பாலானவற்றைக் காலத்தேவன் அழித்தும் சிதைத்தும் கெடுத்தும் பழைய பண்புகொள் பெயர் களையே வாழ வைக்கின்றான். ஒருசில பெயர்கள் மக்கள் பேச்சுவழக்கின் மருவால் மாற்றம் பெறுகின்றன. சில, சமய அடிப்படையிலும் நிலைகுலைகின்றன. சில, வெளிநாட்டவர்தம் ஆதிக்க வாடையின் காரணமாக மாற்றப்பெறுகின்றன. சில வேற்று மொழியாளர் தம் விருப்பத்தினால் வேறாக எண்ணுமாறு மொழிபெயர்க்கப் பெறுகின்றன. ஊர்ப்பெயர்கள் மட்டுமின்றி, மக்கள் பெயர்கள், அவர்தம் வாழ்வொடு கலந்த பிற பொருள் களின் பெயர்கள் அனைத்துமே மாற்றப்பெறுகின்றன. இந்த நிலை வளர்ந்துகொண்டே போகுமானால் தமிழ் மரபின் தன்மை. நிலை கெடுவதோடு அம்மரபின் அடிப்படையே இல்லை என்ற ஒரு நிலை உண்டாயினும் உண்டாகலாம். எனவே அத்தகைய அவல நிலைக்குச் செல்லுமுன் இம்மாற்றங்களை எண்ணி, மரபு கெடாத நல்ல நிலையை மறுபடி நிலைநாட்ட அனைவரும் முற்பட வேண்டும்.

ஊர்ப்பெயர்கள் பல வகைகளில் மாறுபடுகின்றன என்று கண்டோம். அவற்றுள் பெரும்பான்மையாக உள்ள ஒரு சிலவற்றை இங்கே எண்ணி அமைவோம்.

தமிழ் மக்கள் இயற்கையோடு இயைந்த வாழ்வு நடத்தியவர்கள் ஆதலினாலே, தாம் வாழ்ந்த ஊர்களுக்கு அவ்வியற்கையின் அடிப்படையிலேயே பெயரிட்டார்கள்,

பசிய வாழைகள் சூழ்ந்த சோழநாட்டு ஊர் ஒன்றற்குப் 'பைஞ்ஞீலி' என்றே பெயரிட்டார்கள். ஆயினும் அது கால வெள்ளத்தில் உருமாறி 'பங்கிலி' அல்லது 'பங்கிளி' என இன்று வழங்குகின்றது. அப்படியே அழகார் பசுமை யான சோலை சூழ்ந்த பாண்டிய நாட்டு ஊர் ஒன்றற்குப் 'பைம்பொழில்' என்றே பெயரிட்டார்கள். அதுவும் சிதைந்து 'பம்புளி' என வழங்குகின்றது. தஞ்சை நாட்டில் சிறந்த ஆடையாகிய கூறை நெய்தளிக்கும் கூறை நாடு இன்று, 'கொரநாடு' என அழைக்கப் பெறுகின்றது. தருமபுரி மாவட்டத்தில் அதிகமான் அரசோச்சிய ஊர் ஒன்று உண்டு. அது இதுவரை 'அதமன் கோட்டை' என வழங்கப்பெற்று, இன்றைய ஆட்சியாளர் கண்ணில் பட்டுத் தற்போது 'அதிகமான் கோட்டை'யாக மாறியுள்ளது. அவ்வூரை அடுத்த 'லக்கிரிப்பேட்டை' என்ற ஊர் அவ்வாறு அழைக்கப்பெற நேர்ந்த காரணத்தை ஆராய்ந்தபொழுதுதான் அதன் உண்மை விளங்கிற்று. அது ஔவை வாழ்ந்து இலக்கியம் ஆய்ந்த இடம் என்றும் அதன் இயல்பான பெயர் 'இலக்கியப் பட்டி' என்றும் அறியும்போது மகிழ்ச்சி பிறக்கிறது. அதற்குப் பக்கத்திலே ஔவை சென்ற 'ஔவை வழி' என்ற ஊரும் இருக்கிறது. 'மரூஉ' என்பது இலக்கண மாய், மரபில் ஏற்றுக்கொள்ளக் கூடிய ஒன்று எனினும் அதனால், அடிப்படை நிலை கெடலாகாது. இவ்வாறு மருவி வழங்கும் பெயர்கள் காலத்தால் உருமாறிச் சிதைந்து விடாதபடி இயல்பான காரணத்தோடு அமைந்த பெயர்களைக் கட்டிக் காத்தல் தமிழர் கடன். இப்படி இன்னும் எத்தனை எத்தனையோ பெயர்கள் நாட்டில் உருமாறியுள்ளன.

பெருமன்னர்கள் தம் ஆற்றலும் வீரமும் கருதிச் சில ஊர்களுக்குப் பெயரிட்டு உள்ளார்கள், அவையும்

சிதைந்தும் மாறியும் நிலைகெட்டும் உள்ளன. பல்லவப் பெருமன்னன் 'மாமல்லன்' தன் பெயர் கொண்டு அமைந்த மாமல்லபுரம் இன்று 'மகாபலிபுர'மாகி, மாபலிச் சக்கரவர்த்தியோடு தொடர்புபடுத்தப்பெற்று அதற்கெனக் கதைகளையும் ஆக்கிக்கொண்டது. அங்கமைந்த ஏழு கோயில்களைக் கண்ட மேலைநாட்டார் அதை ஏழு கோயில் என்றே அழைத்தனர் (Seven Pagodas). அவ்வாறே தென்னார்க்காடு மாவட்டத்தில் உள்ள 'வீரநாராயணன் ஏரி', 'வீராணத்தேரி' என மருவி வந்துள்ளது.

இவ்வாறு தம் புகழ் நாட்ட அமைத்த ஊர்ப் பெயர்கள் உருமாறிய நிலை ஒருபுறம் இருக்க, இயல்பாக அமைந்த சில தமிழ்நாட்டு ஊர்ப்பெயர்களைச் சில அரசர்கள், தங்கள் புகழ் நாட்டும் நிலைக்களன்களாகக் கொண்டு, தங்கள் வெற்றியைக் குறிக்கும் ஊர்களாக எண்ணி, அவற்றை மாற்றி அமைத்தனர். எனினும் அறிவுடைய தமிழ்ச் சமூகம் தற்பெருமையால் அமைந்த அப்பெயர்களைத் தள்ளி, அவ்வூர்களின் இயற்பெயர் களையே வாழ வைத்துள்ளது. அவற்றுள் ஒன்று—சிறந்த 'பழநி' என்னும் 'பொதிநி'யாகும். ஆவியர் குடிமகன் ஆண்டதால், அக்குடிப் பெருமையை நிலைநாட்ட, அம்மரபின் வழி வந்தவர், அப்பெருந்தெய்வப் பேருருக்குத் தம் மரபின் வழியில் 'ஆவிநன்குடி' என்றே பெயரிட்டனர்; அவ்வாறே புலவர் பெருமான் நக்கீரரை யும் பாடவைத்தனர். எனினும் தமிழர் இன்று அதைப் 'பழநி' என்று அதன் பழம் பெயராலேயே அழைக் கின்றனர். அப்படியே இடைக்காலத்தில் வாழ்ந்த சோழ, பாண்டிய மன்னர்கள் தம் விருதுப் பெயர்களால் பல ஊர்களின் இயற்பெயர்களைச் சிதைத்துப் புகழ்

கொண்டனர். ஆயினும் பின்வந்த தமிழ் மக்கள் தற்புகழ்ச்சிப் பெயர்களைத் தள்ளி, பண்டைத் தமிழ்ப் பெயர்களையே கொண்டனர். ஒரு சில சான்று காணலாம்.

'உலக மாதேவீச்சுரம்' என்று அரசியின் பெயரால் மாற்றப்பெற்ற செங்கற்பட்டு மாவட்டத்தில் உள்ள ஊர் இன்னும் 'மணிமங்கலம்' என்ற பழைய பெயராலேயே உள்ளது. 'இராசராசச் சதுர்வேதி மங்கலம்' என்று புகழ் பாராட்ட அமைந்த ஊர், அதன் இயற்பெயரால் 'உக்கல்' என்றே இன்றும் உள்ளது. 'கம்ப மாதேவீச்சுரம்' என்று சுட்டப்பட்ட ஊர், 'சிற்றீஞ்சம் பாக்கம்' என்ற பெயராலேயே இன்றும் உள்ளது. தம்மை மறந்து அடியவர் புகழ் பாடிய சேக்கிழாரைப் போற்றிய அநபாயனும் புகழுக்கு அடிமையானான் போலும். அநபாய நல்லூர் என ஒரூரை அழைத்தான் (அதைச் சேக்கிழாருக்கு மானியமாகவும் அளித்திருக்கலாம்.) எனினும் தமிழ் மக்கள் அவ்வூரை 'அரும்பாக்கம்' என்ற இயற்பெயராலேயே இன்னும் அழைக்கின்றனர். தஞ்சை நாட்டுப் 'பழையாறை' என்னும் ஊரை, மாற்றார் முடிகொண்ட பெருமையை விளக்குமுகத்தான் 'முடி கொண்ட சோழபுரம்' என ஆக்கிய 'தற்பெருமையை' அழித்து அதை இன்றும் 'பழையாறை' என்றே தமிழர் பாராட்டுகின்றனர். வீ ர நா ரா ய ண பு ர ம் என்ற தற்பெருமைப் பெயர் மாறி 'காட்டுமன்னார் கோயில்' என்ற இயற்பெயரே வாழ்கின்றது. இவ்வாறு இன்னும் எத்துணையோ பெயர்கள். தமிழர் காலப் போக்கில்— அவர்தம் பண்பாட்டை நழுவ விடாமல் காப்பாற்றும் திறம் பெற்றவர்கள் என்பதையும் தற்பெருமையையும் பிற வீர, செல்வ வளங்களால் காணும் சிறப்புக்களையும்

அவர்கள் மதியார் என்பதையும் இப்பெயர்கள் காட்டு கின்றன.

இன்னும் சில ஊர்கள் தமிழ்நாட்டில் புதிய பெயர் களைப் பெற்றுள்ளன. அவ்வாறு அவை பெறுதற்கு அமைந்த காரணங்களை ஆராய்ந்து காணல் அறிஞர் கடனாகின்றது. திருவூறல் 'தக்கோல'மாகவும், திருவிற் கோலம் 'கூவ'மாகவும், திருநணா 'பவானி'யாகவும், திருவலிதாயம் 'பாடி'யாகவும், திருக்கடிகை 'சோளிங்க புர'மாகவும், புள்ளமங்கை 'பசுபதி கோயி'லாகவும், துருத்தி 'குத்தால'மாகவும் மாறியுள்ளன. இவற்றுள் ஒரு சிலவற்றின் காரணம் வெளிப்படையே. எனினும் இவ்வாறு நாட்டில் எண்ணற்ற ஊர்கள் உண்மையின், இவை பற்றிய தனி ஆய்வு தேவை.

இடைக்காலத்தில் சமய மாறுபாட்டால் சில ஊர்ப் பெயர்கள் உருமாறின. காஞ்சியை அடுத்த பல ஊர்களில் அக்காலத்தில் சீவரத்தார் ஆகிய சமணர்கள் வாழ்ந்திருந் தனர். அவர்கள் சிறக்க வாழ்ந்த ஊர்கள் சில. அவை 'சீவரம், எனவும் 'பழைய சீவரம்' எனவும் வழங்கப் பெற்றன. பின்வந்த சைவர்கள் தம் ஊராக்கிக் கொள்ளக் கருதி, சீவரத்தைச் 'சிவபுர'மாக்கினார். எனினும் பின்வந்த மகமதிய மன்னன் தன் மனைவியின் பெயரால் அதை 'வாலாஜாபாத்' என வழங்கினன். ஆனால் அவ்வூரைச் சுற்றியுள்ள மக்கள் இன்றும் அதைச் 'சீவரம்' எனவே அழைப்பது எண்ணற்குரியது. இவ்வாறே திருச்சி மாவட்டத்தில் திருத்தவத்துறைக்கு, 'லால்குடி' என்னும் புதுப்பெயரை மகமதியர்கள், தம் 'செம்பதுமை' எனப் பொருள்கொண்ட பாரசீக மொழிப் 'பெயரை இட்டு அழைத்தனர். இவ்வாறு மாறிய ஊர்கள் இன்னும் சில. உசேன் ஊர், சாயர்புரம் போன்று பிற்காலத்தில்

கால்கொண்ட சமயங்களின் தலைவர்கள் அமைத்த ஊர்களும் உள்ளன.

இடைக்காலத்தில் தமிழகத்தில் வடமொழியாளர் ஆதிக்கம் மிக்கிருந்த நிலையினை அனைவரும் அறிவோம். அவர்கள் தமிழகத்தின் ஊர்ப்பெயர்களை மட்டுமின்றி, சமயநெறி, வாழ்க்கைமுறை, தமிழர்தம் பெயர்கள் முதலிய அனைத்தையும் மாற்றி அமைக்க வழிகோலினர். மொழியில் வடமொழியைப் புகுத்தி 'மணிப்பிரவாளம்' என்றே புது வகை மொழியை வளர்க்க நினைத்தனர். எனினும் அறிவுடைத் தமிழினம் அம்மொழியை ஒதுக்கித் தள்ளியது. ஆயினும் எப்படியோ பல ஊர்களின் பெயர்களை அவர்கள் எளிதில் தம் வடமொழிப் பெயர்களாக அமைத்துக் கொண்டனர். அவ்வாறு அமைத்துக் கொள்வதில் அவர்கள் எத்தனையோ தவறுகளைச் செய்துள்ளனர். பல புரியாத தமிழ்ச் சொற்களுக்குத் தங்கள் மனம் போன போக்கில் மொழி பெயர்ப்பினைச் செய்து கொண்டனர். மயிலாடு துறைக்கு 'மாயூரம்' எப்படி மொழி பெயர்ப்பாகும்? 'குடமூக்கு'க்கு எப்படிக் கும்பகோணமாகும்? இவ்வாறு எத்தனை எத்தனையோ. ஒரு சில பொருந்திய மொழி பெயர்ப்புக்களாக உள்ளன. மறைக்காடு 'வேதாரணிய'மாயிற்று; வெண்காடு 'சுவேதவன'மாயிற்று. மதுரை கடம்பவனமாயிற்று. பழமலை பழைய மலையாகிப் பிறகு முதுகுன்றமாகிப் பின் 'விருத்தாசல'மாயிற்று. மேலைநாட்டார் தம் ஒலி முறைப்படி சில தமிழ்ப் பெயர்களை உருமாற்றினர். தரங்கம்பாடி 'டிரங்கோபார்' ஆயிற்று, தஞ்சை 'டேஞ்சூர்' ஆயிற்று. ஐயாறு 'திருவாடி' ஆயிற்று. அவையும் தம் பழம் பெயர் கெடாமல் வாழ்வது மகிழ்ச்சிக்குரியதே. இவ்வாறு பலவற்றை அவர்கள் மாற்றியமைத்தார்களாயினும்

எங்கோ ஒரு சிலவற்றைத் தவிர்த்துப் பெரும்பாலான தம் பழம் பெயர்களாலேயே அழைக்கப் பெறுகின்றன. எனினும் மாறிய மற்றவையும் திருந்திய தமிழ்ப் பெயர்களாக ஆக்கும் பொறுப்பு தமிழ் மக்களுடைய தாகும்.

தமிழ் நாட்டில் தற்போது மற்றொரு வகையான மாற்றம் ஊர்ப்பெயர்களில் காண்கிறோம். பிற மாநிலங் களிலிருந்து வந்து இங்கு வாணிபத்தைத் தொடங்கு பவர்கள் தத்தம் பெயரால் ஊர்களை அமைத்துக் கொள்ளுகின்றனர். 'டால்மியா புரம்', 'அசோக் நகர்' போன்றவை ஒரு சில. இன்னும் இன்று நாட்டில் வாழ்ந்த—வாழ்கின்ற—தலைவர்கள் பெயர்களால் எத்தனையோ ஊர்களும் தெருக்களும் அமைக்கப் பெறுகின்றன. பல பழைய ஊர்களும் தெருக்களும் இவ்வாறு அவ்வக் காலத்தில் வாழும் தத்தம் தலைவர் களுக்காகப் பெயர்மாற்றம் பெறுகின்றன. சென்னையில் இருக்கும் 'சைனா பஜார்' எனும் சீனக் கடைத்தெருவைச் 'சுபாஷ் சந்திரபோஸ்' பெயரால் மாற்றினார்கள். இம்மாற்றம் செய்து ஆண்டுகள் பலவாயினும் மக்கள் அதைப் பழைய பெயராலேயே அழைப்பதைக் காண் கிறோம்; சில ஆங்கிலப் பெயர்கள் வழக்கில் மாற்றம் பெற்றுச் சிதைந்துள்ளமைக்கு 'ஹாமில்டன் பாலம்' ஒரு சான்று. இவ்வாறு தனிமனிதர்களின் நினைவாக ஆக்கப் பெறும் எந்தப் பெயரும் எத்தனை நாள் நிலைத்து வாழும் என்ற உண்மையைக் கணக்கிடும் திறன் காலத் தேவனுக்கே உண்டு. நான் முதலிலே கூறியபடி, தமிழ்மக்கள் இயற்கையோடியைந்த வாழ்வு நடத்துபவராகையால், அந்த இயற்கை நியதிக்கும் வாழ்வுக்கும் மாறுபட்ட வகையில் அமையும் எதுவும் காலப்போக்கில் அவர்களால் நீக்கப்பெறும் என்பது உறுதி.

மொழி வழியில் அந்த நிலையினை நாட்டு நிகழ்ச்சி இன்று நமக்குக் காட்டுகின்றது. ஊர்ப்பெயர்களை வாழ வைப்ப திலும் அந்த உணர்வு உள்ளமையை, முன்னர் சுட்டிக் காட்டினேன். இவ்வூர்ப்பெயர்களுள் பலப்பல இன்னும் திருத்தம் பெற வேண்டியுள்ளன. எதிர்காலத்தில் அவை திருத்தம் பெறலாம் என்ற நம்பிக்கை உண்டு.

ஊர்ப்பெயர்கள் மட்டுமன்றி, மக்கட்பெயர், உணவு வகைகளின் பெயர்கள், ஊர்திகளின் பெயர்கள் இன்னும் வாழ்வின் தேவைப் பொருள்களின் பெயர்கள் இவற்றி லெல்லாம் உருமாற்றங்கள் உள்ளன. தமிழ் நாட்டில் இன்று உலக நாகரிகங்களின் எல்லாச் சாயல்களும் உள்ளன. எல்லா மொழிகளின் வாடைகளும் உள்ளன. எல்லாச் சமயங்களின் தெளிவுகளும் உள்ளன. எனவே பல மாற்றங்கள் இருப்பதைக் காண்கின்றோம். இத்தகைய மாற்றங்கள் ஒரு வகையில் வரவேற்கத்தக்கனவே யாயினும், முதல் நிலையின் மரபு கெடாத வகையில், வந்தவை இணைந்து இந்த நாட்டுப் பண்பாட்டுடன் பிற இயல்புகளும் சிறந்தோங்கும் வகையில் அமையவேண்டும் —நாம் அமைத்துக்கொள்ள வேண்டும்.

"வடசொற்கிளவி வடவெழுத் தொரீஇ
எழுத்தொடு புணர்ந்த சொல்லா கும்மே"

எனத் தொல்காப்பியர் மொழி அமைப்புக்குச் சொன்ன இலக்கண மரபு, வாழ்வில் எல்லா அடிப்படை நிலைகளுக் கும் பொருந்தும். 'யாதும் ஊரே யாவரும் கேளிர்', என்ற பண்பாட்டில் தலைநின்ற தமிழன் யாரையும் எதையும் வெறுப்பவனல்லன். ஆனால் மற்றவை அவன் மேல் வீழ்ந்து அவன் அடிப்படை வாழ்வினையே சாடும்போது விழித்து நிமிர்ந்து நின்று உண்மையை வாழ வைப்பான். அப் பண்பாட்டின் ஒரு துளியே பல மாற்றங்களுக்கு இடையில்

நல்ல ஊர்கள் தத்தம் பழந்தமிழ்ப் பெயர்களோடு வாழ வழி செய்கின்றது. இவ்வாறே எல்லாத் துறையும் காக்கும் கடமையில் தமிழினம் செயலாற்ற வேண்டும்.

## 17. முடிவுகட்டி விடாதீர்கள்!

மாணிக்கவாசகர் தம்மை மறந்த அடியவர். நன்றும் தீதும் ஆண்டவன் தந்தவை என உணர்பவர். அவர் பாடிய பாடல்கள் உலக உயிர்களை உய்விக்கும் திறனுடையவை. சிற்றின்பத்தில் வாழும் நல்லுயிர்களை அவ்வுயிர் வாழ்விலே வாழ வைத்து, அவ் வாழ்வுக்கு இடையிலேயே பேரின்பமாகிய வீட்டையும் காட்டிய வித்தகர் மணிவாசகர். அவர் பாடிய திருவாசகத்தில் இவ் வுண்மையை நன்கு கண்டு உணரலாம். ஆயினும் இவ் வுண்மையை நன்கு வெளிப்படையாக உலகுக்கு உணர்த் தவே அவர் திருக்கோவையாரைப் பாடினார்.

சிற்றின்பமாகிய உலக வாழ்வையும் பேரின்பமாகிய வீட்டு வாழ்வையும் பின்னிப் பிணைத்துச் செல்லும் நூல் திருக்கோவையார். இக் கோவையுள் இரண்டையும் இணைத்து அவர் பாடிய ஒரு பாடல் சிந்தைக் கினிய பாடலாகும்.

**உணர்ந்தார்க் குணர்வறியோன்**
**தில்லைச் சிற்றம்பலத் தொருத்தன்**
**குணந்தான் வெளிப்பட்ட கொவ்வைச்**
**செவ்வாய் இக்கொடியிடைதோள்**
**புணர்ந்தாற் புணருந்தொறும்**
**பெரும்போகம் பின்னும் புதிதாய்**
**மணந்தாழ் புரிகுழலாள்**
**அல்குல் போல வளர்கின்றதே**

என்ற பாட்டில் மணிவாசகர் இருவேறு வீட்டின்பங்களை யும் இயைத்து, அவை பெறப் பெற-உற்று உணர உணர-துய்க்கத் துய்க்க எல்லையற்று வளர்ந்துகொண்டே இருப்பவை என்ற உண்மையை உணர்த்திச் சென்றார். இரு வேறு எல்லைகளின் இறுதியில் உள்ள இன்பங்களை யும் அவற்றின் வளரும் தன்மையையும் காட்டி, இதனால் இவற்றிற்கு இடைப்பட்ட பிற அனைத்தும், இந்த நிலை யில் கணக்கிடக் கூடியவையே என்ற உண்மையையும் அடியவருக்கு உய்த்துணர வைத்தார். எனவே உலகில் நம் கண்கொண்டு மண்ணும் விண்ணும் மட்டுமின்றி, காணாத அளவிலா எல்லையுடைய அண்டகோளமும் இவ் விளக்கத் துக்குள் அடங்க வேண்டியதே யாம்.

மணிவாசகரைப் போன்றே வள்ளுவர் உலக வீட்டின்ப வளர்ச்சியையும் வளத்தையும் பெருக்கத்தையும் காட்ட விழைந்தார். அவர் வெளிப்படையாகவே காணக் காண-அறிய அறிய-அளக்க அளக்க-அது எல்லையற்றுப் பெருகிக் கொண்டிருப்பது என்று உணர்த்திச் சென்றார்.

**'அறிதோ றறியாமை கண்டற்றால் காமம்**
**செறி தோறும் சேயிழை மாட்டு'** (குறள்)

என்பது அவர் வாக்கு. உற்ற இல்லற வாழ்வில் தலைவியோடு பெறும் இன்பம் தரணி வாழ் உயிர்கள் அனைத்துக்கும் பொது-அனைவரும் அறிந்தது. இந்த அறிந்த உண்மையைக்கொண்டு இருவரும் அறிய இயலாத பல உண்மைகளை உலகுக்கு உணர்த்த நினைத் தனர். எனினும் இலக்கண அமைப்பில் உவமானம் உபமேயமாகவும், உபமேயம் உவமானமாகவும் வருகின்ற மரபை ஒட்டியும் தாம் எடுத்துக்கொண்ட 'காதற் சிறப்பு' என்ற பொருள்பற்றியும் இருவரும் இவ் வகையில் தத்தம் பாடல்களைப் பாடியுள்ளனர். நாம் இங்கே இந்த

ஆய்வினை விட்டு அறிதோ றறியாமை காணும் உண்மை யினைச் சற்றே எண்ணிப் பார்ப்போம்.

கிராமத்தில் ஆரம்பப் பள்ளியில் பயிலும் சிறுவனுக்குத் தான் அங்குள்ள உயர் வகுப்பாகிய ஐந்தாம் வகுப்பில் பயிலும்போது, தானே உயர்ந்தவன் என்ற உணர்வும், பிற வகுப்புக்களில் பயில்பவரைக்காட்டிலும் தனக்கே அதிகம் தெரியும் என்ற தருக்கும் உண்டாகும். அவனே பின் அண்மையிலுள்ள நகர உயர்நிலைப் பள்ளி நடத்திய தேர்வில் முதலாம் படிவத்துக்கும் தகுதியற்று, அதே ஐந்தாம் வகுப்பில் சேர்க்கப்பட்டபோது மேலே உள்ள ஆறு வகுப்புக்களையும் எண்ணி அறியாமையை உணர்வான். அப்படியே பள்ளியிறுதி வகுப்பில் வரும் போது, தானே எல்லாவற்றையும் அறிந்தவனாகத் தருக்கும் மாணவன் கல்லூரியில் கால் வைக்கும்போது கருத்தழிவான். கல்லூரிக் கல்வியில் முதலிடம் பெற்றுத் தேறினும் வாழ்வெனும் பள்ளியில் கால் வைக்கும்போது அவனது அறியாமையை எண்ணி அவன் வாடுவான். இதுவே முறையான வாழ்வமைப்பு. இம்முறை எல்லா வற்றிற்கும் பொருந்தும். சிறப்பாக இன்றைய அறிவியல் ஆய்வாளர்களுக்கு இவ்வுண்மை முற்றும் பொருந்துவ தாகும். அறிய அறிய—உணர உணர—தாம் அதிகம் உணர்ந்தவர் என்றோ—முற்றும் உணர்ந்தவர் என்றோ தம்மை அதிகமாக மதிப்பிட்டு எண்ணுவது நல்ல ஆய்வாளர்கட்கு ஏற்ற ஒரு செயலன்று. அண்ட கோளங் களையும் பேரண்டப் பெருவெளியையும் தாம் அளந்து விட்டதாகவும் எண்ணும்வகையில் அண்மையில் சில விஞ்ஞானிகள் தம் கருத்தை வெளியிட்டதாகச் சில தாள் களில் படிக்கும்போது நான் உண்மையிலேயே வருந்தி னேன். பாவம்! இவர்கள் அறியாதவர்கள்—ஆம்!

வள்ளுவர் கூற்றின்படி, வாசகர் கூற்றின்படி, இவர்கள் அறியாதவர்கள்தாமே. மிகப்பெரிய தொலைநாடியால் மிக உயர்ந்ததாகத் தாம் எண்ணும் ஓரிடத்திலிருந்து கண்டவையே முடிந்த பொருள் என்றும் எனவே அண்ட கோளம் இத்தனை ஆண்டுகளுக்கு முன் முதலாக அமைந்தது என்றும் யாராவது கணக்கிடுவார்களாயின் அவர்கள் தவறிழைத்தவர்களே ஆவார்கள். சற்று நின்று நிலைத்து ஆய்ந்து—அறிந்து—எண்ணிப் பார்ப்பின் இவ்வுண்மை விளங்காமற் போகாது.

இன்று விண்வெளிப் பயணம் மிக எளிதாக அமைந்து விட்டது. மண்ணில் நின்று மிகப்பெரிய தொலைநாடிகளின் துணையால் காணமுடியாத பல அண்டகோள உண்மைகளை விண்வெளியில் நின்று கண்டறியலாம் எனவும், இந்த முறையில் முயன்றால் பேரண்ட கோளத்தின் எல்லையையும் வயதையும் அளவிடலா மென்றும் சிலர் தவறாகக் கணக்கிடுகிறார்கள். அவர்கள் 'அறிதோ றறியாமை கண்டற்றால்' என்ற வள்ளுவர் வாக்கை மறந்தவராதலால் அந்த விண்வெளியிலோ அதற்கப்பாலோ நின்று ஆராய்ந்தால் இப் பேரண்டத்தின் எல்லை மண்ணிலிருந்து காண்பதைக்காட்டிலும் மிகமிக விரிந்து அளவிட முடியாததாக அமையும் என்பதையும் அவர்கள் அண்மையில் உணரப்போகிறார்கள். மனிதனுடைய இன்றைய பேரண்ட ஆராய்ச்சியும் காணாது நெடுந்தொலைவு வரைவற்று விரியும் அண்ட முகட்டின் எல்லையும் உவமை வாயிலாய் கூறவேண்டுமாயின் முடியாது. எனினும் ஓரளவு எண்ணிப் பார்க்கலாம். இன்றைய ஆராய்ச்சியில் காணும் அண்டவெளியோடு சிறு விரல்களுக்கு இடையில் உள்ள சிற்றிடத்தை ஒருமைப் படுத்திக் காணில் எத்துணை வேற்றுமை உண்டோ

அத்தனை வேற்றுமை—பருமை—இன்று ஆய்வுவழி கண்ட அண்டப் பகுதிக்கும் காணாத பெரும்பகுதிக்கும் உண்டு என்று கூறலாம். இது நான் கூறும் உவமை. இதனினும் நுண்ணிய உவமையைப் பெரியவர் கூறியுள்ளனர். அதையும் பின் காணலாம். இவ்வுண்மைகளையெல்லாம் எவ்வாறோ எண்ணி—அல்லது உணர்ந்து—ஓரளவு நம் தமிழ்நாட்டுப் பழம்பெரு நல்லவர்கள் உணர்த்திவிட்டுச் சென்றுள்ளார்கள்.

வானத்தில் எத்தனையோ ஒளிப்பொருள்கள் உருண்டுகொண்டே இருக்கின்றன. அவற்றின் வளர்ச்சி பற்றியும் தோற்றம், நிலைபேறு, மாற்றம் முதலியன பற்றியும் ஆராய்ந்துகொண்டே உள்ளனர். பல நூற்றாண்டுகளுக்கு முன்பே சைவ சித்தாந்திகளால் உணர்த்தப்பெற்ற 'பொருள்கள் அழிவன அல்ல, நிலைமாறும் தன்மையன' என்ற உண்மையை இன்று விஞ்ஞானிகள் உணர்ந்து உணர்த்துகின்றனர். இவ்வாறு நிலைமாறும் பொருள்களை வானவீதியில் வலம் வந்து கணக்கிடும்போது பலப்பல புது உண்மைகள் புலனாகலாம். எனினும் இன்று அல்லது நாளைப் பொழுதில் ஏன்—என்றுமே இவற்றின் எல்லையை யாராலும் கணக்கிட முடியாது. அல்லது இவற்றின் தோற்ற மாறுபாடுகள் ஏன் இவ்வாறு நிகழ்கின்றன எனக் காட்டமுடியாது. அவற்றை ஒருவேளை சமய உணர்வு காட்ட முயன்று பயன் பெறலாம். இந்த உண்மையைத்தான் சிறந்த விஞ்ஞான மேதையாகிய 'ஐயின்ஸ்டைன்' இந்த அண்ட கோள விந்தைகளை ஆராயும்போது 'இவை எப்படி உண்டாகின்றன என்று என்னால் கூறமுடியும்; ஆனால் ஏன் உண்டாகின்றன என்ற கேள்விக்கு விடை காண முடியாது' என்று கூறியதாக அறிஞர் விளக்குவர். ஆம், இந்த வினாவுக்குச் சமயமே விடை காண வல்லது.

தமிழர்கள் வானாராய்ச்சி வல்லவர்கள். அவ் வான்வழிச் சென்றளந்தறிந்தோர் 'போல' அறுதியிட்டுக் கூறியவர்களும் நாட்டில் இருந்தனர் என்ற உண்மையை,

'செஞ்ஞாயிற்றுச் செலவும்
அஞ்ஞாயிற்றுப் பரிப்பும்
பரிப்பு சூழ்ந்த மண்டிலமும்
வளி திரிதரு திசையும்
வறிது நிலைய காயமும், என்றுஇவை
சென்றளந் தறிந்தோர் போல என்றும்
இனைத் தென்போரும் உளரே' (புறம் - 30)

என்றும்

'இருமுந்நீர்க் குட்டமும்
வியல் ஞாலத் தகலமும்
வளிவழங்கு திசையும்
வறிதுநிலைஇய காயமும் என்றாங்கு
அவைஅளந் தறியினும்'

(புறம் - 20)

என்றும்

புறநானூற்று அடிகள் நமக்கு விளக்குகின்றன. இவற்றில் 'போல்,' 'அறியினும்' என்ற சொற்களால் அவை அறிய முடியாதனவே என்பதையும் எடுத்துக் காட்டத் தவற வில்லை. அவர்தம் ஆய்வு வழியிலே அத் தமிழர் கண்ட உண்மைகள் பலப்பல. இன்றைய ஆய்வாளர்கள் விண்ணில் பலப்பல சூரியர்கள் உண்டு என்கிறார்கள். அன்று அவர்கள் பன்னிரு சூரியர்களை (துவாதச ஆதித்தர்) எண்ணிக் கணக்கிட்டார்கள். மீன்களுக்கும் (Stars) கோள்களுக்கும் (Planets) உள்ள வேறுபாட்டினை நன்கு உணர்ந்து தமிழர்கள் அவற்றிற்குப் பெயரிட்டுள் ளார்கள். இயல்பாகவே ஒளிபெற்று, தம் ஒளியினை

மின்னி மின்னி வெளிவிடுபவற்றை 'மீன்' என்றும், தமக்கென இயல்பான ஒளியில்லாதனவாய், தாம் உலவும் மண்டலத்திலுள்ள சூரியன் போன்ற பேரொளிப் பிழம்பு களிலிருந்து ஒளி 'கொள்'வனவாக உள்ள கிரகங்களைக் 'கோள்' என்றும் அழைத்த பெருமை தமிழர்களுக்கு உண்டு. ஆம். அவ்வவற்றின் பெயர்களிலிருந்தே அவ்வ வற்றின் தன்மைகளை உணரவைக்கும் முறையைத் தான் தொல்காப்பியர் 'எல்லாச் சொல்லும் பொருள் குறித்தனவே' என்று எடுத்துக் காட்டியுள்ளார். இப்படியே வானவெளியில் தொங்கும்—ஞான்று நிற்கும்—ஒன்றையும் பற்றாது தனியாக நிற்கும்—உலகை 'ஞாலம்' என்று அழைத்தார்கள்* இவ்வாறு பல உண்மைகளை விளக்கலாம். விரிவஞ்சி மேலே செல்லுகிறேன்.

இன்றைய விஞ்ஞானிகள் தம் அழிவுப் பாதையை விட்டு விலகி, ஆக்கப் பாதைக்கே தம்மை முற்றிலும் உரியவர்களாக்கிக் கொண்டு உழைப்பார்களாயின் இன்றும் நம் வாழ்நாட்களிலேயே எத்தனையோ அரிய உண்மைகளை உணர்த்துவார்கள் என்பதில் ஐயமில்லை. என்றாலும் இவர்களோ—இவர் தம் வழிவழியாக வரும் பெரும் ஆராய்ச்சியாளர்களோ எதையும் அறுதியிட்டுக் கூற முடியாது என்பதும் அசைக்கமுடியாத உண்மை. அழிவுப்பணி இன்றி ஆக்கப் பணியில் தலை நின்றால் இன்னும் இரண்டு மூன்று நூற்றாண்டுகள் கழித்து, ஆய்வு விஞ்ஞானிகள் இருபதாம் நூற்றாண்டின் இடைக்கால ஆய்வுகளையெல்லாம் எண்ணி நகையாடும் வகையில் அவர்கள் ஆய்வின் வளர்ச்சி எல்லையற்றுப்

* 'ஞாலுதல்' என்றால் பற்றுக்கோடற்றுத் தொங்குதல் என்பது பொருள்.

பெருகும் என்பதும் உண்மை. அன்று, இன்றைக்கு நாம் புதிது புதிதாகக் கண்டதாக எண்ணும் பல, மிகச் சாதாரணமாக எளிமை உடையனவாக அமையும். அன்றும் அதற்கடுத்த ஆயிரமாயிர ஆண்டுகளிலும் விஞ்ஞானிகள் தம் ஒவ்வொரு ஆய்வின் முடிவிலேயேயும், 'அறிதோறறியாமை கண்டற்றால்' என்ற வள்ளுவர் வாக்கையும் 'பின்னும் புதிதாய்' என்ற மணிவாசகர் வாக்கையும் நினைவூட்டிக் கொண்டே இருப்பார்கள். எனவே பேரண்டம் பற்றிய ஆய்வையோ அதன் ஊற்றான பஞ்சபூத நிலைக்களனையோ அவற்றின் முடிவிலாற்ற லுடைமையையோ யாரும் முற்றக் கண்டுவிட்டோம் என்று என்றும் கூறமுடியாது. எனவே எதையும் கண்டு விட்டதாக முடிவுகட்டி விடாதீர்கள் என்று இன்றைய விஞ்ஞானிகளை நான் தலை தாழ்ந்து கேட்டுக்கொள்ளு கிறேன்.

இவ்வாறு கூறுவதால் இந்த அறிவியல் ஆய்வு களெல்லாம் வேண்டாமென்று நான் கூறுவதாக யாரும் நினைக்க வேண்டாம். இந்த ஆய்வுகள் நன்கு வளர வேண்டும். ஆயிரமாயிரமாக எல்லையற்று வளர வேண்டும்—ஆனால் அவை அனைத்தும் ஆக்க நெறிக்கே பயன்பட வேண்டும். அவ்வாறு ஆய்வு பெருகிப் பெருகி வளர வளரத்தான் வள்ளுவரும் வாசகரும் சொன்ன மொழிகள் உண்மை என்பதை மேலும் மேலும் உலகம் உணர்ந்துகொள்ளும். உலக உயிர்களும் இவற்றின் ஆக்கத்தாலும் உணர்வாலும் புற அழகும் அக அழகும் பெற்று, வாழ்வில் பெறக் கடவதாகிய எல்லாச் செல்வங் களும் பெற்று இம்மை மறுமை இரண்டிடத்தும் பெறக் கடவதாகிய செம்மை வாழ்வைப் பெற்று வாழமுடியும். எனவே ஆய்வு பெருகவேண்டும். அதன் வழி ஆக்கமும்

அருளுணர்வும் அனைத்து நலங்களும் பெருகவேண்டும் என்பதே என் ஆசை; விழைவு.

இவ்வாறு அறுதியிட முடியாததை எப்படித்தான் காட்டுவது என்ற வினா எழுதல் இயல்பு. இன்றைய விஞ்ஞானிகள் எத்தனையோ வகையில் எண்ணிட்டும் சுட்டியும் காட்டியும் உணர முடியாத பலவற்றை உணர்த்த முயல்கின்றனர். அவர்தம் முயற்சி வெல்வதாக என வாழ்த்துகின்றேன். இவ்வாறு சுட்டிக் காட்டும் நிலையிலும் பேரண்டப் பெருநிலையை ஓரளவாவது உணர்ந்துகொள்ள முடிகின்றது என்றாலும் நன்கு புரிந்துகொள்ள முடியாது. அதைப் புரிய வைத்தவர்களும் நம் நாட்டில் வாழ்ந்துள்ளார்கள். அவர்கள் 'கண்டு விட்டோம்' என்று முடிவுகட்டவில்லை. காண முடியாத ஒன்றாயினும் கண்ட ஓர் உவமை கொண்டு ஓரளவு காட்ட இயலும் என்றே நினைத்தார்கள். அவ்வாறு காட்ட நினைத்தவர் பலர். அவருள் இக் கட்டுரையின் தொடக்கத்துக்கு அடியெடுத்துத் தந்த மணிவாசகரையே இங்கே துணைக்கு அழைத்து அமைகின்றேன்.

மாணிக்கவாசகர் 'திருவண்டப் பகுதி' என்ற ஓர் அகவல் பாடியுள்ளார் என்பதை நாமறிவோம். அதில் அவர் அண்டகோளம் பற்றியும் பேரண்ட நிலைபற்றியும் பலவாக விளக்கியுள்ளார். அவர் விளக்கிய எல்லையில் நின்று, இன்றைய விஞ்ஞானிகள் இன்னும் பல காலம் முயன்றால்தான் பல உண்மைகளைப் பெற முடியும். பேரண்ட கோளத்தையும் அவற்றின் செறிவையும் அவற்றில் உள்ள பல அண்ட கோளங்களையும் அவற்றையெல்லாம் ஆக்கும் ஆண்டவனையும் எண்ணுகின்ற மாணிக்கவாசகருக்கு ஒரு சிறந்த உவமை நினைவுக்கு

வருகின்றது. வீட்டு வாழ்வையே வெளி வாழ்வுக்கும் விண்வெளி அமைப்பிற்கும் பேரின்ப வீட்டிற்கும் உவமையாகவும் உற்றதாகவும் காட்டி விளக்கும் அடியவர் இப் பேரண்டத்தையும் அதிலுள்ள அண்டகோள முட்டைகளையும் வீட்டில் காணும் ஒரு சிறு நிலை காட்டியே விளக்குகின்றார். வீட்டில் நாம் காணும் எத்தனையோ நிகழ்ச்சிகள்-செயல்கள்-அமைப்புகள் ஆகியவை பற்றிச் சிந்திப்பதில்லை. நல்லவர் சிந்தியாமல் இருப்பதில்லை. அவ்வாறு சிந்தித்த மணிவாசகர் உள்ளத்தில் ஊற்றெடுத்த ஓர் உண்மையினையே ஈண்டு நான் குறிக்க நினைக்கிறேன்.

வீட்டுக் கூரையில் சிறு புழை இருப்பின் அதன் வழி சூரிய ஒளி புகுவதை அனைவரும் அறிவோம். அச் சிறிய புழை சதுரமாகவோ-நீண்ட சதுரமாகவோ வேறு வகையிலோ இருப்பினும், அதன் வழிவரும் ஒளி தரையில் விழும்போது வட்டமாகவே விழுவதைக் காண்கிறோம். இங்கே சூரிய மண்டலத்தைப் பேரண்டமாகக் கொண்டால்-அதன் எல்லைக்குட்பட்ட பல கதிர்களில் ஒரு துகள் வீட்டுப் புழைவழியாக நுழைந்து கடைசியில் வட்ட வடிவம் பெறுவது போன்று, பேரண்டத்தினின்றும் அண்டகோளப் பெரு உருண்டைகளிலிருந்தும் பல்வேறு வடிவங்களிலிருந்து உருவாகும் பொருள்கள் இறுதியில் உருண்டை வடிவம் பெறுகின்றன என்பதை உணர்தல் வேண்டும். இனி இந்த உவமையை மறந்து மற்றொன்றைக் காண்போம்.

வீட்டில் நுழையும் அந்தச் சிறு கதிர் ஒளியின் நடுவே உற்றுப் பார்ப்பவர் சிலர். அவ்வாறு பார்க்கும்போது எத்தனையோ எண்ணற்ற தூசுகள் நம் கண்ணுக்குத் தெரியும். ஆய்வு 'நாடி' வைத்துப் பார்ப்பின் இன்னும்

பல கோடி துகள்கள் புலப்படும். இவற்றையும் அப் பெருஞ் சூரியன் அளவையும், தூரத்தையும் பிற வேறுபாடுகளையும் எண்ணிப்பார்க்க வேண்டும். இந்த அண்டகோளங்கள் இக் கண்ணில் காண முடியாத சிறு துகள்களிலும் மிகச் சிறியவை. ஆனால் பேரண்டமும் அதற்கப்பால் உள்ள பேராற்றலும் அவ்வாற்றலை இயக்கும் இறைநிலையும் சூரியனைக்காட்டிலும் இன்று காணும் அண்ட முகட்டைக் காட்டிலும் பெரியன. இந்த நிலை நினைக்கக்கூட முடியாத ஒன்று. இன்றைய ஆய்வாளர்கள் இந்த உவமையை எண்ணுவார்களாயின் 'முடிவு கட்டி விட்டோம்' என்று கூற முடியுமா? ஆம்! அண்டகோளங் களும் பேரண்டமும் அத்துணை விரிவுடையன. இவை பற்றி மணிவாசகர் கூறிய அடிகள் இவைதாம்.

**'அண்டப் பகுதியின் உண்டைப் பிறக்கம்**
**அளப்பருந் தன்மை வளப்பருங் காட்சி**
**ஒன்றனுக் கொன்று நின்றெழில் பகரின்**
**நூற்றொரு கோடியின் மேற்பட விரிந்தன்**
**இல் நுழை கதிரின் துன் அணுப்புரையச்**
**சிறிய வாகப் பெரியோன்'**

இவ் வடிகளால் பேரண்ட நிலையும் அண்ட கோளங்களின் அமைப்பும் ஓரளவே நமக்குப் புலனாகின்றன. இவைபற்றி ஆய்வு தேவை. இந்த ஆய்வின் முடிவே அருளுணர்வை வளர்ப்பதாகும். எனவே எட்டாத முடிவை ஆய்ந்து என்ன பயன் என்று யாரும் வாளா இருத்தல் கூடாது. வேண்டும் இன்பம் பெற்றுவிட்டால் மகிழ்ச்சி முற்றுப் பெற்றுவிடும். அந்த இன்பம் எங்கே எங்கே என்று ஆய்வதிலேதான் பெருமகிழ்ச்சி வளர்ந்துகொண்டே இருக்கும். எனவே உயிர்கள் இன்புற, உலகம் செழிக்க, மண்ணிலிருந்து விண்ணுக்குத் தாவி வேறு வாழ்வின்

தேவைகளைப் பெற, நல்லாற்றில் வாழ்வாங்கு வாழ ஆக்கப் பணிக்கு உதவும் அண்டகோள ஆய்வுகள் தேவை-தேவையே. எனவே அறிவியல் அறிஞர்களை ஆய்ந்து கொண்டே இருங்கள் என்று கேட்டுக் கொள்ளுகிறேன். ஆனால் ஆய்ந்துவிட்டோம் எல்லை கண்டுவிட்டோம் என்று தவறாக மட்டும் 'முடிவுகட்டி விடாதீர்கள்' என்ற வேண்டுகோளோடு அமைகின்றேன்.

கலைக்கதிர்—1974

## 18. காகிதம் செய்வதிலும் அச்சுக் கலையிலும் சீன நாட்டின் பங்கு

இன்றைய நூல் அமைப்புக்கலையில்—வெள்ளைத் தாளில் கருமைகொண்டு அச்சிடும் நூல் அமைப்புக்கலையின் வளர்ச்சியில் சீன நாட்டின் பங்கு மிகப் பெரிதாகும். கிறித்து ஆண்டுத் தொடக்க நாளில் காகிதம் அல்லது தாள் சீனாவில் புதிதாகச் செய்யப்பெற்று அக் காகிதம் தற்கால எல்லைக்கு முன்பே உலக முழுதும் பரவிற்று என்பது அறிந்த ஒன்றேயாம். மர அச்சு முதலாவதாக சீனர்களால் கி.பி. ஏழு அல்லது எட்டாம் நூற்றாண்டில் செய்யப் பெற்றதோடு, தனி எழுத்தாக வடிக்கப்பெற்ற அச்சுக் கலையையும் 'குண்டன்பர்க்' என்பார்தம் காலத்தினும் நானூறு ஆண்டுகளுக்கு முன்னரே சைனா பெற்றிருந்தது. 'இந்திய மை' என அழைக்கப் பெற்றது. எவ்வாறு என அறிய முடியாத, துடைத்தழிக்க முடியாத, புகைக்கரி மையும் சீன நாகரிகத்தின் தொன்மைக் காலத்தோடு இணைத்துப் பார்க்க வேண்டிய ஒன்று. இத்தகைய பொருள்களின் இணைப்பே பரந்து பரவும் பல பக்க நூல்களின் எண்ணற்ற படிகளை உலகுக்கு வழங்க வாய்ப்பாக அமைந்தது.

அச்சுக்கலையை நாகரிகத்தின் தாய் எனப் போற்றுவர். அந் நாகரிகத்தை உலகுக்கு உணர்த்தும் வகையில் அமைந்ததால், மக்கள் கருத்துக்களையும் ஆசை அல்லது உணர்வுகளையும் உலகெங்கும் பரப்பவும் பரிமாறிக்கொள்ளவும் பயன்படுத்தப் பெறுகின்றது. இன்றைய மேலைநாட்டுப் புதுமை வாழ்விற்கு அடிப்படையான நான்கு கண்டுபிடிப்புக்களுள் (வெடி மருந்து, திரைகாட்டி என்ற இரண்டு தவிர்த்த) தாள், அச்சு ஆகிய இரண்டும் சீனர்தம் கண்டுபிடிப்புக்களே. தாளும் அதன் வழித் தோன்றிய அச்சுக்கலையும் கண்டுபிடித்ததை ஒப்ப, வேறு எதையும் பழங்கால மனிதனின் வெற்றிக்கு அல்லது சாதனைக்கு மிக முக்கியமானதாகச் சொல்ல இயலாது. தாளும் அச்சுக்கலையும் இன்றையமனித அறிவு வெளியில் நெடுந்தூரம் ஒளி காட்டும் தன்மையில் அமைகின்றன. தாள் இல்லாதிருந்து அச்சுக்கலையும் தோன்றாதிருப்பின் இன்றைய மனித வாழ்வு என்னாகும் எனக் கற்பனை செய்து காண முடியுங்கொல்? வேறுபல செய்தி விளக்க வழிகள் இருப்பினும், அவை, அடிப்படையான நிலைத்த இத் தாள், அச்சு இவற்றிற்கு மாற்றாக அமைய முடியா.

**சீனநாட்டில் தாளின்**
**தோற்ற வளர்ச்சியும் பயனும்**

தாள் அல்லது காகிதம் ஒரு நல்ல அரிதட்டி வழி நீர்கழிய நிற்கும் ஒட்டுப் பற்றாகிய நார்ப் பொருளால் ஆகியதாகும். நீங்கிய பின் ஒருவிரிந்த நார்ப்பொருளே உலர்ந்து தாளாகின்றது. காகிதம் செய்யும் கலைபற்றிய தொடக்க நாளிலிருந்து, இருபது நூற்றாண்டுகளுக்கும் பிறகும், அதன் வளர்ச்சி மாறி அதற்கென அமைந்த துணைக் கருவிகள் சில வேறுபட்ட போதிலும், அதன்

அடிப்படைத் தன்மையும் உருவாக்கும் நடைமுறையும் மாறாதுள்ளன. கிறித்துப் பிறப்பதற்குப் பல நூற்றாண்டு களுக்கு முன்பே, மக்கள், கந்தைகளைப் பொடி செய்து நீரில் கலக்கி அதன்வழியே காகிதம் செய்யும் கலையை அறிந்திருந்தனர். கந்தைகளிலிருந்து, நார்ப் பொருளை நீரொடு கலக்கி, அந் நீரினை அரித்து வடித்து. மெல்லிய தாளினை உருவாக்கும் திறனை, எதிர்பாராத வகையில் அவர்கள் கற்றிருக்கக் கூடும் எனக் கருதலாம்.

காகிதம் செய்யும் கலை சீன நாட்டில் தோன்றிய தென்பதனை மேலைநாட்டு அறிஞர்கள் சில வேளை களில் ஐயுறுகின்றனர். 'பேப்பரஸ்' என்ற பெயரிலிருந்து 'பேப்பர்' என்ற பெயர் வந்திருக்க வேண்டும் எனக் கருதுவதும் சீனத்தாளின் இயற்கை நிலையை அவர்களே அறியாதிருப்பதும் அதற்குக் காரணங்களாகலாம். தாளுக்கு முந்திப் பயன்படுத்தப் பெற்ற 'பேப்பரஸ்' என்னும் பொருள் ஒருவகை நாணற்புல் தண்டிலிருந்து துண்டாக்கி விரிக்கப்பெற்றதாக அமைய, காகிதமோ நார்க் குழம்பிலிருந்து உண்டாகியது என்பதை அவர்கள் உணரவில்லை. ('பேப்பரஸ்' என்ற சொற்கு நாணற் புல்வகை என்பதே பொருள்) துணியில் எழுதப்பெற்று, அதனினும் சிக்கனத்தைக் கையாளும் வகையிலே பின் வளர்ச்சியடைந்த ஒன்றே தாளின் தோற்ற நிலை என்பது தேற்றம். தாளும் துணியும் ஒன்றோடொன்று நெருங்கிப் பின்னியவை. அவை இரண்டும் ஒரே வகையான மூலப் பொருள்களினால் ஆக்கப்பெறுவதோடன்றி, புற அமைப் பினும் பொருள் செறிவிலும் ஒரே தன்மை உடையனவாக வும் உள்ளன. அவற்றை ஆக்கும் செயல் முறை யிலும் அதன் வழி அமையும் மதிப்பின் தரத்திலும் உள்ள வேறுபட்ட ஏற்றத்தாழ்வுகளே முக்கியமான வேற்றுமை

களாகும். கையினால் நூற்ற மெல்லிய நூலிழைகளைக் கொண்டு ஆடைகள் நெய்யப்பெறுகின்றன. காகிதமோ இடித்துக் கூழாக்கிய நார்ட்டுப் பொருள்களை வேதியல் முறைப்படி கலந்து செய்யப்பெறுவதாகும்.

மரத்தின் அடிப்பட்டை, சணல் நார், கந்தை, மீன் வலை இவற்றின் கூட்டுக் கூழால் செய்யப்பெற்ற காகிதம், டிஸ் ஐ லூரன் (Ts' ai Lun) என்பவரால் கி.பி. 105ல் அரசவையில் காட்டப் பெற்றது எனக் கருது கின்றனர். தொன்றுதொட்டு எண்ணப்பெறும் இக் கால எல்லை ஏதோ ஒருவகையில் கணக்கிடப்பெற்றுள்ளது, ஏனெனில் அவன் காலத்துக்கு முன்பே செடி, பட்டுத் தாள்களினால் செய்யப்பெற்ற காகிதம் வழக்கத்தில் இருந்தது என்பதை உணர முடிகின்றது. வட சீனாவில் அண்மையில் கண்டுபிடிக்கப்பெற்ற பழைய காகிதத் துணுக்குகள் வழியே கிறித்துப் பிறப்பதற்கு முன்பே அது கண்டுபிடிக்கப்பெற்றதெனஅறிய முடிகின்றது. சென்சி மாநிலத்தின் (Shensi Prorvince) பா. ச. கியோ (Pa-ch' Kiao) என்னுமிடத்தில் கி.மு. இரண்டாம் நூற்றாண்டிற்கு முன் கட்டப் பெற்ற ஒரு கல்லறை யிலிருந்து 1957ல் கண்டெடுக்கப் பெற்ற சில காகிதத் துண்டுகள் அவற்றின் தொன்மைக்குச் சான்றாக உள்ளன. இஃது உண்மையாகக் கொள்ளப்பெறின் 'டிஸ்.ஐ.லூரன்' என்பார் காலத்துக்குக் குறைந்தது இரு நூற்றாண்டுகளுக்கு முன்பே காகிதம் செய்யும் கலையின் தொன்மைநிலையைக் கொள்ளவேண்டி யிருக்கும். ஒருவேளை அதுவரை உபயோகப்படாத புதுப் பொருள்களிலிருந்தும், பயன்படுத்தப்பெறாத புதுமுறை களினாலும் காகிதம் செய்யப்பெற்ற பெருமையை 'டிஸ்-ஐ-லூரன்' என்புவரைச் சாரலாம். கந்தைகளும் பிற

கழி பொருள்களும் ஒருவேளை கிடைப்பதற்கு அரிய வாக நிற்க, (அவற்றின் மாற்றுப் பொருளாக) புதிதாக நார்ப் பொருள்களும் மரப்பட்டைகளும் பிற செடிகளும் மூலப் பொருளாக அமைய, காகிதம் அதிக தேவைக்கு ஏற்ற வகையில் அதிகமாகத் தயாரிக்கும் முறையினை மேற் கொண்டிருக்கலாம்.

நாரியல் உள்பட்டை உடைய சணல் வகைச்செடி, ஆளிவிதைச் செடி, ராமி என்னும் சீனப்புல், பிரம்பு ஆகிய செடிகளின் நார்ப்பட்டைகளும், முசுக்கட்டை, தான்மல்பரி போன்ற மரங்களின் அடிப்பட்டைகளும் மூங்கில், நாணல் போன்ற புல்களும், அரிசி கோதுமை ஆகியவற்றின் தவிடு உமிகளும், பருத்தி விதை போன்றவையுமே சீனத் தாள் செய்வதற்குரிய பெரும்பாலான பொருள்களாகக் கொள்ளப்பெற்றன. சிறந்த நல்ல நீண்ட நார்த் திரளைத் தரும் சணலும் பருத்தியும் உயர்ந்ததாகக் கருதப்பெற்றன. ஆயினும் அவ்வ இரண்டும் ஆடை நெசவுக்கு இன்றியமையாப் பொருள்களாகக் கருதப்பட்டமையின், தான்மல்பரி (முசுக்கட்டை) மூங்கில் போன்றவையே காகிதம் செய்யத் தக்க மூலப்பொருள்களாகச் சீனத்தில் பலநூற்றாண்டுகள் கொள்ளப்பெற்றன.

தாள் தோன்றிய நாளிலிருந்தே எழுது பொருளாகப் பயன்பட்டு வந்ததெனினும், மூங்கிலும் மரப்பலகைகளும் நூல்களுக்கெனப் பயன்படுத்திவந்த நிலையைத் தாள் மாற்றிய காலம் கி.பி. மூன்றாம் நூற்றாண்டுக்கு முன் இல்லை எனலாம். இக்காலத்திலிருந்தே நல்ல செவ்விய முறையில் அளவிட்டு, வரையறுத்து, உருவச்சில் அமைத்து எழுதுவதற்கேற்ற நல்ல முறையிலும் என்றும் நிலைக்கும் வகையில் பூச்சிகளால் தின்னப்படாதவகையிலும் காகிதம்

செய்யப்பெற்றது. மேலும் கவிதை, குறிப்பு, கடிதம் எழுதுவதற்கேற்ற வகையிலும், துண்டுகளாக்கி ஒப்பனை, வேலைப்பாடு, அழகுபடுத்தல் ஆகியவற்றிற்கும் ஏற்ற வகையிலும் செம்மையுறப் பலவகையிலும் வண்ணங்களிலும் காகிதங்கள் செய்யப்பெற்றன. மற்றும் ஆவணங்கள் எழுதுவதற்கும் நூல்கள் செய்வதற்கும் வண்ணம் தீட்டுதற்கும் கை எழுத்துத்திறன் காட்டும் எழுத்தமைப்புக்கும் பார்வைச் சீட்டுகளுக்கும் தெய்வ வழிபாட்டிற்கும், அட்டையிடுவதற்கும் வீட்டுப் பலகணிகளை மறைப்பதற்குமெனக் காகிதம் பலவகையில் பயன்படுத்தப்பெற்றது. அவற்றுடன் மேலும் வீட்டுப் பொருள்களாகிய விசிறி, குடை, விளக்கு, காற்றாடி, விளையாட்டுப் பொருள், தூய்மைக்குப் பயன்படு பொருள் ஆகியவை அமைப்பதற்குங்கூடக் காகிதம் பயன்படுத்தப் பெற்றது. இவையனைத்தும் கி.பி. ஆறாம் நூற்றாண்டிற்கு முன்பே பழக்கத்தில் வந்து விட்டன என அறிகிறோம்.

கி.பி. ஏழு அல்லது எட்டாம் நூற்றாண்டு தொடங்கி, தொப்பி, உடை, கால்உறை, படுக்கை விரிப்பு, கொசுவலை, திரை போன்றவையும் பிறவுமாகிய பல வீட்டு அழகுபடுத்தும் பொருள்களும் கருவிப் பொருள்களும் செய்யக் காகிதம் பயன்படத் தொடங்கிவிட்டதெனவும் அறிகிறோம். மேலும் தடுப்பு அல்லது தட்டி, கூரை மற்றும் போர்க்கவசம் போன்றவைக்கும் காகிதம் பயன்படுத்தப் பெற்றது. உலோகத்தாலான திண்ணிய காசுகளாகிய பணத்துக்குப் பதில் 'பறக்கும் பண'மெனக் காகிதம் ஒன்பதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் புகுத்தப்பெற்றது. பேரரசன் 'கான்' என்பான் காலத்தில் காகிதப் பணம் பெரும் புழக்கத்தில் இருந்ததையும், மாதிரி உருவம் உருவட்படம் ஆகியவை . இறந்தார்

வழிபாட்டில் பெருவாரியாக எரிக்கப்பட்டதையும் சீன நாட்டிற்குத் தொடக்கத்தில் சென்றவருள் ஒருவரான மார்க்கபோலோ என்பார் கண்டிருக்கிறார். இத்தாள் காகிதப்பணம், விளையாட்டுச் சீட்டு போன்றவையும் பிற காகிதப் பொருள்களும் அச்சுக்கலையும் மங்கோலியர்தம் வளர்ச்சி வளர வளர உலகின் பிற பாகங்களுக்கும் பரவத் தொடங்கின. சீனப் பேராகிய 'சாவ்' (cau) என்னும் பணப்பெயர் கொண்ட காகிதப்பணம் பாரசீகத்தில் முதல் முதல் கி.பி. 1294ல் ஏற்றுக்கொள்ளப்பெற்றது. ஐரோப்பிய நாட்டு (மேலைநாட்டு) வங்கிகளின் கணக்கு முறை, சேமிப்பு, சான்றிதழ் போலச் சிலவும் சீன முறைகளைப் பின்பற்றி அமைந்தன என்று சொல்லப்படுகின்றது.

சுவரொட்டித் தாள்களுக்கும் பிறப்பிடம் சீனமே யாகும். அது பதினாறாம் நூற்றாண்டில் பிரஞ்சு நாட்டுச் சமயத் தொண்டர்களால் ஐரோப்பிய நாடுகளுக்குக் கொண்டுவரப்பெற்று, பதினேழாம் நூற்றாண்டில் மேற்கொள்ளப் பெற்றது. அத் தாள் எக்காலத்திலிருந்து சீனத்தில் பயன்படுத்தப் பெற்றதென்பது காணமுடியாது. எனினும் மிகப் பழங்காலத்திலிருந்தே வண்ணம் தீட்டப் பெற்ற கைவண்ணக் கவின் புனைந்த பல தொங்குச் சுருள்கள் சீன வீடுகளை அழகு செய்தன என அறிகிறோம். இத்தகைய தொங்குச் சுருள்களே மேலை நாட்டு வீடுகளில் முதலில். தொங்கும் நிலையில் பொருத்தப் பெற்று, பின் சுவர்களில் ஒட்டப் பெற்றிருக்கக் கூடும் எனக் கருத இடமுண்டு.

**சீன அச்சின் தோற்றமும் வளர்ச்சியும்**

காகிதத்தாற் செய்யப்பெற்ற நூல்கள் எளிமையில் பெறக் கூடியனவாயும் எடுத்துச் செல்லத் தக்கதனவாகவும்

அமைந்தபோதிலும், அச்சுக் கலையில் தோற்ற நாள்வரை பல படிகள் பெறவும் பெருவாரியாக வழங்கவும் வசதி இல்லாமற் போயிற்று. சீனாவில் முதல் நூல் யாரால் எக் காலத்தில் அச்சிடப் பெற்றதென்பது உறுதியாகப் பெறக் கூடவில்லை. இக் கலையின் தொடக்கம் மெல்ல மெல்ல வளர்ச்சியடைந்திருக்க வேண்டும். சமயத் தலைவர்களிட முள்ள சமயத் துறையினை விளக்கும் தூய சமயநூல் படிகளின் தேவை கருதி, அச் சமயநெறி வளர்த்த மெய்யன்பர்கள் பெருமுயற்சியினாலும், பொதுவாகப் பலர் கூட்டு உழைப்பாலுமே இக் கலை தொடக்கத்தில் வளர்ச்சி பெற்றிருக்கவேண்டும். சீன நாட்டில் படிஎடுக்கும் அச்சுக் கலைத்திறன் தோற்றத்துக்குமுன் நீண்ட வரலாறே உள்ளது. தொடக்கத்தில் களிமண்ணிலும் பின் காகிதத் திலும் இலச்சினைகொண்டு முத்திரை இடப்பெற்றமை யும் துணியிலும் தாளிலும் பல்வேறு வேலைப்பாட்டு இயல்பினைப் பதித்துப் படி எடுத்தமையும், கல்வெட்டு களிலிருந்து மை கொண்டுபடி எடுத்தமையும் அந்த நீண்ட வரலாற்றின் கூறுகளாகும். இவையனைத்தும் பின் மர அச்சுப் பயன்படுத்தப் பெற்றமைக்கு வழி வகுத்தன என்பது பொருந்தும்.

கி.பி. ஏழு அல்லது எட்டாம் நூற்றாண்டின் தொடக்கமே சீனாவில் முதன்முதல் அச்சுத் தொடங்கிய பழங்காலமெனக் கொள்ள இடமுண்டு. கொரியாவில் **1965**ல் கண்டுபிடிக்கப்பெற்ற, கி.பி. **751**க்கு முன் அச்சிடப் பெற்ற சீன மொழியிலுள்ள புத்த சமய மறைமொழியும் அதற்குமுன்பே அறியப்பெற்று, சுமார் கி.பி. 770ல் ஜப்பான் நாட்டில் சீன மொழியில் அச்சிடப் பெற்ற மறைமொழியும் அச்சுக் கலை அக்காலத்திலேயே தெளிவு பெற்றதாகவும் பரவி நின்ற கலையாகவும்

விளங்கியதென்பதைக் காட்டுகின்றன. இவ் வாசகங்கள் அச்சிடப்பெற்ற காலத்துக்கு நெடுநாட்களுக்கு முன்பே கொரியாவும் ஜப்பானும் சீனப் பண்பாட்டின் செல்வாக்கிற்கு உட்பட்டமை உண்மையாதலால் இவ்வச்சுக் கலைத்திறன் சீன நாட்டிலிருந்தே புகுத்தப்பெற்றது என்பதில் ஐயமில்லை.

அக் காலத்துக்கு ஒத்ததான அச்சடித்த பொருள்கள் சீனத்தில் கிடைக்கவில்லை யாயினும், ஒன்பது பத்தாம் நூற்றாண்டின் அச்சுப் படிவங்களின் மாதிரிகள் கண்டு பிடிக்கப்பெற்று கி.பி. 848ல் அச்சிடப்பெற்றுத் தாள் சுருளில் உள்ள புகழ்பெற்றவை இன்றளவும் காப்பாற்றப் பெறுகின்றன. 'வைரச் சூத்திரம்' (Dimand formula) என்னும் முழுநூல், 877, 882 ஆம் ஆண்டுகளின் நாள் காட்டி (Calender), 947-983ல் வெளியான பல புத்தர் படங்களைக் கொண்ட தனித்தாள்கள், 957, 973ல் அச்சாகிய தோத்திரப் பாடல்களின் இரு பதிப்புக்கள் ஆகியவை இவற்றுள் அடங்கும். இந்தப் பழைய அச்சுக்களின் மாதிரி அனைத்தும் புத்த சமயத் தொடர்புடையவையே. பத்தாம் நூற்றாண்டின் முற்பகுதி வரை 'கன்பூஷியஸ்' சமயமுறை பற்றிய நூல்கள் அச்சிடப் படவில்லை. அக் காலத்தொடு அரசியல் ஆணையர், தனியார், சமயத்தார் வணிகர் ஆகியோர் முயற்சியினால் இவ்வச்சுக்கலை தத்தம் தேவைக்கெனக் கொள்ளப்பெற்றுச் செம்மை செய்யப்பெற்று வளர்ச்சியுற்றது. ஐரோப்பிய நாட்டில் பதினாறாம் நூற்றாண்டுக்கு முன் அச்சிட்ட நூல்களோடு ஒப்பு நோக்கும்பொழுது பதினோராம் நூற்றாண்டிலிருந்து பதின்மூன்றாம் நூற்றாண்டுவரை சீனத்து அச்சுப் படிகள், சிறந்த தாள், மை, எழுத்தமைப்பு, படங்கள், கை வண்ணத்திறன் போன்றவற்றிலும் வேறு சில சிறந்த தன்மைகளிலும் போற்றத் தக்கனவாக உள்ளன.

அச்சுக்கான மரக்கட்டைகள் அனைத்தும் மென்மையும் ஒரே தன்மையும் அமைப்பும் கருதி இலை உதிர்மரங்களாகிய பேரி, இலந்தை, போன்றவற்றிலிருந்தும் சில சமயம் 'ஆப்பில்' பழத்திலிருந்தும் கொள்ளப்பெற்றன. எழுதப்பெற்ற மெல்லிய தாளினை, தலைகீழாகத் திருப்பிக் கூழ்ப்பசையினால் (கஞ்சியினால்), அம் மரக்கட்டைகளில் ஒட்டுவர். அக் கூழ்ப் பசை காய்ந்த பிறகு தாளின்பின் பக்கம் மெல்லச் சீவி எடுக்கப்பெற மெல்லிய அந்த எழுத்து வடிவங்கள் அம் மரக் கட்டைகளில் தலைகீழாகத் தெரியுமாறு அமையும். பின் சறுக்கு சட்டக் கருவி, குந்தாலி, உளி முதலியவற்றால் அவ் வெழுத்துக்களைச் சுற்றியுள்ள தேவையற்ற மரப்பகுதிகளை வெட்டி எடுப்பர். இவ்வாறு மர அச்சுக்கட்டை தயாரானதும் ஒரு மயிர்த் தூரிகையினால் அதன் மேல் மை பூசுவர். பிறகு ஒரு தாளை அந்த மையிட்ட மர அச்சின் மேல் வைத்து, பின்புறத்தைத் தூரிகையினால் மெல்ல வருடுவர். பின் அத் தாள் அச்சிட்ட தாளாகும். இவ்வாறு இருபுறம் அச்சிட்ட தாள் 1500 அல்லது 2000 வரை திறனுடை அச்சடிப்பர் ஒருநாளில் அச்சிட்டார் எனச் சொல்லப் பெறுகின்றது.

இத்தகைய சீன அச்சுக்கலை, பதினோராம் நூற்றாண்டில் அசையும் தனி அச்சு எழுத்து புகுத்திய போதும் பதினான்காம் நூற்றாண்டில் பலவண்ண அச்சு நுழைந்தபோதும் மேலும் வளர்ச்சியுற்றது. அக்காலத்தில் ஆவணம் ஒன்றினைக் கொண்டு, பீ செங் (Be sheng) என்ற தொழிலாளி ஒருவரால் கி.பி. 1041—1048 ஒட்டி, மண்ணால் செய்யப்பெற்ற அச்செழுத்துப் பெட்டி பயன் படுத்தப் பெற்றதென அறிகிறோம். அவன் நல்ல மெல்லிய களிமண்ணால் எழுத்துக்களைச் செய்து,

நெருப்பில் சுட்டு உருவாக்கினான் என அறிகிறோம். அவ்வெழுத்துக்கள் தேவைக்கேற்ப, ஒரு தகட்டின் மேல் நீரில் கரையாத மரப்பிசின், மெழுகு ஆகியவற்றால் ஒட்டிப் பொறிக்கப்பெறும். பின் அவை சரிசமனாக அமையுமாறு தட்டையான பலகை அவ்வெழுத்துக்களின் மேல் வைத்து அழுத்தப்பெறும். அச்சுப்பணி விரைந்து செயப்பெறுவகையில், பல தகடுகள் பயன்படுத்தப் பெற்றன. பிற்காலத்தில் இத்தகைய (தனியே பிரித்து வைக்கக்கூடிய) எழுத்துக்கள் மேலும் வளர்ச்சியுற்றன. பதின்மூன்றாம் நூற்றாண்டில் மரத்தோடு பிற பொருள் களும் பதினைந்தாம் நூற்றாண்டின் இறுதி தொடங்கிப் பதினாறாம் நூற்றாண்டில் வெண்கலமும் பயன்படுத்தப் பெற்றன. மரம், வெண்கலம், வெள்ளீயம், ஈயம், மண் இவற்றாலாகிய அச்செழுத்துக்கள் பின்வந்த நூற்றாண்டு களில் அடிக்கடியும் இடைவிட்டும் பயன்படுத்தப்பெற்றன.

1340ஆம் ஆண்டிலேயே ஒரு வண்ணத்துக்கு மேற்பட்ட வண்ணங்கள் அச்சிடப்பெற்றமை அறி கிறோம். இக்கலை பதினேழாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் பலகை ஏடுகளையும் மாதிரித்தாள்களையும் பல வண்ணங்களில் அச்சிட்டபோது மேலும் வளர்ச்சி யுற்றது. இது, ஒவ்வொரு வண்ணத்திற்கு ஒவ்வொரு தனி அச்சுக்கூட்டினை அமைத்து, ஒன்றன்பின் ஒன்றாகத் தாளில் அச்சிடப்பெற்றதாகும். நூற்படங்கள், நாட்டுப் படங்கள், மாதிரித் தாள்கள், குறியிடு உரையோடு பொருந்திய நூல்கள் அச்சிடுவதற்கெனவே தனித்த வகையில் இம்முறை பயன்பட்டது.

சீன அச்சு வளர்ச்சியில் தனி அச்சு ஒவ்வொரு சமயம் பயன் படுத்தப்பெற்ற போதிலும், தொடர்ந்து கால மெல்லாம் மர அச்சினையே பெரிதும் பயன்படுத்தி

யமையை அறிகிறோம். சீனமொழியின் தனி எழுத்தமைப்பில் சொல்லாக்கப் பெறுகின்றமையின் இம்முறை எளிமையாகவும் சிக்கனமாகவும் அமைந்தது. தேவையான எண்ணிக்கை அளவில் தாள்கள் அச்சிட்டதும், அம் மரக்கட்டைகளைப் பத்திரப்படுத்தி வைத்து, மறுபடியும் வேண்டும்போது, தேவையான படிகள் அச்சிடப் பயன்படுத்திக் கொண்டனர். பெருநூல்கள் அதிக அளவிலே அச்சிட நேர்ந்த காலத்திலேயே பிரித்துப்போடும் தனி எழுத்துக்கள் பயன் படுத்தப்பெற்றன. பத்தொன்பதாம் நூற்றாண்டின் இடைக்காலம் தொடங்கி, இந்த மரக்கட்டை அச்சு, பழமையான தனியச்சு இரண்டும் கல்லச்சுக்கலை, வார்ப்பெழுத்து அச்சுக்கலை போன்ற பிற இயந்திர அச்சுக்கலைகளினால் மாற்றம்பெறலாயின.

**உலகெங்கும் தாளும் அச்சும் வளர்ந்த வகை**

காகிதம் கண்டுபிடிக்கப்பட்டபின், அது சீனாவில் பெரும் புழக்கத்தில் இருந்தது மட்டுமன்றி, உலகெங்கணும் நாற்புறமும் பரவலாயிற்று. கீழ்த்திசை நோக்கிக் கொரியாவிற்கு கி.பி. நான்காம் நூற்றாண்டிலும் ஜப்பானில் ஐந்தாம் நூற்றாண்டிலும் பரவிச் சென்றது. தெற்கு நோக்கி இந்தோ சைனாவிற்கு மூன்றாம் நூற்றாண்டிலும் இந்தியாவிற்கு ஏழாம் நூற்றாண்டிற்கு முன்பும் சென்று பரவிற்று. மேற்கு நோக்கி சீனத்துருக்கித்தானத்திற்கு மூன்றாம் நூற்றாண்டிலும் மேற்கு ஆசியாவிற்கு எட்டாம் நூற்றாண்டிலும் ஆப்பிரிக்காவிற்குப் பத்தாம் நூற்றாண்டிலும் ஐரோப்பாவிற்குப் பன்னிரண்டாம் நூற்றாண்டிலும் அமெரிக்காவிற்குப் பதினாறாம் நூற்றாண்டிலும் சென்று பரவிற்று. எட்டாம் நூற்றாண்டில் அரபியர்களால்

காகிதம் செய்யும் திறனறிந்த சிலர் கைது செய்யப் பெற்றவரை, இக்காகிதம் செய்யும் திறனைச் சீனர்கள் பிறருக்குத் தெரியாமல் மறைத்து வைத்தனர் என்று பரவலாகச் சொல்லப் பெறுகின்றது. அக் காகிதம் செய்தொழில் கைவரப்பெற்ற உடனேயே, சீனாவின் அண்டைநாடுகள் அச் சீனப் பண்பாட்டுடன் தொடர்பு கொள்ள, நுழைந்து பரந்தமையினால், அக்கூற்று உண்மையாகாது. மேலைநாடுகளுக்கு அந்தக் காகிதம் செய்யும் கலை பரவாததற்குக் காரணம் சீனர்கள் மறைத்து வைத்தார்கள் என்று கொள்வதைக் காட்டிலும், மேலை நாடுகள் நில அலைப்பு முறையிலும் பண்பாட்டு முறையிலும் சீன நாட்டொடு தொடர்பு கொள்ளா வகையில் தனித்திருந்ததே காரணம் எனக் கொள்ளவேண்டும்.

சீனப் பண்பாடு கிழக்கு நோக்கிப் பரவத் தொடங்குகையில் கொரிய மக்கள் சீன நூல்களை வாங்கிப் பெற்றதோடு, நான்காம் நூற்றாண்டிலேயே சீன எழுத்துக்களையும் கடன் வாங்கித் தமதாக்கிக் கொண்டனர். ஜப்பானிய இளவரசருக்குப் பயிற்றாசிரியராக ஒரு கொரியப் புலவர் அழைக்கப்பெற்ற காலை, அந்த ஐந்தாம் நூற்றாண்டில் கொரியாவழி, ஜப்பானிலும் சீன நூல்கள் அறிமுகப் படுத்தப்பெற்றன. எனினும் கி.பி. 610-ல் ஒரு கொரியத் துறவி சீன நாட்டில் மை, காகிதம் ஆகியவற்றைச் செய்யும் திறனைக் கற்றுக்கொண்டு, ஜப்பான் நாட்டு அரசவையில் அவற்றை விளக்கும் வரையில் தாள் செய்யும் கலை ஜப்பானில் பரவவில்லை. இந்த நாள்தொட்டு பல நூற்றுக்கணக்கான சமயப் போதகர்களும் மாணவர்களும் கொரிய ஜப்பானிய நாடுகளிலிருந்து அக்கலையைக்

கற்று நூல்களைப் பெறச் சீன நாடு சென்றனர். அவர் தம் நாடு திரும்பி வந்தபின் அச் சீன நாட்டு அச்சுக்கலை முறையினைத் தத்தம் நாட்டில் பயன்படுத்தினர் எனலாம்.

காகிதம் செய்யும் கலை தெற்கு நோக்கிச் சென்ற காலம் திட்டமாக வரையறுக்கப் பெறாவிடினும், அது மிகப் பழங்காலத்திலேயே சென்றிருக்க வேண்டும் என்பது தேற்றம். மூன்றாம் நூற்றாண்டின் பிற்பகுதியிலேயே இந்தோசீனாவில் உள்ள சிறந்த மூலப்பொருள்களால் செய்யப்பெற்ற காகிதம் சீன அரசவைக்கு அன்பளிப்பாக (திறையாக) அனுப்பப்பெற்றது. சீனர்களிடமிருந்தே இந்தோசீனா மக்கள் இக் கலைத் திறனைக் கற்றார்கள் எனக் கொள்ளலாம். இன்றும் இந்தோசீனாவில் காகிதம் செய்யப் பயன்படு முறை, ஆசியாவின் பிறநாடு முறைகளிலும் சீன நாட்டு முறையோடு பொருந்தியிருப்பதைக் காணலாம். பத்தாம் நூற்றாண்டிலிருந்தே கன்பூசியம், புத்தம், தாவ்நெறி சமய இலக்கியங்கள் மருத்துவநூல்கள் நாவல்கள் உள்ளிட்ட பல சீன இலக்கியங்களை, இந்தோசீனா அச்சிடுவகையில், ஏற்றுக் கொண்டுள்ளது. சீன மொழியிலும் சீனம், வைட்நாமிய மொழி ஆகிய இருமொழிக் கலப்பிலும் பல நூல்கள் பல நூற்றாண்டுகளாகவே மர அச்சு, தனி அச்சு, வண்ண அச்சு முதலியவற்றால் சீன நாட்டில் அச்சிடப்பெற்றன.

ஏழாம் நூற்றாண்டிற்கு முன்பே காகிதம் இந்தியாவிற்கு அறிமுகப்படுத்தப் பெற்றது. கி.பி. 671—694-ல் இந்தியாவிற்கு வந்த சீனத் துறவியாகிய 'ஐ-சிங்' (I-ching) என்பார் தம் சீன வடமொழி அகராதியில் காகிதத்துக்குரிய சீனச் சொல்லுக்குப் பொருளாக வட-

மொழியில் 'காகளி' என்ற சொல்லைக் குறித்திருக்கிறார். மிகப் பழங்காலத் தொட்டு, இந்தியாவின் தூய பழமறைகள் மனப்பாடம் செய்யப்பெற்றும் வாய் மொழியாகப் பரிமாற்றம் பெற்று வந்தமையின், அங்குப் பன்னிரண்டாம் நூற்றாண்டிற்குப்பின் முகமதியர் ஆட்சிக்காலம்வரையில், காகிதம் நன்கு பரவவில்லைபோலும். அச்சுக்கலை இந்தியாவிற்கு இன்னும் காலம் தாழ்த்தே சென்றது.

தாள் செய்யும் தொழிலறிந்த இருவர் கைதிகளாக அரபு நாட்டிற்குக் கொண்டு செல்லப்பெற்ற பிறகு, அவர்கள்வழி கி.பி. 751-ல் சாமல்கண்டில் இக் காகிதம் செய்யும் தொழில் தெரியலாயிற்று. ஏறக்குறைய நாற்பது ஆண்டுகளுக்குப்பின் பாக்தாத்துக்குச் சில சீனக் காகித உற்பத்தியாளர் கொண்டுவரப்பெற அவர்கள் வழி இரண்டாவது காகிதத் தொழிற்சாலை பாக்தாத்தில் தொடங்கப்பெற்றது. இக் காலம் முதல் தமாஸ்கஸ் திரிபோலி ஆகிய நகரங்களில் காகிதத் தொழில் தொடங்கப்பெற்றதோடு, ஏமன், எகிப்து, மொர்ராக்கோ ஆகிய நாடுகளிலும் இத் தொழில் பரவலாயிற்று. பன்னிரண்டாம் நூற்றாண்டில் இக் காகிதம் செய்யும் தொழில் ஐரோப்பிய நாடுகளில் பரவுவதற்குமுன் சுமார் ஐந்து நூற்றாண்டுகள் அராபியர் இத் தொழிலைத் தம் முழு உரிமையில் கொண்டிருந்தனர்.

'இபேரியன்' (Iberian) தீபகற்பத்தை மூர்ஸ் (Moors) வெற்றிகொண்ட பிறகு அவர்கள் இக்கலையை ஸ்பெயின் நாட்டிற்குக் கொண்டுவந்து, கி. பி.. 150 'சார்டிவா' (X'ativa) வில் காகிதத் தொழிற்சாலை அமைத்தனர். அங்கே காகிதத்தை மென்பதமாக்கிக் கூழாக்கும் ஓர் ஆலையும் செயல்பெற்றிருந்தது. மத்தியதரைக் கடல் வழியாக பாலஸ்தீனம் அல்லது எகிப்து நாட்டிலிருந்து

சிசிலித்தீவின் வழி இத்தாலியர் நாட்டிற்கு இக் காகிதம் செய்யும் தொழில் வந்திருக்கலாம். இத்தாலிநாட்டில் நகர்களான பாபிரியானா ((Babriyana) போலோக்னா (Bologra) ஜினோவா (Genova) ஆகியவற்றில் பதின்மூன்றாம் நூற்றாண்டின் பிற்பகுதியிலும் பிரான்சு ஜெர்மனி நாடுகளில் பல நகரங்களில் பதினான்காம் நூற்றாண்டிலும் பல காகித ஆலைகள் தொழில் படத் தொடங்கின. 1390-ல் நூரம்பக்கில் (Nuremberg) காகிதச் சாலை கட்டிய புகழ்வாய்ந்த தாள் தயாரிப்பாளரான உல்மான்ஸ்டாமர் (Ulma stramar) என்பவர் சீனநாட்டில் உபயோகித்த மை போன்றதாகிய கருவிகளையும் நீர் குழம்பாக்கி வடிகட்டும் முறை உள்பட பல முறைகளை யும் பயன்படுத்தினார். நெதர்லேண்ட் (Netherland) சுவிஸர்லேண்டு (Swizerland) இங்கிலாந்து நாடுகளில் பதினைந்தாம் நூற்றாண்டிலும் புது உலகமாகிய அமெரிக்காவில் பதினாறாம் நூற்றாண்டிலும் இக்காகிதம் செய்யும் தொழில் தொடங்கப்பெற்றது. அமெரிக்கா நாட்டில் மெக்சிகோவில் (Mexico) கி. பி. 1580-லும் பிற குடியேற்ற நாடுகளில் பதினேழாம் நூற்றாண்டிலும் இத்தொழில் இடம்பெற்றது.

நீண்ட பதினைந்து நூற்றாண்டின் நெடும் பயணவழி இக்காகிதம் (தொழில்) சீனநாட்டிலிருந்து உலகில் எல்லாப் பகுதிகளுக்கும் சென்றது. இன்றைய ஐரோப்பிய அச்சுக்கலை சீன அச்சுக்கலையின் செல்வாக்கால் (திறமையால்) வளர்ந்தது என்ற கொள்கை ஆய்வின் பாற்பட்டதேனும், சீன அச்சுக்கலையும் சீனத்தில் அச்சிடப்பெற்ற பல பொருள்களும் ஐரோப்பாவில் முதல் அச்சுப்பணி தொடங்குவதற்கு முன்பே நன்கு அறிமுக மாகி இருந்தன, சீனாவிலேயே காகிதம் தோன்றிய

தென்பதும் அதையே பிற நாடுகள் கடனாகப் பெற்றன என்பதும் உறுதியான மறைக்கமுடியா உண்மை. காகிதம் செய்யும் திறன் சீனாவிலிருந்து வெளிநாடுகளுக்குச் செல்வதற்கு முன்பே நிறை வளர்ச்சி பெற்றிருந்தமையின் தன் கண்டுபிடிப்பின் திறன் முற்றிய நிலையிலேயே, சீனா அதை உலகுக்கு வழங்கியது எனக் கொள்ளப் பொருந்துவதாகும்.

## 19. எத்தனை அகத்தியர்?

தமிழ்நாட்டிலும், வடநாட்டிலும் அகத்தியரைப் பற்றி எத்தனையோ கதைகள் வழங்குகின்றன. அத்தனையும் உண்மை என்று கொள்ளவோ வரலாற்றிற்குப் பொருந்தியன என்று கொள்ளவோ வழி இல்லை. அகத்தியரைத் தெய்வங்களோடு சேர்த்துக் கூறும் கதைகளும் உள்ளன. சிவபெருமான் அகத்தியருக்குத் தமிழையும் பாணினிக்கு வடமொழியையும் கற்றுக்கொடுத்தான் என்றும், அவ்விருவர் வழியேதான் இரண்டு மொழிகளும் உலகில் தோன்றின என்றும் கதைகள் கூறுகின்றன. தத்தம் மொழிகளைத் தெய்வ மொழிகள் என்றும் உயர்ந்த மொழிகள் என்றும் கூறிக்கொள்ள நினைத்தவர் எழுதியவையே அவை. மேலும் மொழியின் தோற்ற வளர்ச்சியை ஆராயும் இன்றைய மொழிநூற் புலவர்கள் இவற்றை ஏற்றுக்கொள்ள மாட்டார்கள்; ஏற்றுக் கொள்ளவும் முடியாது.

அகத்தியர் என்ற உடனே தோற்றத்தில் மிகச் சிறியதாகிய உருவம் தோன்றுதல் மரபு. புராண அகத்தியர் மிகச் சிறியவராக உருவத்தில் இருந்தாலும்

கடலைக் குடித்தல் மலையை அடக்கல் போன்ற பெரிய செயல்களைச் செய்தார் என்ற வரலாறு உள்ளமையே இதற்குக் காரணமாகும். தமிழில் அகத்தியர் தேவாரத் திரட்டு, அகத்தியர் வாகடம், அகத்தியர் மருத்துவ நூல் முதலியன அளவிற் சிறியனவே. எனவே அகத்தியர் உருவம் சிறியதென்பதைத் தமிழர் பழங்காலத்தில் அறிந்திருந்தனர்.

பதின்மருக்கு மேலான அகத்தியர்கள் பாரத நாட்டில் வாழ்ந்திருந்தார்கள் என்பதற்குப் பல கதைகள் உள்ளன. திரிபுராதிகள் காலந் தொடங்கிச் சித்த வைத்தியர் காலத்தில் வாழ்ந்த அகத்தியர் வரையில் பலர் குறிப்பிடப் பெறுகின்றனர். அவர்கள் அனைவரைப் பற்றியும் நான் இங்கு ஆராயப் போவதில்லை. கந்த புராணத்தில் வரும் அகத்தியரே எண்ணத்தக்கவர். கச்சியப்பர் அவரைத் 'தமிழ்முனி' எனக் கூறியதனாலே இத்தவறு ஏற்பட்டது. பார்வதியின் திருமணத்தின்போது அகத்தியர் உள்ளிட்ட அனைவரும் இமயமலைக்கு வர, வடக்குத் தாழ்ந்து தெற்கு உயர, அதைச் சரி செய்யச் சிவபெருமான் அகத்தியரைத் தெற்கு நோக்கி அனுப்பினார் என்பர். அவரே வழியில் சிவலிடங்களில் தங்கிப் பிறகு பொதிய மலையில் இருந்து தமிழாராய்ந்தார் என்பர். இக்கருத்து ஒன்றினையே நான் ஆராய நினைக்கின்றேன். அகத்தியர் என்பவர் இருவர் இருந்திருக்கலாம். ஒருவர் வடநாட்டிலும் ஒருவர் தமிழ்நாட்டிலும் வாழ்ந்திருக்கலாம். இருவருக்கும் உள்ள பெயர் ஒற்றுமையின் காரணத்தாலேயே அவ்வாறு பலர் மயங்க நேரிட்டது. 'அகத்தியர்' என்ற தமிழ்ச் சொல் 'உள்' எனக் காணும் அகத்தின் நல்லியல்பின் அடிப்படையில் 'உள்ளொளி' அடிப்படையில் (அகத்து - இயர்) பிறந்த பெயர். அகஸ்தியர் என்ற

வடமொழிப் பெயர் 'மலையைத் தம்பிக்கச் செய்தவர்' என்ற அடிப்படையில் பிறந்ததாகும்; எனவே பெயரைப் பகுத்துக் காணின் இரண்டும் ஒன்றாகவே தோன்றினும் அடிப்படையில் மாறுபட்டிருப்பதை அறிகிறோம். மற்றும் கந்தபுராணத்தில் விளக்கிக் காட்டப்பெறும் அகஸ்தியரைப் பற்றிக் குமாரசம்பவம் பாடிய காளிதாசர் குறிப்பிடவே இல்லை. இதனையும் எண்ண வேண்டியுள்ளது. அவரது நூலுக்கு மூலமாகிய மகாசிவபுராணத்திலும் இக் குறிப்பே இல்லை என்பர். இக் குமார சம்பவத்தில் முதல் ஐந்து பகுதிகளையே காளிதாசர் பாடினார் என்றும் பிற பகுதிகளைப் பிறகு யாரோ பாடிச் சேர்த்துவிட்டனர் என்றும் கூறுவர். எனவே இதைக் கொண்டு அகத்தியர் வாழ்வை அறுதியிட முடியுமா? அப்படியேகொண்டாலும் தென்கோடியில் பொதிய மலையில் தமிழை ஆராய்ந்து தமிழ்ச்சங்கம் அமைத்துக்கொண்டு வாழ்ந்த அகத்தியர் மற்றவர் எனக் கொள்ளலே பொருந்தும். பின்னவர் தெற்கு நோக்கி வந்து எங்கே தங்கினார்? இதற்கு விடை கண்டால் முடிவு பெறலாம்.

தெற்கு நோக்கி வந்த அகஸ்தியரை விந்தியமலை தடுத்ததென்றும் அதை அடக்கி மேலும் அவர் தெற்கே சென்றார் என்றும் கதை உள்ளது. விந்தியம் தடுத்தலும் அடக்க நினைத்தலும் என்னென்ன செயல்கள்? ஆம்! ஆரிய மரபினரான அகத்தியரை விந்தியமலைக்குத் தெற்கே உள்ள வேற்று நாகரிகமும் பண்பாடும் வராமல் தடுத்தன என்பதே அதன் பொருள். எனினும் அவர் முயற்சியுடன் ஓரளவு வெற்றி கண்டு, அடக்கி, உள்செல்ல முயன்றும் பஞ்சவடியிலேயே தங்கிவிட்டார் என அறிகிறோம். அகத்தியரைப் பற்றி ஆராய்ந்த

கா. சுப்பிரமணியப் பிள்ளை[1], வின்செண்ட் ஸ்மித் போன்றோர் அகத்தியர் இருவரே எனச் சுட்டிச் சென்றுள்ளனர்.

தமிழ்நாட்டில் வாழ்ந்த அகத்தியர் தொல்காப்பிய ருக்கு ஆசிரியர் என்ற மரபு உண்டு. எனினும் இருவரைப் பற்றியும் அவர்களுக்கு இடையில் சாபம் இட்டுக்கொண்ட கதைகளும் தமிழ்நாட்டுப் பண்புக்குப் பொருந்தாதனவே யாகும். 'திரணதூ மாக்கினி', 'லோப முத்திரை' போன்ற பெயர்களும் அக் காலத்தில் காண முடியாதவை. மற்றும் தொல்காப்பியரை 'ஐந்திரம்' நிறைந்த தொல்காப்பிய ராகக் காண்கின்றோம். அகத்தியம் நிறைந்த தொல் காப்பியராகக் காணவில்லை. 'ஐந்திறம்' என்பதும் 'இந்திர வியாகரணம்' என்பதும் இல்லாத ஒன்று. எனவே ஐந்து வகை இலக்கண அமைதிகளும் வல்லவர் என்பதே இதன் பொருள். எழுதினவன் ஏட்டைக் கெடுத்தான். என்றபடி 'ஐந்திறம்' 'ஐந்திரம்' ஆயிற்று.[2] மேலும் அகத்தியம் என்ற நூல் இருந்தமைக்குப் போதிய சான்று இல்லை. தொல்காப்பியர் அகத்தியரின் மாணவராகக் கொண்டாலும் அவர் பொதிய மலையில் ஊனினை அடக்கி உள்ளொளி பெருக்கிய அகத்தியர் என்றும், பிற்காலக் கதைகளுக்கு உள்ளான அகத்தியர் அல்லர் என்றும் கொள்வதே மிகவும் பொருந்தும்.

தமிழில் வழங்கும் மற்றொரு கதை காவிரியின் உற்பத்தியாகும். இதுபற்றியும் கந்தபுராணம் விளக்கிக் காட்டுகின்றது. வடக்கிருந்து வந்த அகத்தியரின் கமண்டல நீரை விநாயகர் காக்கை உருவாகிக் கவிழ்க்க

1. தொல். எழுத்து. நச்சி. முன்னுரை.
2. வரலாற்றுக்கு முன் —அ.மு.ப. பக் 81

அதிலிருந்து காவிரி புறப்பட்டது என்பதே அக் கதை. எனினும் தமிழ்நாட்டில் விநாயகர் வழிபாடு ஏழாம் நூற்றாண்டுக்கு முன் இல்லை என்பதும் வாதாபி யிலிருந்து சிறுத்தொண்டரே அவ் விநாயகர் வழி பாட்டைத் தமிழ்நாட்டுக்குக் கொண்டுவந்து, தன் ஊராகிய திருச்செங்காட்டங்குடியில் 'கணபதீச்சுரம்' என்றே கோவில் கட்டி வழிபட்டார் என்பதும் வரலாறு கண்ட உண்மை.[1] அதுவும் மாற்றுச் சமயத்தவராகிய சமண, பௌத்தரை நீக்கி அவர்தம் 'அரச மரத்தடி'யில் விநாயகரை நிறுத்திச் சைவ சமயத்தை வாழ்வித்தார் என்பர். எப்படியாயினும் காவிரி இரண்டாயிரம் ஆண்டு களுக்கு முன்பே இலக்கியங்களிலும், பிறநாட்டார் எழுத்துக்களிலும் பேசப் பெறுகின்றமையின் அக் கருத்து ஏற்கக் கூடியதன்று. நில நூல் வழியாகக் காணினும் அக் கருத்து ஏற்கக் கூடியதன்று. எனவே வட நாட்டு அகத்தியர் கோதாவரிக்கரையில் பஞ்சவடியில் தங்க, தென்னாட்டுத் தமிழ் அகத்தியர் பொதிய மலையில் இருந்து தமிழ் வளர்த்தார் என்று கொள்ளுவதே பொருந்தும். இந்த உண்மையைக் கம்பராமாயண சான்று கொண்டு முடிக்கிறேன்.

ஆரணிய காண்டத்தில் அகத்தியப் படலம் என்றொரு பகுதி உள்ளது. அதில் அகத்தியர் நிலைத்துத் தங்கிய இடமும் சுட்டப்படுகிறது. 'அகத்தியன் வைகிய தாபகர் 'தண்டகம்'[2] எனக் கம்பன் குறிக்கின்றார். அந்த அகத்திய முனிவர் பன்னக சாலைக்கு இராமன், சீதை, இலக்குவன் ஆகிய மூவரும் சென்று சேர்கின்றனர். இராமன்

1. பெரியபுராணம்—சிறுத்தொண்டர் புராணம்.
2. கம்பர் 17—அகத். 46

திருமாலின் அவதாரமே எனக் கொண்ட அகத்தியர் அவ்விராமனை அங்கேயே தம்முடன் தங்கி விடுமாறு வேண்டுகிறார். அவரொடு அத் தண்டகாரணியத்தில் வாழ்ந்த பிற தவசிகளும் அவ்வாறே வேண்டுகின்றனர். என்றாலும் இராமன் அவர் வேண்டுகோளுக்கு இசைய வில்லை. அவர்களுடன் சில நாள் தங்கியிருந்த பிறகு, தெற்கு நோக்கி இராமன் மற்ற இருவருடன் புறப்பட்டு விடுகிறான். அகத்தியரோ மற்ற முனிவர்களோடு அங்கேயே தண்டகாரணியத்தில் தங்கி விடுகின்றார். அதுவே அவர்தம் நிலைத்த இடம் என்பதும் இதனால் தெளிவாகின்றதன்றோ?

இத் தண்டகாரணியம் விந்திய மலைச் சாரலைத் தன்னுட் கொண்டது. விந்தியம் தடுத்தது என்ற கந்த புராணக் கூற்று மெய்யாக, வட நாட்டிலிருந்து வந்த அகத்தியர் மேலும் செல்ல விரும்பாமல் அங்கேயே தண்டக வனத்தில் தங்கிவிட்டார் எனக் கொள்வது பொருந்துவது ஆகும். இராமாயணத்தின்படி, இராமன் சற்றே பின்னும் தெற்கு வந்து விந்தியத்தின் தென் பாலுள்ள பஞ்சவடியில் தங்கியிருந்தான். அக் காலத்தில் தான் இராவணன் சீதையை எடுத்துக் கொண்டு சென்றான் போலும். தண்டகவனத்தில் ஓர் அகத்திய ரைக் காட்டிய கம்பர் தெற்கே நெடுந்தொலைவில் பொதிய மலையில் வாழ்ந்த மற்றொரு அகத்தியரையும் காட்டத் தவறவில்லை. எங்கே எப்படிக் காட்டுகிறார்?

தண்டக வனத்தில் அகத்தியரைவிட்டுப் பிரிந்த பின் இராமன் தெற்கே வந்து பஞ்சவடியில் தங்கிய பின் சில நாட்கள் கழிகின்றன. பின்பொருநாள் இராவணன் வந்து சீதையைத் தூக்கிச் செல்கிறான். அதனால் மனமுடைந்து போன இராமனும் இலக்குவனும் மேலும் தெற்கு

நோக்கி, கிட்கிந்தையை வந்து அடைகின்றனர். கிட்கிந்தையைத் தற்கால 'அம்பி'யோடு பொருத்துவர். சூர்ப்பனகை நாசியாகிய மூக்கு அறுபட்ட இடமே நாசிக் ஆயிற்று என்பர். வாலி கொல்லப்பெற்ற இடம் தற்கால 'ஆனகொந்தி' என்ற இடமே என்பர். வாலி மேடு என்று அங்கே உள்ளது. சுக்கிரீவன் அரசனான பின் சீதையைத் தேட வானர வீரர்களை அனுப்புகிறான். அப்போது சுக்கிரீவன் தெற்கே சென்ற அனுமனையும் அவனைச் சார்ந்தவர்களையும் விளித்து, அவர்கள் செல்ல வேண்டிய வழியை விளக்குகிறான். இலங்கையில் சீதை இருப்பாள் என ஊகித்தமையின் அதற்குரிய வழியே அது. அந்த வழியில் ஆந்திர, தமிழ்நாட்டுத் தலங்களையும் பேரூர்களையும் சுட்டிக் காட்டிக்கொண்டே செல்லும் போது, தென்கோடியில் உள்ள பொதிய மலையும் குறிக்கப்பெறுகின்றது. ஆம். அதைக் குறிக்கும்போது தான் மறவாது சுக்கிரீவன் வாக்கில் கம்பர் அங்கே தமிழ் முனியாகிய அகத்தியன் சங்கம் அமைத்துத் தமிழை ஓம்புகிறான் என்றும், அவன் என்றும் அங்கே தங்கி யுள்ளவனே அன்றி வேறு எங்கிருந்தும் வந்தவன் அல்லன் என்றும், தமிழ் நலம் சான்ற அம்முனிவன் வாழ்ந்து வரும் மலையில் தம் வானரத் தன்மையைக் காட்டாது வணங்கிச் செல்ல வேண்டும் என்றும் ஆணையிடு கின்றான். இது கம்பன் வாக்கு :

**"தென்தமிழ்நாட் டகன்பொதியில் திருமுனிவன்**
**தமிழ்ச்சங்கம் சேர்கிற்பீரேல்**
**என்றும் அவன் உறைவிடமாம் ஆதலினால்**
**அம்மலையில் இறைஞ்சி ஏகி"**

(நாடவிட்ட. 31)

அவ்வாறே அவ்வானரர் சென்று அனுமன் வழியே சீதை இலங்கையில் உள்ளதை அறிகின்றார் எனக் கதை செல்கின்றது.

பல்வேறு ஐயங்களுக்கு இடைப்பட்ட அகத்தியர் வரலாற்றை இவ்வாறு கம்பன் நன்கு தெளிவாகக் காட்டி விட்டான். தண்டக வனத்து விந்திய மலையைத் தம்பிக்கச்செய்த அகத்தியர் முனிவர்களுடன் கலந்து, வேதம் ஓதி ஆரிய மரபுப்படி தீ வளர்த்து வாழ்ந்து வந்தார் என்றும் அதே வேளையில் தென்கோடியில் பொதியமலைச் சாரலில் தமிழ் முனிவராகிய அகத்தியர் தமிழ்ச்சங்கம் அமைத்து, புலவர்களுடன் இருந்து தமிழை ஆராய்ந்துவந்தார் என்றும் இருவரும் இருவேறு இடங் களிலும் நிலைத்து என்றும் வாழ்ந்தவர் என்றும் திட்ட மாக விளக்கிக் காட்டிவிட்டான் கம்பன். எனவே, நாம் இருவரும் ஒருவரே என்றும் அவர் அங்கிருந்து இங்கோ, இங்கிருந்து அங்கோ சென்றார் என்றும் கொள்ளுதல் பொருந்தாது. பெயர் ஒற்றுமையால் உண்டாகும் இந்தத் தடுமாற்றத்தை விடுத்து, இருவேறு அகத்தியர் வாழ்ந்தனர் என்று கொள்ளலே சாலும். பெயர் ஒற்றுமையால் நாட்டில் சாதாரண மாறாட்டங் கள் நடைபெறுவதை வாழ்வில் இன்றும் காண்கிறோம். காய்தல், உவத்தல் இன்றி ஆராய்ச்சி செய்த மேலை நாட்டு வரலாற்று ஆராய்ச்சியாளரான 'வின்ஸென்ட் ஸ்மித்'போன்றார் இக் கருத்தையே வலியுறுத்தியுள்ள மையையும் இங்கே நினைவூட்டுகின்றேன்.

இவ்வாறே பல சிக்கற் தீராப் பிரச்சினைகளை ஆராய்ந்து காண்பின் உண்மை உறுதியாகத் தோன்றும். அத் துறையில் ஆவன காண வேண்டும் என்று அறிஞர் களைக் கேட்டுக்கொண்டு அமைகின்றேன்.

# 4. இலக்கிய நெறி

## 19. வள்ளுவர் வகுத்த அரசு

வள்ளுவர் உலக அறிஞர்; அவர் வகுத்த அறநெறியும் சமுதாய அமைப்பும் எந் நாட்டிற்கும் எக்காலத்துக்கும் பொருந்தியவை. அவர் எழுதிவைத்த 1330 குறட் பாக்களைப் பொருள் கருதி அறம், பொருள், இன்பம் எனப் பாகுபடுத்தி, 133 அதிகாரங்களாக்கி என்றென்றும் வாழ வைத்தனர் அறிஞர். சிலர் வள்ளுவரே அவ்வாறு பகுத்தனர் என்பர். ஆயின் உரையாசிரியர் தம் குறள் வைப்புமுறையில் மாறுபாடு காண்பது பொருந்தாது. எப்படியாயினும் வள்ளுவர் குறள் வையத்தை வாழ வைக்கும் பொதுமறை என்பதை யாரும் மறுக்க இயலாது.

அறத்தாறு பொருள் ஈட்டி, இன்பம் துய்ப்பதே உயிரினத்தின் அடிப்படைப் பண்பாடு. இந்த அடிப்படை யிலேயே குறள் அமைகின்றது. இவற்றுள் இடையில் உள்ள பொருட்பாலிலேயே 'அரசு' பற்றிய கருத்துக்கள் அமைகின்றன. 'அரசு' என்றதும் 'வள்ளுவர் முடியாட்சி யைப் பற்றித்தானே சொல்லுகிறார்; எனவே இன்றைய குடியரசைப் பற்றி அவர் சொல்லவில்லையே' எனச் சிலர் வாதிப்பர். ஆனாலும் உற்று நோக்கின் அவர் வகுக்கும் அரசியல் நெறி என்றைக்கும் பொருந்துவதாக அமையும். இன்றைய ஆட்சி மக்களாட்சி; ஆளுகின்றவர் அமைச்சர்

தாம். எனினும் இந்த ஆட்சி பற்றியோ ஆட்சி அடிப்படையில் அமைந்த பிற நிலைகள் பற்றியோ பேசும் போது 'மக்களியல்' என்றோ 'அமைச்சியல்' என்றோ நாம் கூறுகிறோமா? மாறாக 'அரசியல்' என்றே பேசுகிறோம். ஆக, 'அரசியல்' என்பது நாட்டாட்சிக்கு—அதன் அங்கங்களுக்கு—அவை பற்றிய அறநூலுக்கு—ஆக்க நூலுக்கு—பேச்சுக்கு—செயலுக்கு—பொதுப் பெயராக அமைகின்றது. வள்ளுவர் அரசியல் இத்தகையதே அங்கே ஆளுபவனை அரசு, அரசன், வேந்து, மன்னன் என்ற சொற்கள் குறிக்கின்றனவேனும் அவனும் பரம்பரையாக ஒரே மரபில் வருகின்றவன் எனக் குறிக்கவில்லையே. ஆளுகின்ற எவனையும் அச் சொல் குறிப்பதில் தவறில்லையே. இன்றைக்கும் இந்த நிலையில் மாநில ஆளுநர்களும் மத்திய குடியரசுத் தலைவரும் உள்ளனரே. அமைச்சர்கள் தவறு இழைப்பின் அவர்களைத் தள்ளி ஆளுநரும், குடியரசுத் தலைவரும் தாமே பொறுப்பேற்று நாட்டை நடத்திச் செல்லும் சட்டம் உள்ளதல்லவா! இது மட்டும் எப்படி மக்களாட்சி யாகலாம்? அன்று அமைச்சர் இருந்தனர்; அறவோர் இருந்தனர்; ஆணையர் இருந்தனர்; அருங்குடி மக்களும் இருந்தனர். அவர்களுக்கு மேலாக அரசன் இருந்தான். இன்று இருப்பதுபோலவே அன்றும் ஆட்சி இருந்தது எனக் கொள்ளல் தவறாகாது. 'ஜனாதிபதி', 'பிரசிடெண்டு', 'வைஸ்சிராய்' 'கவர்னர் ஜெனரல்' 'கவர்னர்' என்று பல ஆட்சியாளர்கள் மக்கள் ஆட்சியால் நாடாளுவதைக் காண்கிறோம். இவர்கள் ஆட்சி எப்போதோ தேவைப்படும் என்றாலும் இவர்கள் என்றும் நிலைபெற்றவர்களாய் உள்ளமையைக் காண்கின்றோம். இதே நிலையில் அன்றும் மன்னர்கள் வாழ்ந்தனர் எனக்

ஓ.—10

கொள்ளல் பொருந்தும். இன்றைய நிலையினும் அன்று அவர்கட்கு அதிக அதிகாரங்கள் அளித்திருக்கலாம். இன்றும் சட்டமன்றங்களும் பாராளுமன்றமும் எத்துணைச் சட்டங்கள் செய்யினும் அவை தலைவர் கையெழுத்தினைப் பெற்ற பிறகன்றோ நாட்டுச் சட்டமாக்கப் பெறுகின்றன. அவசரச் சட்டங்களும் அவருடைய கையொப்பத்தினைப் பெற்றே வெளிவர வேண்டுமல்லவா? ஆங்கில நாட்டு 'அரசி'யின் நிலையும் நேபாள நாட்டு 'மன்னர்' நிலையும் எத்தகையன? அங்கெல்லாம் முடியாட்சிதான் நடைபெறுகிறதென்று யாரேனும் கூற முடியுமா? மக்கள் எண்ணத்துக்கு முன் மன்னவன் மண்டி இட்டே ஆகவேண்டும் என்ற உண்மையை எட்டாம் எட்வர்டு முடிதுறந்த வரலாறு நமக்குக் காட்டவில்லையா! எனவே இந்த வகைகளுள் ஒன்றினாலே அன்றைய அரசன் ஆட்சியைத் தக்கார் வழி காட்டச் சூழ்வார் கண்ணாக நின்று ஆண்டிருப்பான் என்று கொள்ளுவதே பொருந்தும். இந்த நிலையிலேயே அமைச்சர்களும், சூழ்வார்களும் கண்ணாக நின்று காட்டித் தெளிவிக்கத் தெளிந்த ஆணை செலுத்தும் மன்னனாக அன்று அவன் விளங்கினான். மேலும் அரசியலில் கூறும் பலவும் அனைவருக்கும் பொருந்துவனவே. உதாரணமாக இறை மாட்சிக்கு அடுத்த கல்வியையே எடுத்துக் கொள்வோம்.

கல்வி அரசியலில் வந்துள்ளமையின் மற்றைய அமைச்சர்களுக்கும் பிற குடிமக்களுக்கும் அக் கல்வி தேவை இல்லாதது என்று பொருள்படுமா? அது எவ்வாறு பொருந்தும்! இறை மாட்சியை அடுத்துக் கல்வியை வைத்திருப்பவர்கள், அந்த இறை கற்றவனாக இருப்பதோடு, அவனை அந் நிலைக்கு உயர்த்துபவர்களும் கற்றவர்களாக இருக்கவேண்டும் என்ற அடிப்படையிலேயே வைத்திருப்பார்கள். நம் நாட்டில் சில ஆண்டு

களுக்கு முன் கற்றவர்களுக்கு, எழுதப் படிக்கத் தெரிந் தவர்களுக்கு வாக்குரிமை இருந்தமை அறிவோம். நாடாளும் நல்ல தலைவர்கள் கற்க வேண்டிய கல்வியைக் கசடறக் கற்றவர்களாக இருக்கவேண்டும் என்பதில் யாருக் கும் வேறுபட்ட கருத்து இல்லை. அத்தகைய கற்பன கற்றவரைத் தலைவராக்கும் கடமை நாட்டில் வாழ்ந்த கற்றவர்களுக்கே இருந்தது என்பது தேற்றம். எனவே தான் வள்ளுவர் கல்வி, கல்லாமை என்ற இரண்டு அதிகாரங்களில் கல்வியின் ஏற்றத்தையும் அதைக் கண் ணாகக் கொள்ளவேண்டிய இன்றியமையாமையினையும் விளக்குகிறார். அவ்வாறு கற்றவரே நாடாளும் மன்னரைத் தேர்ந்தெடுக்க வேண்டிய அவசியத்தையும் அம் மன்னரும் கற்றவர் குழுவைச் சேர்ந்தவராகவே இருக்கவேண்டிய நிலையையும் (among themselves) உணர்தல் வேண்டும். மன்னன் தன் மனம்போன போக்கிலே போக இயலாது என்பதை வள்ளுவர் பல அதிகாரங்களில் நன்கு விளக்கு கிறார். பெரியாரைத் துணைக்கோடல் என்னும் அதிகாரத்தில் "இடிப்பாரை இல்லாத ஏமரா மன்னன் கெடுப்பா ரிலானும் கெடும்" என்பார். அவன் கெடாத பரம்பரையில் வருபவனாயின், இவர்கள் துணை யில்லாவிடின்—கற்றார் பெரியார் துணையில்லா விடின்—கெடுவான் என்று கூறுவதன் பொருள் என்னை? அவ்வாறாய பெரியவர்கள் துணை இன்றேல் அவன் என்றும் தள்ளப்படுவான் என்பதுதானே? இதுதானே இன்றைய நாட்டு நிகழ்ச்சியும்.

அரசியலில் அறிவுடைமை என்ற அதிகாரம் அமைக்கப் பெற்றுள்ளது. அரசன் அறிவுடையனாயின் மற்றவர் அறிவற்றவர்களாவாரா? அதுமட்டுமின்றி அவ் வறிவின் திறத்தை அவர் காட்டும்போது அரசன்

'குடிதழீஇ'ச் செல்லும் நிலையினை உணர்த்துகின்றாரன்றோ! வள்ளுவர்தம் அறிவென்பது, வெறும் தேர்வில் பெறும் வெற்றியைக் கணக்கிடும் இன்றைய உலகுக்குப் புரியாததாக இருக்கலாம். ஆனால் அவர் திட்டமாக மக்கள் வாழ்வினைத் தன் வாழ்வாக மதிப்பிடும் மன்னன் எப்படி இருக்கவேண்டும் என இந்த அதிகாரத்தால் நன்கு காட்டுகிறாரன்றோ! 'உலகம் தழீஇய தொட்பம்' என்பதன் கருத்தென்ன? அவன் 'காட்டு ராஜ தர்பார்' நடத்தும் நிலையில் வாழ முடியாதல்லவா! 'எவ்வ துறைவது உலகம் உலகத்தோ டவ்வ துறைவதறிவு' என்பது எதைக் காட்டுகிறது? உலகம் விரும்பும் நெறியில் செல்லவேண்டிய பண்பைத் தானே! அவ்வாறு செல்வது தானே மக்கள் ஆட்சி! வழிவழியாக வரும் மன்னனாயின் இத்தகைய அறிவு ஏன்? அவனை யார் என்ன செய்ய முடியும்? அவனுடைய பங்காளிகளோ மாற்றாரோ அவனை அழிக்கலாம்; ஆனால் மக்கள் அவன் வாக்கை மீற மாட்டார்களல்லவா! அதுதானே முடியாட்சி. இதையா வள்ளுவர் வற்புறுத்துகிறார்? மேலும், வழிவழியாக வரும் முடியாட்சி மன்னர் அனைவரும் அறிவுடையவராக இருக்கவேண்டும் என நியதி ஏது? இருக்கத்தான் முடியுமா? அவ்வாறு இல்லையானால் அவனை நீக்கி வேறு ஒருவரை மன்னனாக்கிக் கொள்ள வழிதான் உண்டா? எனவே வள்ளுவர் இந்த அறிவுடைமையால் 'அறிவுடையோனாறு அரசும் செல்லும்' என்ற உண்மையை வற்புறுத்தி, மக்கள் தம்மை ஆளும் தலைவர்களைத்—தாம் தேர்ந்தெடுக்கும் தலைவர்களை அறிவு உடையவர்களாகவே இருக்கச் செய்தல் வேண்டும் என்பதையே விளக்குகிறார்.

இன்னும் அரசியலில் வருகின்ற பல அதிகாரங்களும் இத்தகையனவே. 'குற்றங் கடிதல்,' 'பெரியாரைத்

துணைக் கோடல்' முதலிய அதிகாரங்களில் இறை, மன்னன், ஆள்வார் என்ற சொற்கள் வருகின்றனவேனும் அவை அனைத்தும் வழிவழியாக வரும் ஆள்வோரைக் குறிக்காதன என்பதை உணர்தல் வேண்டும். அப்படிக் குறிப்பின், உலகத்தால் ஒன்றும் செய்ய முடியாத அப் பரம்பரை மன்னர்களை இவ்வாறெல்லாம் இருக்க வற்புறுத்தல் தேவை இல்லை என்பதை வள்ளுவர் உணராரா? மேலும் மன்னன், இறை முதலியவற்றிற்கு உள்ள பல்வேறு பொருள்களும் நமக்கு வழிகாட்டு கின்றனவே! 'மன்னன்' என்ற சொல், எப்பொருட்கும் இறைவன், அரசன், (சேனைத்) தலைவன், கணவன், ஆடவன், (32-48 வயதுக்கு உட்பட்டவன்) உத்திரட்டாதி நாள் என்று பல பொருள்களில் வருகின்றது. அப்படியே 'இறை' என்ற சொல்லும் உயரம், தலை, கடவுள், தலைமை, நடுவு நிலைமை (கண்ணோடாது இறை புரிந்து - குறள் 541), தமையன், கணவன் எனப் பல பொருளில் வருகின்றது. 'அரசு' என்பதும் அரசன், இராச்சியம், அரசாட்சி, தலைமை, வேளாளர் பட்டப் பெயர் போன்ற பல பொருள்களில் வருகின்றது. இவற்றையெல்லாம் தொகுத்துக் காணின் நாட்டை ஆள, அக் காலத்தில் மக்கள் நல்ல அறிவுடையவராய், மக்களை ஒத்து நோக்கி நடப்பவராய், மக்கள் வாழ்வே தம் வாழ்வாக உள்ளவராய்க் குடும்பத் தலைவனைப் போன்றே நாட்டையே நல்ல குடும்பமாக நினைத்து வழி காட்டுபவராய், பெரியார் தம் துணைக்கொண்டு அவர் வழி கேட்டு இடித்துரைத்தால் தம் தவறுகளைத் திருத்திக் கொள்பவராய், குறித்த வயதின் எல்லைக்கு உட்பட்டவராய், நடுவு நிலைமை தவறாது, இன்னார் இனியார் என்னாது நேரிய அறம் உரைப்பவராய், நாட்டு வாழ்வின் அடிப்படை உழவே என்பதை உணர்ந்து அவ்

வுழவின் பயனை நன்கு விளைப்பவராய் உள்ள நல்லவர் களைத் தலைவர்களாக—மன்னர்களாக—அரசர்களாகத் தேர்ந்தெடுத்தார்கள் என்பதும் அவர்களும் 'குடிதழீஇக் கோலோச்சினார்கள்' என்பதும் வள்ளுவர் வகுத்த அரசின் வழியே காணும் உண்மைகளாகும் என்பது தேற்றம். அத்தகைய மரபு பிற்காலத்திலும் இருந்த தென்பதைச் சோழர் காலத்திய குடவோலை முறை நமக்கு வற்புறுத்துகின்றது. மேலும் சங்ககாலத்திலேயே குடவோலை முறை இருந்தது என்ற உண்மையை அகநானூறு, சான்றுகாட்டி உவமை முகத்தான் விளக்கு கின்றதன்றோ!

**கயிறுபிணி குழீஇ**
**ஓலை கொண்மார்**
**பொறிகண்டு அழிக்கும்**
**ஆவண மாக்களின்**
**உயிர்திறம் பெயர**
**நல்லமர் கடந்த**
**தருக ணாளர்**
**குடர்தரீஇ தெறுவர**
**செஞ்செவி எருவை**
**அஞ்சுவர இகுக்கும்**
**கல்அதர் கவலை'** (அகம் 77)

என்ற அகம் அக் காலக் குடஓலை முறையை நமக்கு உணர்த்தவில்லையா! எனவே வள்ளுவர் காலத்தில் ஆளும் மக்களைத் தேர்ந்தெடுப்பது குடவோலை முறை என்பதும் தெரிகின்றதன்றோ?

மன்னனுக்குத் துணையாகும் பெரியாரைப் பற்றியும் அவர் வழிமொழி நடக்காத வேந்து கெடுவதையும்

வள்ளுவர் நன்கு விளக்குகிறார். அதில் மன்னனை ஒருமையிலேயே குறிக்கின்றார். எனவே அவன் அந் நாட்டுத் தலைவனாக—'இராட்டிரபதியாக' வேண்டும். நல்ல அறிஞர் அமைச்சர் தொடர்பை அவன் விடுவதால் உண்டாகும் தீமையை அவர் விளக்கிக் காட்டியுள்ளார். பிற அதிகாரங்களி லெல்லாம் நேராக மன்னனுக்கு உணர்த்தும் அறவுரைகள் போன்றல்லாது பொது நெறியிலேயே அனைத்தையும் காட்டுகின்றார். அரசியல் இருபத்தைந்து அதிகாரங்களில் நாட்டில் நல்ல அரசு நிலவ வேண்டியதற்கு அடிப்படையான எல்லாவற்றையும் தொகுத்துக் கூறுகின்றார். செங்கோன்மை என்ற அதிகாரத்திலே மன்னவனைத் தனியாகக்காட்டுகின்றார். அதில் அரசன் உயிர்களோடு பிணைந்திருக்க வேண்டிய நிலையினையும் குடிகள் அரசனிடம் காட்டும் பரிவும் பற்றுமே அவன் பகைவரிடமிருந்து நீங்கிக் காக்கும் திறனையும், நாட்டில் சட்டமும் நீதியும் நேர்மையும் நிலைத்தாலன்றி அவன் வாழமுடியா வகையினையும் விளக்கிக் காட்டி, அவனுடைய நாட்டில் இயற்கை நலம் கெடாத வளம் கொழிக்கும் எனக் காட்டுகிறார். ஆக, மக்களால் தேர்ந்தெடுக்கப் பெறும் மன்னவன் 'குடிதழீஇ அக்குடிகளைப் புரந்து சிறக்கவேண்டும் என்று 'செங்கோன்மை' என்ற அதிகாரத்தில் விளக்கும் முறையிலேயே அச் செங்கோன்மைக்கும் குடிகளுக்கும் உரிய தொடர்பை வள்ளுவர் விளக்குகிறார். இதே கருத்தைத் தான் பின் கொடுங்கோன்மையிலும், மக் ளைச் சூழாது செய்யும் அரசு கெடுவதோடு குடிகளையும் கெடுக்கும் என்றும், கோலோடு நின்றான் கொடுமை பெரிது என்றும் மக்கள் அல்லல்பட்டு ஆற்றாது அழுவராயின் மன்னன் வாழமுடியாது என்றும், அத்தகைய மக்கள் நலம் பேணா முதல்வன் நாட்டில் உடையவரும் இல்லாதவராவர்

என்றும், இயற்கையும் நிலைகெடும் என்றும் சொல்லு கிறார். எனவே மன்னன் வாழ்விற்கும் மாநிலச் செழிப் பிற்கும் மற்றுள்ள எல்லா வளங்களுக்கும் அடிப்படை குடிமக்களே என்று உணர்தல் வேண்டும்.

தலைவரானவர் தன்மைகளை மேலும் பல அதிகாரத்தில் வள்ளுவர் விளக்குகிறார். அவ் விடங் களிலெல்லாம் ஒருமையே எடுத்தாளப் பெறுகின்றது. பின்வரும் அமைச்சர் பலராயினும் மக்கள் கோடிக் கணக்கில் இருப்பினும் தலைவன் ஒருவன்தானே இருக்க முடியும். எனவே இந்த உண்மையையும் அதனால் காட்டு கின்றார். வழிவழியாக வரும் மன்னர் பரம்பரையிலேயும் தகாதவர் ஆட்சிக்கு வந்தால், அவரை விலக்கித் தக்காரை ஆட்சி பீடத்தில் அமரச் செய்த சிறப்பு அன்றைய கரிகாலன் வரலாற்றால் அறிகின்றோம். ‘ஐம்பெருங் குழு’வே ஆட்சியில் முக்கிய இடம் வகித்தது என்ற உண்மையும் வெளிப்படை. எனவே வள்ளுவர் அரசியலில் முடியாட்சியைக் கூறுகின்றார் எனக் கூறினாலும், ஆய்ந்து நோக்கின் அவர் முடியாட்சி குடியாட்சியுள் அடங்கும் என்பதையும் அக் குடியாட்சியே சிறந்தது என்பதையும் விளக்குகிறார் எனத்தெளிதல் வேண்டும். விரிப்பிற் பெருகும். வள்ளுவர் காட்டும் குடியாட்சி வளர்வதாக!

—1969

# 21. முரசுப் பாட்டு

நல்ல கவிஞன் நாட்டில் எப்போதோ ஒரு முறை பிறக்கின்றான். அவ்வாறு பிறக்கின்றவன் வையம் உள்ளளவும் வாழவும் செய்கிறான். இந்த மரபு எந்த மொழிக்கும் இயைந்த ஒன்றாகும். அந்த வகையில் தமிழில் பாட்டிசைத்த பாரதி தமிழ்நாட்டில் சென்ற நூற்றாண்டின் பிற்பகுதியில் தோன்றி இந்த நூற்றாண்டின் தொடக்கத்தில் கவி பாடி, என்றும் வாழும் கவிஞனாகி நிலைத்துவிட்டான். அவன் காலத்தில் நாடு அடிமைப்பட்டுக் கிடக்க, அதை உரிமை நாடாக்கப் பாரதி பாடிய கவிதைகளே பல; அதனால் விடுதலைக் கவிஞனானான். ஆனால் அவனுடைய பிற கவிதைகளே அவனை என்றும் வாழும் கவிஞனாக்கி விட்டன. அவன் தொடாத துறையில்லை; பாடாத பொருளில்லை. அவன் ஒரு தீர்க்கதரிசி. அவன் பாடிய பல கருத்துக்கள் இன்று உரிமை நாட்டின் வாழ்விலும் செயலிலும் இடம் பெறுகின்றன. அவன் வாழ்க!

பாரதியின் கவிதைகளைத் தொகுத்தவர்கள் அதைப் பலவகைப்படுத்தினார்கள். அதில் ஒரு பகுதி நீதிப்பகுதி. மக்களின் அவல வாழ்வையும் பிற கேடுகளையும் கண்டு நைந்த உள்ளம் பலப்பல பாடல்களை இசைத்தது. அத்தகைய அவல நிலைக்கான அடிப்படை காரணங்களை ஆராய்ந்த உள்ளம், அம் மனிதன் சிறக்க வாழ வேண்டுமாயின் சில கொடுமைகளை அகற்றி, சில நல்ல நெறிகளைப் பின்பற்ற வேண்டும் என உணர்ந்தது. அந்த நெறிகளை விளக்குவதே நீதி—நீதிப்பகுதி. தொகுத்தவர் இந்த நீதிப்பகுதியில் ஆத்திசூடி, பாப்பா பாட்டு, முரசு

என்ற மூன்றினை அடக்கி உள்ளனர். மூன்றும் எளிமை யாக இளைஞரும் பிறரும் படித்து உணர்ந்து கொள்ளும் வகையில் அமைந்துள்ளமை அறிவோம். சிறு சிறு சொற் களால் அமைந்த ஆத்திசூடி, கொஞ்சும் மழலை மொழி யில் பாப்பா பாட்டு. பின் சமுதாய எழுச்சி பெறத் தட்டி எழுப்பும் வகையில் முரசுப்பாட்டு. ஆம்! பண்டைத் தமிழ் மன்னர்கள் முரசறைந்து நாட்டில் அறத்தையும் பிற நிகழ்ச்சிகளையும் அறிவுறுத்திய மரபுப்படி நம் கவி அரசனும் முரசு கொண்டு, சமுதாய வாழ்வறத்தினை நமக்கு உணர்த்துகிறான். முரசின் தொடக்க நான்கு அடிகள் தனிப்பட்டன. பின்பே ஊருக்கு நல்லது சொல்லும் உபதேசம் தொடங்குகின்றது. முதல் நான்கு அடிகளிலும் இவ்வுலகை ஈன்ற அம்மை அப்பனை நினைவு கூறுமுகத்தான் அவர்தம் நிலைத்த வாழ்வினை நினைத்து அவர்கள் வாழ்த்த, மனித சமுதாயம் எல்லா வேறுபாடு களையும் களைந்து ஒன்றிய உணர்வில் வாழ 'வெற்றி எட்டுத் திக்கும் எட்ட' முரசு முழக்க வேண்டுமெனக் காட்டித் தம் நீதியினைத் தொடங்குகின்றான் பாரதி.

இந்த முரசுப்பாட்டில் பாரதி, மனித சமுதாயம்- சிறப்பாக இந்தியச்சமுதாயம் வாழ அடிப்படையான சாதி சமய வேறுபாடற்ற வாழ்க்கை அமைய வேண்டும் என்ற நீதியினை விளக்கி, அறிவை வளர்த்து, அன்பில் திளைத்து அச் சமுதாயம் வாழ வேண்டும் என்ற நீதி யினையே பலப்பல வகைகளில் பலப்பல ஏதுக்கள் காட்டி எடுத்து விளக்குகிறான். புதிய ஆத்திசூடி, பாப்பா பாட்டு ஆகியவற்றில் எளிமையாகவும் சுருக்கமாகவும் சொல்லிய பல நீதிகளை எல்லாம் தொகுத்து, இங்கே நாட்டில் அமைதி நிலவ வேண்டுமானால், சாதியாலும்

சமயத்தாலும் நடைபெறும் மாறுபாடுகளையும் போராட்டங்களையும் நீக்க வேண்டும் என வற்புறுத்துகிறான் பாரதி. இன்று (1981-82ல்) நம் நாட்டில் காணும் பல்வேறு சாதி சமயப் பூசல்கள், நாம் பாரதி வாக்கைப் பின்பற்றாத காரணத்தாலேயே நடைபெறுகின்றன என்பதை உணர வேண்டும். ஊர் நன்றாக வாழ வேண்டுமாயின் இந்தப் பூசல்கள் வேண்டாம் என்பதை விளக்கத் தான் முதலாவதாக 'ஊருக்கு நல்லது சொல்வேன்' என்ற முன்னுரையோடு தன் நீதிநெறியைச் சொல்லத் தொடங்குகிறான்.

முதலாவதாக ஊர் நன்றாகச் சிறக்க வேண்டுமானால் தெய்வ வழிபாடு இன்றியமையாத ஒன்று என்பதையே, தொடக்கத்தில் நெற்றி ஒன்றைக் கண்ணனையும் அவன் தன் நித்த சக்தியையும் வாழ்த்துவதன் மூலம் காட்டி விட்டான். ஆம்! 'கோயில் இல்லா ஊரில் குடியிருக்க வேண்டாம்' என்பது ஔவைப்பாட்டியின் அறநெறியன்றோ! ஆயினும் அந்தக் கோயில் இறை வழிபாடு—வெறும் கல்லாலும் மரத்தாலும் ஆகிய கோயிலாக அல்லாது, உள்ளத் தூய்மையோடு வேறுபாடற்ற சமுதாய உணர்வோடு ஆக்கப்பெற்ற கோயிலாக அமையவேண்டும் என்பதைத்தான் பாரதி அடுத்த அடிகளில் விளக்கிக் கொண்டு போகிறான்.

முதலில் மக்களிடையில் சாதி வெறியும் வேறுபாடும் தாண்டவமாடுவதைக் கண்டு கண்டிக்கிறான். சமுதாய நலனுக்காக—வேலைகளைப் பிரித்துக்கொண்டு வாழ்வதற்காக அமைத்துக்கொண்ட நால்வகைப் பிரிவுகள், எப்படி விஸ்வரூபமெடுத்து, சாதிகளாகி, தீண்டா நிலையில் சிலரைத் தள்ளிவைத்து, ஒருவனை ஒருவன் தொடவும் கூசி ஒதுங்கும் வகையில் நாட்டை நாசப்

படுத்தும் நிலையினை எண்ணி நடுங்கும் அவன் உள்ளத்திலிருந்து இந்த அடிகள் வருகின்றன.

'நாலு வகுப்பும் இங்கொன்றே—இந்த
நான்கினில் ஒன்று குறைந்தால்
வேலை தவறிச் சிதைந்தே—செத்து
வீழ்ந்திடும் மானிட சாதி!

ஆம்! பாரதி காண்பது ஒரே சாதி—மானிட சாதிதான். இந்த வேறுபாடுகளால் அந்த மானிட சாதியே அடியோடு அழியும் என்று எச்சரிக்கை செய்கிறான் அவன்.

இந்த வேறுபாடு எப்படி நீங்கும் என்பதற்கு ஒரு குடும்பத்தையே உதாரணமாகக் காட்டுகின்றான். தந்தை, தாய், மகன், மகள் ஆகியோர் பலப்பல வகைகளில் பணிகள் இயற்றினாலும் ஒரே குடும்பமாக வாழ்வது போன்று, உலகக் குடும்பமும்—பாரத சமுதாயம் பல்வேறு பணிகளைப் பகுத்துச் செய்துகொண்டே ஒரே குடும்பமாக வாழ வேண்டும் எனச் சுட்டுகிறான். குடும்பத்தைப் பற்றி நினைக்கும்போது, அதன் தலைவி—மனைவி—அவள் முன் நிற்கிறாள். பல குடும்பங்களில் பெண்கள் இழிவாக நடத்தப்படுவதை எண்ணி, அதனாலும் சமுதாயம் சீரழியும் எனச் சுட்டுகிறான். ஆணும் பெண்ணும் இரு கண்களைப் போன்றவர்கள் என்று உவமை வாயிலாகக் காட்டி, அவர்கள் இருவரும் 'கண் இரண்டும் ஒன்றையே காண்' என்றபடி இயைந்து வாழவே வையம் தழைக்கும் எனச் சொல்லுகிறான். இறைவன் படைப்பில் இருவருக்கும் வேறுபாடு இல்லை என்றாலும் மனிதன் வேறுபாடுகள் கற்பித்து மாதர் அறிவைக் கெடுத்ததை,

'பெண்ணுக்கு ஞானத்தை வைத்தான்—உயிர்
பேணி வளர்த்திடும் ஈசன்
மண்ணுக்குள்ளே சில மூடர்—நல்ல
மாதர் அறிவைக் கெடுத்தார்'

எனச் சுட்டி, புவி நன்கு பேணப் பெற வேண்டுமானால் இருவரும் ஏற்றத் தாழ்வு இன்றி வாழவேண்டும் என்ற நீதியினை—நியதியினைச் சுட்டுகிறான்.

அடுத்து, சமயத்தால் வரும் மாறாட்டங்களும் போராட்டங்களும் அவன் கண் முன்பு வருகின்றன. நீதி புகட்டத் தொடங்குகிறான். 'தெய்வம் பலப்பலசொல்லிப் பகை தீயை வளர்ப்பவர் மூடர்' என்றே சாடுகிறான். எங்கும் நிறைந்த இறைவன் ஒருவனே என்ற உணர்வு அரும்பாத காரணத்தால்தானே இன்று நாட்டில் மீனாட்சிபுரம், 'மண்டைக்காடு' காட்சிகள் நம் கண்முன் தெரிகின்றன. இதுபோன்ற கொடுமைகள் நிகழக் கூடாதென்பதற்காகவே பாரதி இதை நீதியாகவே காட்டி அமைத்தான். ஆயினும் நாம் அதைப் படித்துக் கொண்டே—பேசிக் கொண்டே, பக்கத்திலேயே சமயப் போராட்டங்களைத் தீவிரமாக்கிக் கொண்டே வரு கிறோம்.

இந்த உண்மையினை விளக்குவதற்கும் பாரதி ஓர் எளிய உண்மையினையே கையாளுகின்றான். வீட்டில் உள்ள பூனை பல குட்டிகள் போடுகின்றது. ஒன்று வெள்ளை, ஒன்று கறுப்பு, ஒன்று சாம்பல், ஒன்று பாம்பு நிறம். இந்த வேறுபாட்டால் அவை மாறுபட்டுப் போர் விளைப்பதைப் பார்த்திருக்கிறோமா! மேலும் அவற்றுள் ஒரு நிறம் உயர்ந்தது, ஒரு நிறம் தாழ்ந்தது என்ற வேறுபாடுகளைத்தாம் அவை கற்பித்துக் கொள்ளு கின்றனவா? இல்லையே!

வண்ணங்கள் வேற்றுமைப்பட்டால் — அதில்
மானுடர் வேற்றுமை இல்லை
எண்ணங்கள் செய்மைகள் எல்லாம்—இங்கு
யாவர்க்கும் ஒன்றெனக் காணிர்!

என்பது பாரதி வாக்கு.

இந்த வாழ்வின் அடிப்படையான சாதி வேறுபாடற்ற, சமய வேறுபாடற்ற மெய்ந்நெறி வாழ்க்கையினை விளக்கவே இந்த 'முரசு' கொட்டி அறிவிக்கும் நீதியினை அவன் தொட்டான். இனி, மறுபடியும் முரசினை முழக்குகிறான் பாரதி. முழக்கி, இந்த வேறுபாடற்ற வாழ்க்கைக்கு அடிப்படையான அன்பினையும், நம்பிக்கையினையும், அஞ்சாமையினையும் அறிவையும் தொட்டுக் காட்டி முரச முழக்கத்தை முடிக்கின்றான்.

அன்பு வாழ்வின் அடிப்படை. எனவே 'அன்பென்று கொட்டு முரசே' என்கிறான் பாரதி. அதில் ஆக்கம் உண்டு, இன்பம் உண்டு, துன்பம் இல்லை; சூது பிழைகள் இல்லை என எக்காளமிடுகிறான். இந்த வாழ்வின் அடிப்படை இல்லாமையால்தான் எத்தனையோ பிழைகளை வளர்த்துக் கொண்டு மனித சமுதாயம் வாடி வற்றல் மரமாகி நிற்கிறது. பாரதிக்கு மறுபடியும் இறையுணர்வு மேலிடுகிறது. மனிதன் யாவும் தன்னால் ஆகின்றது என்ற தருக்கில் அல்லவா இத்தகைய வேறுபாட்டுக் கொடுமைகளையும் பிற தீமைகளையும் புரிகின்றான். இவன் இறைவுணர்வு பெற்றால். 'எல்லாம் அவன் செயல்' என்ற நினைப்பில் தன்முனைப்பு அகலுமன்றோ! அதன் வழி தன் இனத்தான்—பிற இனத்தான் என்ற பேதம் போகுமன்றோ!

மேலும் பாரதி எல்லாரும் எல்லாச் செல்வமும் பெறின் பல சமுதாய ஏற்றத் தாழ்வுகள் அகலும் என்ற உண்மையினை உணர்ந்தவன். எனவே உணவை முதற்படுத்தி அது எல்லாருக்கும் எல்லாம் உண்டு என்ற குறிப்பில்,

**'வயிற்றுக்குச் சோறுண்டு கண்டீர்—இங்கு**
**வாழும் மனிதர் எல்லார்க்கும்**

என்று கூறி, பின்னும்,

**'வயிற்றுக்குச் சோறிடல் வேண்டும்—இங்கு**
**வாழும் மனிதருக்கு எல்லாம்,**

என்ற உணர்வையும் வற்புறுத்தி முரசுவழி முழங்கும் நீதியினை முழக்குகிறான். இடையில் இவற்றுடன் அஞ்சாமை, அறிவு, கல்வி ஆகியவையும் சமுதாயம் உயர்ந்திடத் தேவையானவை என்பதையும் அவன் விளக்கத் தவறவில்லை. மேலும் திடங்கொண்டார் மெலிந்தோரை தின்று பிழைப்பதும், தம்பி மெலிவானால் அண்ணன் அவனை அடிமை கொள்வதும் சமுதாய நல்வாழ்வுக்குப் புறம்பானவை என்பதைச் சுட்டுகிறான். இன்று நாட்டில் இத்தகைய கொடுமைகள் நடப்பதையும் வழக்கு மன்றங்களில் இவற்றின் அடிப்படையில் எண்ணற்ற வழக்குகள் உள்ள நிலையினையும் நாம் நன்கு அறிவோம்.

'சிற்றடிமை' என்ற சொல்லைப் பாரதி பயன் தெரிந்து கையாளுகிறான். இன்றைய உலகில் காசு இருந்தால் வீசி எதையும் சாதிக்கலாம் என்ற நிலையினைப் பலரும் பேசுகின்றனர்; காண்கின்றனர்; அனுபவிக்கின்றனர். அன்றி, ஆட்சி பலம் இருந்தாலும் எதையும் செய்யலாம் என்ற நிலையும் உலகில் உள்ளதை அறிவோம். இந்த

இரண்டு அவல நிலைகளும் மக்கள் வாழ்விலிருந்து நீக்கப்படவேண்டும் என வற்புறுத்துகிறான் பாரதி. இல்லையானால் அவற்றால் ஈர்க்கப்பட்டவன் 'அடிமை' அல்லன், 'சிற்றடிமை' யாவன் என்கிறார். அடிமையே சிறுமையைக் குறிக்கும்; சிறுமை என்னும் அடையைச் சேர்த்து, அந்தக் கேவலத்தை இன்னும் கேவலமாக்கு கின்றான் பாரதி. அந்தக் காசுக்கும் அரசுக்கும் அஞ்சாது தலை நிமிர்ந்து 'யாமார்க்கும் குடியல்லோம் யாதும் அஞ்சோம்' என்ற அப்பரடிகள்தம் வாக்கின் வழியே அஞ்சாமை மேல் கொண்டு வாழ வேண்டும் என்கின்றான் அவன்.

'செம்புக்கும் கொம்புக்கும் அஞ்சி—மக்கள்
சிற்றடிமைப் படலாமோ'

என்பது அவன் வாக்கு.

செம்பு என்பது காசு—பணம்—லஞ்சம் என்பதைக் குறிக்கும், கொம்பு என்பது ஆட்சியினைக் குறிக்கும்.

ஆம்; இத்தகைய அஞ்சாமையும் தெய்வ உணர்வும் பெறின், கல்வியும் நல்ல நிலையில் நாட்டில் மலரும். யாரும் யாவும் விடுதலை பெறும்நிலை உண்டாகும். கல்வியின் வழியே அறிவு பெருகும். அந்த 'எனைத் தாலும் எஞ்ஞான்றும் யார்க்கும் மனத்தாலும் மாணா செய்யாத அறிவு மலரின், 'யாருக்கும் தீமை செய்யாது புவியெங்கும் விடுதலை பெறும்' என்று காட்டுகின்றான் பாரதி. 'இப்படி மனித சமுதாயம் இயங்கினால் சிறியார் உயர்வார்; உயர்ந்தார், தெய்வத்தால் உயர்த்தப் பெறுவார். எங்கும் ஏற்றத்தாழ்வு அற்ற சகோதரத் தன்மை காட்டும் சம தர்மச் சமுதாயம் பாருக்குள்ளே முகிழ்க்கும்' என்று கூறி இந்த ஒருமை உணர்வினையே தன் இறுதி அடிகளாக ஆக்கித் தருகின்றான் பாரதி.

'ஒன்றென்று கொட்டு முரசே—அன்பில்
ஓங்கென்று கொட்டு முரசே
நன்றென்று கொட்டு முரசே—இந்த
நானில மாந்தருக் கெல்லாம்'

என்பனவே அந்த முரசின் இறுதி அடிகள். தெய்வம் வாழ்ந்ததாக அமைந்த ஒன்று நீங்க, மற்றுள்ள முப்பத் தொரு கண்ணிகளிலும் பாரதி நீதியாக காட்ட நினைத்தது எந்த வேறுபாடும் அற்ற, எல்லாரும் எல்லாச் செல்வமும் பெற்றுள்ள, அஞ்சாமை, அறிவு, அன்பு, கல்வி யாவும் பெற்ற, தெய்வ உணர்வு பொருந்திய நல்லதொரு சமுதாயத்தைத்தான். ஆயினும் அவன் மறைந்து அறுபது ஆண்டும் கழித்தும் அவன் கண்ட கனவு நனவாக வில்லை. இதோ அவன் பிறந்த நூறாவது பிறந்த நாள் விழாவும் நாம் இன்று கொண்டாடுகிறோம், அவனுடைய சொல்லை நாம் செயலில் கொண்டு வாழ்வதே உண்மை விழாவாகும். இதை உணர்ந்து, இந்த நூற்றாண்டு விழாவின் அடிப்படையிலாவது மனித சமுதாயம் வேறுபாடற்று, விடுதலையுற்று, தெய்வநெறி பற்றி அன்பும் அறனும் அறிவும் திறனும் பெற்றுச் சிறக்க வாழுமா என்ற எண்ணச் சிதறல்களோடு விடை பெறுகின்றேன்.

—அண்ணாமலைப் பல்கலைக் கழகப்
பாரதி மலர்-1982

## 22. பாவை பாடுவீர்! பயனை நல்குவீர்!

'**மா**தங்களில் நான் மார்கழி' என்று கண்ணன் சொன்னதாகப் பகவத்கீதையில் காண்கிறோம். ஆம்! மார்கழி சிறந்த மாதமாகும். உள்மாசும் புறத்தூசும் போக்கும் திங்கள் இதுவாகும். பொங்கலுக்கு முன் மார்கழி முழுவதும் வீடுவாயில்களையும் பிறவிடங்களை

யும் தூய்மைப்படுத்தி, போகியன்றைக்குத் தேவையற்ற அனைத்தையும் நெருப்பிலிட்டுப் பொசுக்குவோம். அதே வேளையில் அவை தீயினில் தூசாவது போலவே, நம் பேரய பிழையும் புகுதருவான் நின்றனவும் தீயினில் தூசாகும் நாளும் இதுவாகும் என அறிகிறோம்.

மார்கழி விடியலில் எழுந்து, தூய நன்னீரில் துதைந்து துதைந்து ஆடி, இறைவனை ஆடியும் பாடியும் போற்றுவது நம் மரபாகும். இதைப் 'பாவை நோன்பு' என்பர் மணிவாசகர். திருவெம்பாவையும் ஆண்டாள் திருப்பாவையும் மார்கழி முழுதும் விடியலில் பாடப் பெறுவன; பயன் தருவன.

பாவை நோன்பினைப் பற்றியும் அதன் பயனைப் பற்றியும் ஆண்டாள் காட்டுவதை மட்டும் இங்கே காட்ட நினைக்கிறேன். உலகில்—சிறப்பாகத் தமிழ் நாட்டில்—நடைபெறும் எல்லா விழாக்களும் நாடும் நானிலமும் வாழக் கொண்டாடப் பெறுவனவேயாம். 'பசியும், பிணியும் பகையும் நீங்கி, வசியும்வளனும் சுரப்பதற்கே விழாக்கள் என்பதை நம் பண்டைய இலக்கியங்கள் நன்கு விளக்குகின்றன. ஆண்டாளும் இந்த உண்மையினையே நமக்கு விளக்கி, வையம் வளம் பெறப் பாவை நோன்பினை மேற்கொள்ளப் பாவையரை அழைக்கின்றார்.

நோன்பு—விரதம் என்பன தன்னடக்கத்துக்கு அறிகுறி. சிலவற்றை நீக்க, தூய்மையாக—உள்ளும் புறமும் மாசற்றதாக அமையப் பயன்படுவன. இதை ஆண்டாள்,

**'வையத்து வாழ்வீர்கள் நாமும் நம்பாவைக்குச்**
**செய்யும் கிரிசைகள் கேளீரோ பாற்கடலுள்**
**பையத் துயின்ற பரமன் அடிபாடி**
**நெய்யுண்ணோம் பாலுண்ணோம் நாட்காலே நீராடி**

மையிட் டெழுதோம் மலரிட்டு நாமுடியோம்
செய்யாதன செய்யோம் தீக்குறளை சென்றோதோம்
ஐயமும் பிச்சையும் ஆந்தனையும் கைகாட்டி
உய்யுமா றெண்ணி உகந்தேலோ ரெம்பாவாய்'

என விளக்கிக் காட்டுகிறார். ஆம்! தூய நீரில் நம்மை மூழ்க வைக்கிறார். மார்கழி நீராட வைக்கிறார். 'நம் பாவைக்கு' என்று அவர் குறிப்பது நம் எல்லாரையும் உள்ளடக்கியே தான். சிலவற்றை விலக்கச் சொல்கிறார், செய்யாதனவற்றைச் செய்ய வேண்டாம் என்கிறார். கூடிய வரையில் சமூகத்தைக் கண்டு ஒல்லும் வகையால் உதவி செய்யச் சொல்கின்றார். மொத்தத்தில் தனக்கென வாழாப் பிறர்க்குரியாளராக வாழும் தியாக வாழ்வை மேற்கொள்ளச் செய்கிறார். அந்த நல்ல தூய நோன்பின் முடிவிலே உலகவாழ்விலே—மக்கள் வாழ்விலே—உயிர்கள் வாழ்விலே— இன்பம் பொங்குகிறது! எழில் பொங்குகிறது! யாவும் இனிமையுறுகின்றன. ஆண்டாளே, இந்த இன்பம் மலரும்—செல்வ வாழ்வும் மலரும்—என்பதை நமக்கு நன்கு எடுத்துக் காட்டுகிறார்.

'ஓங்கி உலகளந்த உத்தமன் பேர்பாடி
நாங்கள் நம்பாவைக்குச் சாற்றி நீராடினால்
தீங்கின்றி நாடெல்லாம் திங்கள் மும்மாரி பெய்து
ஓங்கு பெருஞ் செந்நெலூடு கயலுகளப்
பூங்குவளைப் போதில் பொறிவண்டு கண்படுப்பத்
தேங்காதே புக்கிருந்து சீர்த்த முலைபற்றி
வாங்கக்குட நிறைக்கும் வள்ளல் பெரும்பசுக்கள்
நீங்காத செல்வம் நிறைந்தேலோ ரெம்பாவாய்'

என்பது அவர்வாக்கு. ஆம்! பாவை நோன்பு மேற்கொண்டால் நாட்டில் நல்லமழை—மாதம் மும்மாரி பெய்யும். அடியொடு பெய்யாமல் காய்வதோ அன்றி

அளவுக்கு மீறிப்பெய்து அழிப்பதோ அந்தப்பாவை நோன்பு பாடும்—நோற்கும் நாட்டில் இல்லை. அது மட்டுமன்று; நாட்டில் செந்நெல் அளவற்று விளையும். பால்வளம் பெருகும். எங்கும் பசியும் பிணியும் பகையும் நீங்கும். இன்னும் மக்கள் வாழ்விற்கு—உயிர் வாழ் விற்குத் தேவையான நலங்கள் யாவும் பெருகும்.

இன்று இவையெலாம் மாறுபட்டு நிற்கின்ற நிலையே நாம் பாவை நோன்பினைச் சரிவர மேற்கொள்ளவில்லை என்பதைக் காட்டுகின்றதன்றோ! சிந்தாதிரிப்பேட்டை கலியாணம் மகளிர்மேல் நிலைப்பள்ளியில் பயிலும் பெண் கள் அனைவரும் இக்குறை நீக்கும் வகையில் பாவை நோன்பினை மேற்கொள்ள வேண்டும். என்பது என் வேண்டுகோள். மார்கழி முற்றும் நோன்பிருந்து, அடுத்த தையில், நாடகவிழாக் கொண்டாடும் இப்பள்ளியின் நல்ல பெண்கள் வழி நாமும் நாடும் நானிலமும் நலம் பெறலாம் எனும் துணிபுடையேன்.

## 23. சீதையின் இறுதிப் பிரிவு

'பிரிவு' வாழ்வில் விரும்பத்தகாத ஒன்று. கூடிய இருவர் பிரிய எண்ணும் நிலை எண்ணத்தக்கதன்று. வள்ளுவர் இதையே 'உள்ளப் பிரிதல்' என்றார். எனவே உயிர்கள் என்றும் இணைந்து வாழ்வதையே விரும்பு கின்றன. மக்கள் மட்டுமன்றி விலங்கினங்களும் பறவை களும் கூடப் பிரிவை எண்ணிக் கண்ணீர் உகுக்கும் காட்சி அனைவரும் காணும் காட்சியேயாம். ஓரறிவுயிராகிய மரமும் புல்லும் கூட இடையில் பிரிக்கப்பெறும் கிளை,

நுனி முதலியவற்றை எண்ணி நீர் உகுப்பதைக் காண்கின்றோம். எனவே உயிரினத்தின் இயல்பு ஒன்றி வாழ்தலேயாம்.

இவ்வொன்றிய வாழ்வின் உச்சியில் முகிழ்ப்பதே காதல் வாழ்க்கை. காதல் வாழ்வு எனும்போது அது ஒரு பிறவியில் மட்டும் தோன்றி மறைவதன்று என்பதும் வழிவழியாகப் பிறவிகள் தோறும் பற்றி வருவதென்பதும் ஆய்ந்தோர் கண்ட முடிவு. பழங்காலச் சங்கப்புலவர் முதல் நேற்றைய பாரதி வரையில் இந்த உண்மையைப் பாடியுள்ளார்கள். எனவே காதல் பிரிவு ஆற்றமுடியாத ஒன்றாகும்.

வழிவழியாகப் பிறவிதோறும் வரும் இக்காதல் பிரிவினுக்கு இடையிடையே பல இடையூறுகள் வருவதும் மரபு. இக்காதல், கடவுளைப் பற்றியதாக அமையும் போது அவ்விடையூறுகள் தகர்த்தெறியப் பெறுகின்றன. அல்லாத நிலையில் அவை பழிக்கப் பெறுகின்றன. சுந்தரர் இறைவனிடம் நீங்காத காதல் கொண்டவர். எனினும் இடையில் தையலார் மையலில் தாழ்ந்த காரணத்தால் இருவரை இனிய காதலியராக ஏற்று வாழ்ந்தார். எனினும் அவர் உள்ளம் 'எத்தனை நாள் பிரிந்திருப்பேன் என்னாரூர் இறைவனையே' என்றுதான் நினைத்துக் கொண்டிருந்தது. அவர் உள்ளம் இருவேறு காதல் நிலைகளுக்கு இடைப்பட்டிருந்தபோதிலும் வழிவழியாக ஒன்றிய உயர்ந்த காதலே இறுதியில் வெற்றி பெற்றதெனக் காண்கின்றோம்.

'வண்டல் பயில்வன வெல்லாம் வளர்மதியம் புனைந்த சடை அண்டர்பிரான் திருவார்த்தை'யாகவே கொண்டு வாழ்ந்தவர் காரைக்காலம்மையார். அவருடைய காதல்

வாழ்வு ஆண்டவனை வழிவழியாகப் பற்றிய ஒன்று. எனவே இந்தப் பிறவியிலும் அவ்வாழ்வு 'பிறந்து மொழி பயின்று பின்னெல்லாங் காதல் சிறந்து' நிற்கும் வகையில் அமைந்தது. எனினும் அவ்வாழ்வு 'பரமதத்தனோடு' கொண்ட மணத்தின் காரணத்தால் குறையுற்றது. உள உறவை அறியா நிலையிலே இருவர்தம் மணவாழ்வில் விரிசல் காண முடியவில்லை என்றாலும் ஒருமை உணர்வு பெறவில்லை என அறிய முடிகின்றது. முடிவில் நிலைத்த காதல் வெற்றிபெற்று நிற்க 'அம்மை' அப்பனை ஆலங்காட்டில் அடைவதைக் காண்கின்றோம். உலகிய லாகிய இல்லற நெறிப்படி எண்ணும்போது இந்த அம்மையின் நெறி மாறுபட்டதாகக் காணினும் உயர்ந்த தெய்வநெறிக் காதல் வழியில் இது சிறக்க அமைகின்றது. அவ்வம்மையைத் தெய்வமாக உலகம் மதிக்கிறது—போற்றுகிறது—புகழ்கின்றது. பதினோராந் திருமுறை யில் இறைவன் பாடலுக்கு அடுத்த நிலையை இவர் பாடல் பெறுகின்றது.

முற்றும் துறந்த மணிமேகலையின் உள்ளம்கூட முந்தைப் பிறவியின் கணவனைக் காணத் தடுமாறு கின்றது. எனினும் அவர்தம் சமயநெறி சார்ந்த தெய்வக்காதல் அதை மறக்கச் செய்து மணிமேகலையைத் தெய்வ நெறிக்கு உயர்த்திச் செல்லுகின்றது. மணிமேகலையின் உள்ளம் சென்ற பிறவியில் கணவ னாகக் கொண்டவனிடம் காட்டிய காதலினும் வழிவழிப் பற்றிய தெய்வ நெறியிடம் காட்டிய காதலால் சிறந்து நின்றமையின் அதனுடன் அவர் ஒன்றி உயர்ந்து போற்றப் பெற்றார்.

தெய்வத்திடம் மட்டுமன்றி மக்களுக்குள்ளேயே இந்த உணர்வு அரும்புவதையும் ஒருசில நிகழ்ச்சிகள்

மூலம் நாம் காண்கின்றோம். 'மணம் விண்ணுலகில் நிச்சயிக்கப்படுகின்றது' என்று மேலை நாட்டார் கூறுகின்றார்கள். நம் நாட்டில் மணம் தெய்வநலம் சான்றது எனப் பேசப்படுகிறது. இவ்வளவுக்கும் இடையிலே உலக வாழ்வில் சில வேளைகளில் சில நிகழ்ச்சிகளைக் காண்கிறோம். முன்னரே மணமாகிக் கணவனோடு வாழ்ந்த மகளிர், ஏன்?—இரண்டொரு மக்களைப் பெற்ற மகளிர்—பிறகு வேறொருவரைக் காதலித்து அல்லது காமமுற்று அவருடன் பிரிந்து செல்வதைக் காண்கிறோம். இது வெறுக்கத்தக்கதேயாகும். ஆயினும் அந்தப் பிந்திய காதல் வாழ்வு கைகூடாவிடின் இருவரும் ஒருசேர இறக்கும் செய்திகளும் நம் காலத்தில் நடக்கின்றன. இதை என்னவென்று சொல்லுவது? இதுவும் தவறுதான். ஆனால் அந்தத் தவறு செய்த உயிர்கள் தம்மைத் தியாகம் செய்ததால் தெய்வநிலை பெற்று விட்டனவா? நாம் மேலே கண்ட வழிவழியாக அவர்கள் இருவரிடம் பொருந்திய தெய்வநெறிக் காதல், இடையில் பரமதத்தன் போன்ற ஒருவனால் தடைசெய்யப்பெற்று, இறுதியில் முடிவுற்றதா! திருவிளையாடற் புராணத்துக் கௌரியும் பெரிய புராணத்துப் புனிதவதியும் வடநாட்டு மீராவும் தெய்வநிலையில் ஒன்றிய வகைப்படி இவர்களையும் இணைக்கலாமா? வாழ்வையே துச்சமென எண்ணி—பின் உலகில் உண்டாகும் பழிப்பினையும் கருதாது—ஏன்? அவளுக்கு முன்னரே உள்ள மக்கள் கணவர் இவர்களை மறந்து—இறைவனோடு பிணைந்து மரணமுற்ற நிலையினைப் போற்றுவதா? அன்றித் தூற்றுவதா?

நாளிதழ்களில் இவைபோன்ற செய்திகள் வரும்போது என் உள்ளம் இவ்வாறு எண்ணுவது உண்டு, இவர்கள் செயல் தவறு எனக் கண்டால், 'கொண்டானிற்றுன்னிய'

தெய்வமில்' என்ற தமிழ்நாட்டில் புனிதவதியும் கௌரியும் கூடப் பழிக்கத் தக்கவர்கள் தாமே என்ற எண்ணம் தோன்றும். உடனே சைவனாகப் பிறந்த நான் அவ்வாறு எண்ணுதல் பொருந்துமா என்ற உணர்வு தோன்றும். சைவ சமயத்தில் மட்டுமன்றி உலகப் பிற சமயங்களிலேயும் இத்தகைய நல்ல காதலும் வாழ்வும் குழந்தை பிறத்தலும் கண்கூடு. இந்த இரண்டுங் கெட்டநிலையில் இடர்ப்பாடுற்று முடிவு காண்பது அரிதாகின்றது. இது மனிதக்காதல்; அது தெய்வக் காதல் என்றாலும், இன்றைய அறிவியல் நெறிக்கு மட்டுமன்றித் 'தெய்வந் தொழாஅள் கொழுநற்றொழு தெழுவாள்' என்ற குறள்நெறிக்கும் அத்தெய்வக்காதலும் தவறுடையதே எனத்தோன்றும் அதே வேளையில் உயிரையும் மதியாது தியாகம் செய்த இவர்களைப் போற்றவும் வேண்டியுள்ளது. இந்தச் சிக்கல் ஆய்ந்து முடிபு கண்டு அமையவேண்டிய ஒன்று. இந்தச் சிக்கலே சீதையின் இறுதிப் பிரிவினை எண்ணியதால் தோன்றியதேயாகும்.

கம்பனது இராமாயணத்தில் இந்தச் சிக்கலுக்கு இடம் இல்லை. பொற்பின் செல்வியாம் சீதையைக் கம்பர் தமிழ் முறைப்படி முதலில் இராமன் முன்நிறுத்தி, இருவரும் மாறிப்புக்கு இதயம் எய்திய பிறகு மணமுடிக்கிறார். இராமன், காட்டிற்குப் போகும்போது சீதையைப் பிரியநினைக்க, 'நின்பிரிவினும் சுடுமோ 'பெருங்காடு' என்று கூறவைத்து, கம்பர் அவளை அவனுடன் காட்டுக்கு அனுப்புகிறார். இலங்கையில் வாழும்போதும் அச்சீதைக்கு இராமனது எண்ணத்தைத் தவிர வேறு உணர்வைத் தரவில்லை. இராமனை எண்ணி எண்ணி மென்மருங்குல்போல் வேறுள அங்கமும் மெலிந்த

நிலையிலேயே சீதையைக் காட்டுகிறார். இறுதியில் இராமனோடு சேர்ந்து மணிமுடி சூட்டி மகிழ்கின்றார்.

இந்த நிலையிலே கம்பர் தம் கவிதையை முடித்தாலும் இராமாயணம் இதனோடு முடிவதில்லை. தொடர்ந்து சென்று இராமன் சீதை இருவரின் தெய்வக் காதலைப் பொய்ம்மையாக்குகின்றது, இராவணனுடன் இருந்த சீதையைப்பற்றி யாரோ பழிக்க, அது கேட்ட இராமன் அவளை நிறைமாதக் கர்ப்பிணியாயிருக்கும் போது காட்டுக்கனுப்பினான்—அங்கே மக்கள் பிறந்து வளர, பிறகு ஒரு காலத்தில் அவளைக் காண நேரும் நிலையில் தவற்றினை உணர்கிறான் இராமன். ஆயினும் சீதையின் தெய்வக் கற்பு தேய்கின்றது. மறுபடி இராமனோடு செல்ல மறுக்கிறது. பிறந்த மண்ணையே புகலிடமாகக் கொண்டு மறைகிறாள் சீதை.

இராமாயணத்தின் இப்பிற்பகுதி யார் எதற்காக எப்போது எழுதினார்கள் என்று எண்ணும்போது நமக்கு அதிர்ச்சியும் குழப்பமுமே உண்டாகின்றன. கம்பரது 'தெய்வநெறி' எங்கு போயிற்று என எண்ணவேண்டியுள்ளது! இராமனும் தேவனே—திருமாலே என்று உணர்கின்றபோது நமது உள்ளத்தின் வேதனை இன்னும் அதிகமாகின்றது. சீதை இராமனைப் பிரிந்திருந்த பிரிவினைக் காட்டிலும் இந்தப் பிரிவே உண்மையில் வேதனை தருவது.

பிரிவால் வாடுவது இயற்கை எனக் கண்டோம், ஆனால் இந்தப் பிரிவில் இராமன் சுகம் காண்கின்றான். ஏன்? விளக்கம் கூறமுடியுமா? எத்தனைதான் வேறு பொருந்தாத சமாதானங்கள் இதற்குக் கூறினாலும் மனித உள்ளம் ஏற்குமா? பிணைந்த மணவாழ்விலும்

கூடும் தெய்வநெறியோ காதல் நெறியோ சிறந்ததென இறைநிலையுற்றும் உயிர்த்தியாகம் செய்தும் புகழ்பெற்ற பெண்களை மேலே கண்டோமே அந்த நிலையில்கூட 'கற்பினுக் கணியாய்' சீதையை வைத்து எண்ண வழியில்லையா? நல்லவேளை, கம்பன் இந்தச் சிக்கல் எல்லாம் தமிழகத்துக்கு —மரபுக்கு —கற்புநெறிக்கு—காதல் வாழ்வுக்குத் தேவை இல்லை என எண்ணித்தானோ, பட்டாபிஷேகத்தோடு முடித்துக் கொண்டான் என எண்ண வேண்டியுள்ளது. உண்மையில் இராமனையும் சீதையையும் மாசற்றவர்களாக உலகுக்குக் காட்ட விரும்பும் பேச்சாளரும் பிரசங்கிகளும் கம்பன் வழிநின்று அவர்கள் இருவரையும் அரியணையில் அமர்த்தி அமைதி கொள்வதே சாலப் பொருந்துவதாகும்.

இந்த முடிவே பிரிவு காணாத முடிவு. உளத்தால்—இராவணன் இடத்திருந்தபோதும்—மறக்காத தெய்வ நெறி முடிவே உள்ளம் பிரியாது ஒன்றிய காதல் வாழ்வைக் காட்டும் முடிவு. எத்தனை பிறவிகள் எடுத்தாலும் எத்தனை இடர்கள் இடையிடையே வந்தாலும் பிரிக்கமுடியாத—பிரிவறியாத உணர்வு; புனிதவதியும் கௌரியும் மீராவும் மற்ற நல்ல மங்கையும் பிரிந்தறியாத பேருணர்வு; எங்கேனும் யாதாகிப் பிறந்திடினும் எதனாலும் இடருற்றாலும் மதத்தால் பிரிந்து நின்றாலும்—உணர்வு அழிந்து மறப்பது போன்ற நிலை நேரினும் மறவாமல் இணைந்த, பிரிக்க முடியாத பெருநிலையே அது. இந்த உணர்வையே கம்பன் தம் முடிவின் மூலம் உலகுக்கு உணர்த்தி விட்டான். அவனைப் பாடுபவரும் அதே நிலையில் உணர்த்தி உயர்வார்களாக!

## 24. இரணியன் ஏன் வந்தான்?

ஆசை பற்றிக் கம்பர் இராம காதையை எழுதினார். இராவணனின் கொடுமைகளிலிருந்து உலகை மீட்க இராமன் பிறந்தான். அவன் வரலாற்றை வால்மீகி எழுதினார்; அதைக் கம்பர் தமிழில் ஆக்கித் தந்தார். எனினும் வால்மீகி காட்டாதன சிலவற்றைக் கம்பர் காட்டுகிறார்; தம் தமிழ் நாட்டு மரபுப்படி சில நிகழ்ச்சிகளை மாற்றியும் அமைத்துக் கொண்டார். வால்மீகியோ வீடணனோ வேறு யாரோ நினைத்துப் பார்க்காத அளவிற்கு இந்த இரணியப் படலத்தைக் கம்பர் புதிதாக இராமாயணத்தில் புகுத்தினார்! ஆம்! இது இராம காதை—இராவண காவியம், இதில் இரணியன் ஏன் வந்தான்? கம்பன் இந்த இரணியன் வரலாற்றை—வால்மீகி தொட்டுக்காட்டாத ஒன்றை ஏன் தொட வேண்டும்? அதில்தான் கம்பன் உயர்நலம் காக்கும் தன்மை புலனாகின்றது.

இராவணன் தவறிழைத்தான்; இடித்துரைப்பார் எடுத்துக் காட்டியும் திருந்தவில்லை. முடிவன்றி வேறு முடிவு இல்லை என்ற நிலைக்கு அவன் சென்றுவிட்டான். அங்கேதான் கம்பர் எண்ணிப் பார்க்கிறார். இவன் போலத் தருக்கினால்—தான் என்ற ஆணவத்தால்—தரணி வாழ்வே தனக்கு அடிமை என்ற மமதையால் வாழ்ந்து அதனால் அனைத்தும் இழந்து மறைந்த ஒருவன் அழிவைக் காட்டினால் ஒருவேளை இராவணன் மனம் திருந்தக்கூடும்—ஏன்?—வழிவழியாக உலகம் உள்ளளவும் வருகின்ற 'இராவணர்' மனந்திருந்தக் கூடும் என நினைத்தார். நல்ல புலவன் தான் தீட்டும் காவியத்தைக் காலம் கடந்து வாழவைப்பவன்; என்றென்றும் வாழும் சமுதாயத்துக்கு அறம் உணர்த்தி நல்வழி காட்டுபவன்

எனவேதான் கம்பர் அந்த இராவணனுக்கு மட்டுமன்றி— இன்றும்—இனி வருங்காலத்தும் வாழும்—வாழப்போகும் இராவணருக்கு—தருக்கு மிக்க அரசர்களுக்கு—அமைச்சர் களுக்குத் தாம் நாட்டுக்கு அல்ல; நாடு தனக்காக என எண்ணும் அரக்கர்களுக்குப் பாடம் கற்பிக்க இரணியனை வரவழைத்தார்—ஆயினும் அந்த இராவணன் கேட்க வில்லை. முடிவு அறிந்ததே! ஆனால் உலகில் வாழும் இன்றைய இராவணர்?

கம்பர், இரணியப் படலத்தினை வீடணன் வாயிலாக இராவணனுக்குச் சொல்லும் முகத்தான் அமைக்கின்றார். 'இதற்கும் முன் நிகழ்ந்தது' எனக் காட்டி அவனைத் திருத்தி, சீதையை விடுவித்து இராமனைப் பணிய வேண்டும் என்று வேண்டுகிறான் தம்பி வீடணன். நமக்கு இங்கே அவன் கதை வேண்டுவதில்லை. அவன் காட்டிய இரண்டொரு கருத்தினைக் கண்டு அமைவோம்.

தான் ஆண்ட அத்தனை உலகங்களும் தன் பெயர் அன்றி வேறு பெயரைக் கூறவும்கூடாது என்பது இரணியன் கட்டளை. தனக்கு மேல் இறைவன்— தன்னைச் செலுத்துபவன் உளன் என்பதை மறந்தான். 'யான், எனது' என்னும் செருக்கினால் கண் மூடினான். அவனைத் திருத்த வேறு யாரும் வரவில்லை? அவன் மகனே வந்து திருத்த முற்பட்டான். அவன் மகன் பிரகலாதன் இறைவன் எளிமையினையும் இறைவனின் முடிவிலா ஆற்றலுடைமையையும் தெளியக் காட்டினான். இரண்டு இடங்களைக் கண்டு அமைவோம்.

தன் குருவின் விருப்பினுக்கு மாறாகப் பிரகலாதன் இறைவன் பெயரைச் சொல்கிறான். ஆசிரியர் 'கெடு[illegible]சிந்தனை உன்னையும் என்னையும்' என,

அதற்குப் பதிலாக, இறைவன் பெயரைச் சொல்லி, அதனால் அவ்விருவர் மட்டுமன்றித் தரணியே பிழைத்து ஓங்கும் என்கிறான் பிரகலாதன்.

'என்னை உய்வித்தேன் எந்தையை உய்வித்தேன் இளைய
உன்னை உய்வித்து இவ்வுலகையும் உய்விப்பான் அமைந்து
முன்னை வேதத்தின் முதற்பொருள் மொழிவது
மொழிந்தேன்'

எனக் கூறுகிறான். இதனால் தனக்கும் பிற யாவற்றிற்கும் மேலுள்ள இறைவன் பெயரே உலகை உய்விப்பது எனக் காட்டி, 'யான், எனது' என்ற தருக்கற்று வாழ வேண்டும் எனக் காட்டுகிறான்.

பின் இரணியன், 'தானன்றி எவரே உலகு தந்தார்' என்று தருக்கொடு கேட்ட வினாவிற்குப் பதிலாகப் பல பட உரைப்பதாக அநேக பாடல்களைக் கம்பர் பாடுவர். அவற்றுள் இறைவனின் அலகிலா விளையாட்டின் திறத்தினையும் யாண்டும் நீக்கமற நிறைந்து அங்கங்கே உள்ளனவற்றை வாழ வைக்கும் அருள் நலனையும் அவனைக் கண்டு தொழ வேண்டிய நிலையினையும் அதனால் உலகு பெறும் பயனையும் பிறவற்றையும் எடுத்துக் காட்டி, இரணியனைத் திருத்த நினைக்கின்றான். அவன் திருந்தவில்லை. அவற்றைக் கண்டு நாமாவது திருந்த முயல்வோமே!

'உலகு தந்தானும் பல்வேறு உயிர்கள் தந்தானும் உள்ளுற்று
உலைவிலா உயிர்கள் தோறும் அங்கங்கே உறைகின்றானும்
மலரில் மணமும் எள்ளில் எண்ணெயும் போல எங்கும்
அலகில் பல்பொருளும் பற்றி முற்றிய அரிகாண் அத்தா'

என்றும்

**'சாணினும் உளன் ஓர் தன்மை அணுவினைச் சத கூறிட்ட
கோணினும் உளன் மாமேருக்குன்றினும் உளன் இந் நின்ற
தூணினும் உளன் நீ சொன்ன சொல்லிலும் உளன்
இத்தன்மை
காணுதி விரைவில்'**

என்றும் இன்னும் பல வகையிலும் இறைவன் தன்மையினைப் பிரகலாதன் வழியே கம்பர் உலகுக்குக் காட்டுகிறார். பிறகு நடந்த கதை நாமறிவோம். அதுபற்றி இங்கே நான் எழுத வேண்டுவதில்லை.

இந்தப் பாடல்களில் இறைவன் தன்மையினைக் காட்டி, உலகில் வாழும் உயிர்களுக்கு—சிறப்பாக மக்களுக்கு, என்றென்றும் அன்பில் வாழ—அணைந்து வாழ—இன்பில் வாழ—இனிமையுற்று வாழ வழிகாட்டுவதை நாம் நினைக்க வேண்டும். 'எவ்வுயிரும் பராபரன் சன்னதியதாகும்' என்று மேலோர் காட்டிய உயரிய நிலையினை எண்ணின் யாருக்கு யார் வேறு பட முடியும்? பொறாமை ஏது? பொய்மை ஏது? கொலை—கொள்ளை —கொடுமை—பிற வன்செயல் யாவும் ஏது? மேலும் 'அணுவினைச் சதகூறிட்ட' நிலையினைக் காட்டி அணுவினைப் பிளக்க முடியாது என்று நேற்றுவரை நினைந்த ஒன்றினை அன்றே விளக்கி, அதை எத்தனை எத்தனை கூறாக வேண்டுமாயினும் பிரிக்கலாம் என விளக்கினார். மேலும் அக் கூறுபாடு மக்கள் வாழ்வில் நல்லதுக்குப் பயன்பட வேண்டும் என்பதையும் அல்லலுக்குப் பயன்படின் அழிவே என்றும் சொல்லாமல் சொல்லிவிட்டாரே! ஆம்! இந்த உண்மையினை அன்றைய இரணியனும் உணரவில்லை—இன்றைய இரணியரும் உணரவில்லை. அவன் அழிந்தான்—இவர்களும் அழியத்தான் போகிறார்கள். ஆனால் இவர்கள்

அழிவோடு உலகில் உயிரினமே அழிவுறுமோ என்று அஞ்சவேண்டியுள்ளது.

கம்பர் இவ்வாறு இரணியன் வாழ்வினை வீடணன் வாக்கால் இராவணன் முன்னிறுத்தி, என்றென்றும் வாழும் மக்கள் இனத்துக்கு நல்ல அறிவு காட்டி, நாடும் நானிலமும் சிறந்துவாழ வழி காட்டியுள்ளார். இந்த இருபாடல்களின் அடிகளையும் பிறபாடல்களையும் தனித் தனியாக எண்ணின் பலப் பல வாழ்வியல் கருத்துக் களைக் காணஇயலும். அவற்றைக் கண்டு மகிழுங்கள் என்ற வேண்கோடுளோடு நான் அமைகின்றேன்.

வால்மீகி காட்டாத இரணியனை இராவணனுக்குக் காட்டுவதன் மூலம் நமக்கு வழிகாட்டிய கம்பருக்கு இன்றைய 'உலகம்' தன் கொடுமைகளை விட்டு, இராவணத் தன்மையினை விட்டு—இரணியத் தன்மை யினைவிட்டு—'நாடெங்கும் வாழக் கேடொன்று மில்லை என்ற நல்ல உளத்தொடு நடந்து நன்றி காட்டக் கடமைப்பட்டுள்ளது. அத்தகைய அறநெறிக்கு உலகை ஆற்றுப்படுத்த முயல்வோமாக.

## 25. ஊழ்வினையும் ஆள்வினையும்

வள்ளுவர் வையம் வாழ. வழிவகுத்தவர். உலகி லுள்ள உயிரினங்கள் அனைத்தும் தம்முள் கலந்து வேறு பாடற்று ஒன்றிய வாழ்வில் திளைக்க வேண்டும் என்பதே அவருடைய ஆசை. அந்த அடிப்படையில் மறம் கடிந்து அறம் ஓம்பும் வாழ்வுக்கு உரிய ஆக்க நெறிகள் பலவற்றை வகுக்கின்றார் அவர். எடுத்துக்காட்ட விரும்பும்

ஒவ்வொரு பொருள் பற்றியும் திட்டவட்டமாக அறிவிக்க நினைக்கிறார். அறிவிக்கவும் செய்கிறார். எனினும் இரு பொருள்களின் திறனும் செம்மையும் உயர்வும் பயனும் விளக்க நேரிடும்போது அவர் நடுநிலை பிறழாது உள்ளதை எப்படியும் கூறிவிடுகின்றார். ஆழ்ந்து நோக்கின் அவரது தெளிந்த புலமை வழி உருவாகும் உண்மையின் செம்மை உலகுக்கு நன்கு புலனாகும். ஒவ்வொரு அதிகாரத்திலும் எடுத்துக்கொண்ட பொருளின் செம்மையினையோ அன்றிக் கொடுமை யினையோ அதன் எல்லையின் கோடியிலே நின்று காட்டும் வள்ளுவர், அப்பொருள்களை இணைத்துக்காட்டும்போது அவற்றுள் ஒன்றன் மேலாய்ப் பொருந்திய உயர்வினைக் காட்டத் தவறுவதில்லை. எடுத்துக்காட்டாக ஒன்றினைக் காண்போம்.

அறங்களைப் பல வகையில் வகுத்துக் காட்டும் வள்ளுவர் பொய்யாப்பெரு நெறியினையும் அறத்திற்குள் ளேயே அடக்குவர். உள்ளத்தால் பொய்யாது ஒழுகுவார் உயர்வைப் பலபடப் பாராட்டுகின்றார் வள்ளுவர். ஒருவன் பொய் சொல்லாதிருப்பானாயின், அவன் வேறு எந்த அறமும் செய்யா நிலையிலேயே உயர்வு பெறுவான் என வற்புறுத்திக் காட்டுவார் அவர்.

**''பொய்யாமை பொய்யாமை ஆற்றின் அறம்பிற**
**செய்யாமை செய்யாமை நன்று''**

என்ற குறளில், அதன் ஏற்றத்தை உச்சியில் வைத்துப் போற்றுகின்றார். பரிமேலழகரும் பிறரும் இக் குறளுக்குப் பலவகையில் உரைகள் கூறுவர். இத்தகைய உயரிய நிலையில் காட்டிய பொய்யாமையே உலக அறங்களி லெல்லாம் மேலானது என்றுதான் இந்த அதிகாரத்தோடு நிற்பார் நினைப்பர். ஆயினும் பிற அதிகாரங்களைப்

பயிலும்போது வள்ளுவர் ஏற்றம் இதனினும் மேம்பட்டு நிற்பதை உணரமுடியும். கொல்லாமை என்னும் அதிகாரத்தில் வள்ளுவருடைய உயரிய அறம் தெளிவாகக் காட்டப் பெறுகின்றது. கொல்லாமையே உயர்ந்த அறம் என்றும், முன் வேறு அறம் ஆற்ற வேண்டா நிலையில் போற்றப்பெற்ற பொய்யாமை அதற்கு இரண்டாவ தாகவே வைக்கப் பெற வேண்டியதென்றும் காட்டுவர் வள்ளுவர். இதனால் பொய்யாமையைத் தாழ்த்திய தாகாது. அதன் ஏற்றத்தின் சிறப்பையெல்லாம் திட்ட மாகக் காட்டிய பின்பே, அதனினும் மேம்பட்ட முதலாவ தாகிய கொல்லாமையைக் காட்டுகிறார் அவர். எனவே பொய்யாமை பிற அறங்களிலெல்லாம் மேம்பட்டது என்பதும் உண்மை! அதனினும் மேம்பட்ட ஒரே அறம் கொல்லாமை என்பதும் தெளிவு. இந்த வகையில்தான் வள்ளுவர் தாம் கொண்ட பொருளை விளக்கிச் செல்வர்.

**"ஒன்றாக நல்லது கொல்லாமை மற்றதன்**
**பின்சாரப் பொய்யாமை நன்று"**

என்பது அவர் வாக்கு.

இந்த அடிப்படை நெறியில் நின்று பார்த்தால் வள்ளுவர் ஊழ்வினையையா அன்றி ஆள் வினையையா - எதைச் சிறந்தது எனக் காட்டுகின்றார் என்பது நன்கு புலனாகும். வள்ளுவர் இரு வேறு வினைகளைப் பற்றியும் இரு வேறு அதிகாரங்களில் திட்டவட்டமாக விளக்கிக் காட்டுகின்றார். இரண்டும் ஒன்றை ஒன்று வெல்ல முடியா நிலையில் இருப்பது போன்று தோன்றினும், வள்ளுவர் தம் குறள் வழியே இரண்டில் எது சிறந்தது என்பதைத் தெள்ளத் தெளியக் காட்டிவிடுகிறார். இரண்டு அதிகாரங்களிலும் இருபது குறட்பாக்களிலும் இரு வேறு வினைகளைப்பற்றிக் காட்டினாலும் ஒவ்வொன்

றினும் ஒவ்வொரு குறட்பாவினை எடுத்துக்காணின் வள்ளுவர் உள்ளம் தெள்ளிதிற் புலனாகும்.

ஊழே அனைத்தினும் மேம்பட்டது என்பது உலகத்தார் கொள்கை. வள்ளுவர் அக் கொள்கையை மறுக்கவில்லை. அதனினும் பெரு வலிவுள்ளது வேறு இல்லை என அவரும் வற்புறுத்துகின்றார். ஆனால் அது ஆள்வினை உடைமையோடு போட்டியிட்டு வெல்லுமா? இக் கேள்விக்கு வள்ளுவர் அவருடைய இயல்பான தெள்ளிய நெறியிலேயே விடை தருகின்றார்.

வகுத்தான் வகுத்த வகையில் வாழவைக்கும் ஊழ்வினையைப்பற்றி வள்ளுவர் பத்துக் குறள் வெண்பாக்களால் நன்கு விளக்குகின்றார். அவற்றுள் இறுதிக் குறளில் 'ஊழிற் பெருவலியாவுள?' என்ற வினாவையும் எழுப்பி இல்லை என விடை தருமாறு முடிக்கின்றார். ஊழினும் வேறாய பல—ஆள்வினை உடைமை, ஊக்கமுடைமை போன்ற செயலாற்றும் திறன்கள்—வந்து சூழ்ந்தாலும் இவ்வூழே அவற்றின் முன்னிற்கும் என்று காட்டுகின்றார்.

''ஊழிற் பெருவலி யாவுள மற்றொன்று
சூழினும் தான்முந் துறும்''

என்பது அவர் வாக்கு.

இங்கே பிற செயல்களால் முன்னேறவோ வேறு வகையில் செயலாற்றவோ மனிதன் முயன்றாலும், அவற்றிற்கெல்லாம் முன்வந்து நின்றுஊழ் முட்டுக்கட்டை இடும் என்று தான் வள்ளுவர் கூறுகின்றார். இதனால் நாம் மற்றோர் உண்மையை உணர்ந்து கொள்கிறோம். மற்றொன்று சூழும் காலத்து இவ்வூழ் முன்னிற்குமே ஒழிய, அது வெல்லும் என்று வள்ளுவர் கூறவில்லை. 'முந்துறும்' என்பது அவர் வாக்கு. முன் வருவதெல்லாம்

வெல்லுவதாகுமோ? செயலாற்றும் வீரன் தன் ஆள்வினையின் திறத்தால் முன்னிற்பதைத் தள்ளிவிட்டு, மேலே முன்னேறிச் செல்ல முடியுமே! இதைத்தான் வள்ளுவர் ஆள்வினை உடைமையில் காட்டுகின்றார். மேற்கொள்ளும் வேறு முயற்சிகளைத் தடுக்கும் வகையில் ஊழ் முன்னிற்குமேயன்றி, அம்முயற்சி வலுவுடைத்தாகி ஊழை உடைப்பதாயின் தான் அதை வெல்வது கூடாது என்பதே வள்ளுவர் காட்ட நினைத்த உண்மை. மற்றவற்றைத் தடுக்கும் வகையில் ஊழ் முன்னிற்குமே ஒழிய அது வெற்றி பெறாது என்பது தெளிவு. இந்த உண்மையினையேதான் ஆள்வினை உடைமை என்னும் அதிகாரத்தில் தெள்ளத் தெளியக் காட்டிவிடுகின்றார் வள்ளுவர்.

ஊழினைப்பற்றிக் கூறும்போது 'தான் முந்துறும்' எனக் காட்டிய வள்ளுவர் ஆள்வினை உடைமையைக் கூறும்போது, அவ்வினையுடைமை 'ஊழையும் உப்பக்கங் காணும்' நிலையினைத் தெளிவாகக் காட்டிவிடுகின்றார். தெய்வத்தான் ஆகாதனவும் ஆள்வினையுடைமையால் ஆகும் எனக் காட்டிய வள்ளுவர் அங்கே ஊழ்வினை வந்தால் என்னாகும் என்ற வினாவினை எழுப்பி, அதற்குப் பதில் உரைப்பார் போன்று,

**"ஊழையும் உப்பக்கங் காண்பர் உலைவின்றித்**
**தாழா துஞற்று பவர்"**

என விளக்கங் காட்டுகின்றார்.

எனவே, வள்ளுவர் கருத்து ஊழ்வினையிலும் ஆள்வினை உடைமையே வலுவுடைத்தென்பதும், திண்ணிய ஆள்வினையால் செயலாற்றும் எவரும்

ஊழுக்கோ அதைச் செலுத்துவதாகக் கருதப் பெறும் தெய்வத்துக்கோ அஞ்சவேண்டுவதில்லை என்பதும், அவ்வாள்வினை உடையார்க்குத் தெய்வம் ஊழ்வினை நீக்கிச் செம்மை நலம் அருளும் என்பதுமே யாகும். இந்த அடிப்படையில் ஆள்வினை ஊழ்வினையை ஒட்ட வல்லது என்பதை உணர்ந்து, வள்ளுவர் குறளை வாழ்விடைக் கொள்ள விரும்பும் நாம் நம் செயலைச் செம்மையாகச் செய்து சிறப்புறுவோமாக!

ம.தி.தா.இந்துக் கல்லூரி
(திருநெல்வேலி) ஆண்டுமலர்—1970



# அ. மு. ப. அவர்களின் 90 நூல்களில்

## தற்போது கிடைப்பவை

| | |
|---|---|
| கொய்த மலர்கள் | 8 00 |
| தொழில் வளம் | 15 00 |
| எல்லோரும் வாழவேண்டும் | 7 00 |
| வெள்ளிவிழாச் சொற்பொழிவுகள் | 10 00 |
| மலைவாழ் மக்கள் மாண்பு | 16 00 |
| பல்கலைக்கழகச் சொற்பொழிவுகள் | 20 00 |
| வையைத் தமிழ் | 8 00 |
| கங்கை கரையில் காவிரித் தமிழ் | 10 00 |

## புதியவை

| | |
|---|---|
| ஏழு நாடுகளில் எழுபது நாட்கள் | 36 00 |
| திரும்பிப் பார்க்கிறேன் திகைத்து நிற்கிறேன் | 12 00 |
| வரலாற்றுக்குமுன் வடக்கும் தெற்கும் | 20 00 |
| தமிழர் வாழ்வு | 16 00 |
| ஓங்குக உலகம் | 16 00 |
| கவிதையும் வாழ்க்கையும் (மறுபதிப்பு) | 20 00 |
| வரலாற்று புதையல் | 4 00 |

## ஆங்கில நூல்கள்

| | |
|---|---|
| Ancient Temples of Tamil Nadu | 30 00 |
| Historical Studies of Thevara Hymns | 12 00 |